# பக்தி யோகம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

10.7.77

# பக்தி யோகம்

***

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

**ஸ்ரீ சுவாமி வேதானந்தா**




ஸ்ரீ சுவாமி சிதானந்த மஹராஜ் அவர்களின் 60-ம் ஆண்டு
நிறைவு விழா ஞாபகார்த்தமாக

வெளியிடுவோர் :

## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1976 [ ரூ. 4-00

# பொருளடக்கம்

# பக்தி யோகம்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும் | ரூபாய் |
|---|---|---|
| 1. | 'ஞானதான வள்ளல்' திரு. S. கோவிந்தசாமி முதலியார் திருமதி. தனலக்ஷ்மி அம்மாள், ஈரோடு. | 100 |
| 2. | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம், தலைவர், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் Prop: ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ், இராசிபுரம். | 100 |
| 3. | திரு. P. கணபதி கவுண்டர் அரியாகவுண்டம்பட்டி. சேலம் ஜில்லா. | 50 |
| 4. | திருமதி. தொட்டக்காள் மாரி செட்டியார் இராசிபுரம். | 50 |
| 5. | திருமதி. R. இராஜலக்ஷ்மி அம்மாள், கோவை-1. | 50 |
| 6. | திரு. L. K. S. பழனிசாமி செட்டியார், கொமாரபாளையம், ஈரோடு. | 50 |
| 7. | திரு. M. A. பக்கிரிசாமி, Asst. Engineer Highways. பட்டுக்கோட்டை. | 50 |
| 8. | திரு. S. கருப்புசாமி, Philips Light Dealer, செவ்வாய்ப்பேட்டை, சேலம்-2. | 50 |
| 9. | திருமதி. T. K. பாப்பம்மாள், திருநெல்வேலி-6. | 50 |
| 10. | திரு. M. பரிமள கண்டர், மிராஸ்தார், நஞ்சை இடையார், வேலூர். சேலம் Dt. | 50 |
| 11. | ஸ்ரீ சுவாமி சொரூபானந்தா, சிவானந்தா சாந்திவனம், ஜகதலா, நீலகிரி Dt. | 50 |
| 12. | திரு. A. S. தனுஷ்கோடி, Prop: நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ, தேனி, மதுரை Dt. | 150 |
| 13. | திரு. S. இராமசாமி, ஜெனரல் மேனேஜர், Chemicals & Plastics India Ltd., சென்னை-2. | 100 |

14. திரு. A. ஆழ்வார் ராமாநுஜம்,
Deputy Inspector of Schools, சேலம். 50

15. புலவர் திரு. க. வே. இராமநாதன் B. A.
திருமதி. சரஸ்வதி இராமநாதன், M. A.
பள்ளத்தூர். இராமநாதபுரம் ஜில்லா. 100

16. திரு. P. V. ராமதாஸ், பாண்டிச்சேரி. 125

17. செல்வி G. R. மீனுட்சி, B. Sc., B. Ed.,
பெங்களூர். 50

18. திரு. N. P. S. S. நடராஜ நாடார்,
பேங்கர், சிவகாசி. 50

19. திரு. M. A. M. முத்துராமன் செட்டியார்,
பேங்கர், ராயவரம். புதுக்கோட்டை Dt. 50

20. அமரர் ஆசிரியர் திரு. S. R. செல்லமுத்து
தர்மபத்தினியார்
திருமதி. ருக்மணி அம்மாள், இராசிபுரம். 50

21. ஸ்ரீ ஆண்டாள் & கோ.,
கொமாரபாளையம், ஈரோடு. 50

22. திரு. C. பரமசிவம், Prop: செந்தில் டிரேடிங்
கார்பொரேஷன், இராசிபுரம். 50

23. செல்வன் V. நடராஜன் &
செல்வன் R. மதுசூதனன், இராசிபுரம். 50

24. திரு. P. சீனிவாசன்,
திலக் நகர், பம்பாய்–89. 50

25. Sri. A. V. Sakaram Rao, Bombay-22. 125

26. திரு. V. இராஜமாணிக்கம், B. E.,
Asst. Engineer, Highways,
பொள்ளாச்சி. கோவை Dt. 100

27. Sri. Padma Rao, M. A , Madras. 101

28. திரு. T. P. செல்லையா,
சிவசண்முக விலாஸ், இராசிபுரம். 50

29. ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தா,
சிவானந்தா ஆஸ்ரமம், ரிஷிகேஷ். 50

30. திருமதி அம்புஜம் நாகசுந்தரம்,
இராசிபுரம் &
திருமதி லக்ஷ்மி ராஜகோபால்,
கோயமுத்தூர். 50

31. ஸ்ரீமதி லக்ஷ்மி வெங்கடேஸ்வரன்,
சிவானந்தா ஆஸ்ரமம், ரிஷிகேஷ். 50

32. திரு. M. S. K. அப்பாவு செட்டியார் கம்பெனி,
கைத்தறி ஜவுளி வியாபாரம், இராசிபுரம். 100

33. நாகரத்தினம் டாக்டர் பாலசுப்ரமணியம்
செட்டியார், சென்னை–2. 50

34. திரு. K. K. வேணுகோபால்,
93, வேளாளர் வீதி, ஈரோடு-3. 100

35. திரு. L. தர்மராசன், ஆசிரியர்,
அரசினர் உயர்நிலைப்பள்ளி, தம்மம்பட்டி. 50

36. திரு. R. விஸ்வநாதன், சேலம் எலெக்டிரிகல்
ஏஜன்சீஸ், சேலம்–2. 50

37. Sri A. Sundaram,
American Express, New Delhi. 100

38. திரு. S. பழனிசாமி முதலியார்,
பார்க் ரோடு, சென்னிமலை, ஈரோடு. 50

39. திரு. A. K. ஜெயராவ்,
செவ்வாய்ப்பேட்டை, சேலம்-2. 50

40. "N. B. S." நாமக்கல். 50

41. திரு. M. பாலசுப்ரமண்யம்,
Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். 50

42. திரு. P. M. மாரிமுத்து முதலியார்,
நூல் & கைத்தறி ஜவுளி வியாபாரம்,
துறையூர். 50

43. வித்துவான் திரு. R. அரங்கமன்னர், M. A.
அரசினர் கலைக் கல்லூரி, இராசிபுரம். 50

44. டாக்டர் திரு. S. கண்ணன், M. B., B. S.
இராசிபுரம். 50

45. திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A., B. L.
நாமக்கல். 50

46. திருமதி. கனகம்மாள் வரதராஜ செட்டியார்,
இராசிபுரம். 50

47. திருமதி. பாவாயம்மாள்–பழனியப்ப செட்டியார்,
இராசிபுரம். 50

48. திரு. R. சீனிவாச ராகவன், B. A., B. T.
Melt Chief Officer, சேலம். 50

49. திரு M. A. கோபாலகிருஷ்ணன்,
Asst. Engineer, Highways, கோயமுத்தூர். 50

50. திரு. S. K. அரியப்ப செட்டியார்,
பர்மாஷெல் ஏஜண்ட், இராசிபுரம். 100

51. திருமதி. சண்பகவள்ளி
செல்லப்ப முதலியார், இராசிபுரம். 50

52. திரு. அழ. சுந்தரேசன், B. A., B. T.
அரசினர் உயர்நிலைப்பள்ளி,
கருங்காலக்குடி, மதுரை ஜில்லா, 50

53. செல்வி. P. T. தேவகி, தலைமை ஆசிரியை,
T. V. S. நடுநிலைப்பள்ளி, இராசிபும். 51

54. ஆண்டவர் & Co., இராசிபுரம். 50

55. திரு. S. சிங்காரம், தலைமை ஆசிரியர்,
A. V. M. நடுநிலைப்பள்ளி, இராசிபுரம். 50

56. திரு. K. V. மூர்த்தி நாராயண செட்டியார்,
பேங்கர், பாப்பாரப்பட்டி. தர்மபுரி ஜில்லா, 50

57. திரு. P. K. N. ஒபுளிசாமி செட்டியார்,
கைத்தறி ஜவுளி வியாபாரம்,
குகை, சேலம். 250

58. திரு. S. மல்லிச் செட்டியார்,
உபதலைவர் ஸ்ரீ ராமகிருஷ்ண
விவேகானந்தா தவ இல்லம், வனவாசி. 100

59. திரு. K. ஹரிஹரராமன், B. A., B. Com.
ஆடிட்டர், ஈரோடு. 50

# பக்தி யோகம்

## பக்தி தத்துவம்

பக்தி என்பது பிரேமை அல்லது சுயநலமற்ற அன்பு. இதுதான் அந்த வார்த்தையின் நேர் பொருள். 'பஜ்' என்ற அடிப்படைச் சொல்லினின்று பக்தி என்ற பதம் உண்டாகிறது. 'பஜ்' என்ற சொல் லுக்குப் பணிவிடை செய்ய அல்லது ஆழ்ந்து பற்று கொள்ள என்று பொருள். 'பஜ் ஸேவயம்' என்பது ஸம்ஸ்கிருத அடிப்படைச் சொல். எனவே பக்தி என்பது இறைவனிடத்து வைக்கப்படும் பேரிணக்கம் அல்லது இறைவனிடத்திலும் இறைவனைச் சேர்ந்த பொருள்களிடத்தும் எல்லா உயிர்களுக்கும் செலுத்தும் ஆழ்ந்த அபிமானமாகும்.

வெளிப்புறத்துப் பொருளை நேசிப்பதுதான் உயிர் களின் இயற்கைக் குணம். நேசிக்காமலோ அல்லது ஹிருதயத்தில் எதையோ இருத்திக் கொள்ளாமலோ நம்மால் இருக்க இயலாது. ஏனெனில், உண்மை பார்க்குமிடத்து இறைவன் மாத்திரம் இருக்கிறவர் ஆவார். இறைவனிடத்திலிருந்து மேற்பார்வைக்கு நான் எனும் அகங்காரத்துடன் பிரிந்தவன் மனிதன். வெளிப்பொருள்கள்மீது உண்டாகும் நேசம் என்பது அந்தராத்மாவிலிருந்து நம்மை அறியாமலே ஏற்படுகிற ஓர் கிளர்ச்சியாகும். இக்கிளர்ச்சி ஒவ்வொன்றோடும் ஐக்கியப்படும் தன்மை உடையது. ஏனெனில் உண் மையிலே மனிதன் பூரணனே, பரமனேதான். அவன் ஒவ்வொன்றையும் விரும்புகிறான். பக்தி என்பது அனுபவத்தின் முன்னோடி ஆகும். பக்தி என்பது

கிளர்ச்சி. அனுபவம் என்பது அந்த கிளர்ச்சியின் சித்தியாகும். ஏதேனும் ஒன்றை விரும்பாமல் எவராலும் வசிக்க இயலாது. "வெளிப்புறத்துச் செயலாற்றலோடு ஆண்டவன் புலன்களை உருவாக்கியுள்ளான்." இந்த நியதி இங்குள்ள யாவர்க்குமே பொருந்தும். மனமானது முக்கிய உணர்வுப்புலன் ஆகும். ஏனெனில் புலன்களாகிய நீர்க்கால்களின் வழியாக உணருகிறது மனமேயாகும். மனம் வேலை செய்யாத போது புலன்கள் வேலை செய்யா.

ஆனால், மனத்தை வெளிப்புறத்திலே எல்லாத் திசைகளிலும் ஓடவிடுவது நம்மீதுள்ள குற்றமாகும். பிரபஞ்சத்தில் காணப்படுவதும் கேட்கப்படுவதுமான எண்ணற்ற பொருள்களிலே மனத்தின் சிதறுண்ட கிரணங்கள் கவர்ச்சி கொள்ளுகின்றன. ஒரே இடத்தில் எப்போதும் ஏகாக்ரப்பட்ட மனமானது அமானுஷமான சக்தியுடன் பொருள்களை ஆக்கவும் அழிக்கவும் கூடுமென்ற முடிவுக்கு யோகிகள் வந்துள்ளார்கள்.

பூதக்கண்ணுடியின் மூலம் கிரணகேந்திரமாக்கப்பட்டு அக்கண்ணுடியின் வழியாகச் செல்லுகின்ற சூரியனுடைய ஒருமுகப்பட்ட கிரணமானது பொருள்களை எரிக்கிறது. இங்குமங்குமாய்ச் சிதறுண்டு கிடக்கும் கிரணங்களால் அப்படிச் செய்ய இயலாது. இதுவோ அதுவோ எதுவாயினும் சரி ஒரு பொருளின் மீது மனம் ஒருமுகப்படுத்தியாக வேண்டும். மனம் ஒன்றிலிருந்து மற்றென்றுக்குத் தாவக்கூடாது. சம்ஸாரத்தின் போக்கு இதுவே ஏகாக்ரப்படுத்துவதன் மூலம் மனத்தைக் கட்டுப்படுத்தலாம். இதனுல் சம்ஸாரப் போக்கு நிறுத்தப்படவேண்டும். வெளியில் ஒரு குறி மீதோ (பக்தி மார்க்கம்) அல்லது முழு

சிருஷ்டி மீதோ (ஞான மார்க்கம்) ஏகாக்ரம் செய்யலாம். பண்பாட்டுருவத்திற்கு சாவு என்பது எண்ணத்தை ஒழித்துக்கட்டுதலே ஆகும். இது பூரணத்துவத்தின் அனுபவம். ஆனால், மனிதன் எப்பொருள் மீதும் தன் மனத்தை ஒருமுகப்படுத்தக்கூடும். அவன் வழக்கமாய்ச் செய்வது போலத் தன் மனைவி மக்கள் மீது மனத்தை ஒருமுகப்படுத்தக்கூடும். ஆனால், இங்கு குறிக்கப்படும் அன்பு அல்லது ஏகாக்ரம் இது அல்ல. உலகப் பொருள்கள்மீது அன்பு வைத்தல் அல்லது அவற்றின்மீது மனத்தை ஏகாக்ரப்படுத்தல் என்பது ஜீவனை அநேக ஜனன மரணச் சுழல்களில் தூக்கி வீசும் சங்கிலிப் பிணைப்பாகும். கடவுளிடத்தில் வைக்கும் அன்பு, கடவுள்மீது செய்யும் தியானம்—இதனையே நாம் இங்கு குறிக்கிறோம். சுயநலமற்ற அன்பு என்பது இறுதிக்காலத்தில் முக்திக்கு ஏற்றிச் செல்லும் ஏணி ஆகும்.

பரிபூரண சாக்ஷாத்காரத்திற்குப் பொதுவாக உணர்ச்சிகள் ஓர்வித இடைஞ்சலாகக் கருதப்பட்டு வருகின்றன. ஆனால் ஒருசில உணர்ச்சிகள் மாத்திரமே பிணைக்கிற தன்மையுடையனவாயுள்ளன. இதர உணர்ச்சிகள் ஜீவனை பந்தத்தினின்று விடுவிக்கும். கடவுளைப் பற்றிய கோட்பாடு எவ்விதமான பிணைக்கும் உணர்ச்சியையும் மனிதனிடத்தில் கிளப்புகிறதில்லை. அது தூய உணர்வு. அதில் சிற்றின்ப இச்சையோ பற்றோ கிடையாது. ஒருவன் கடவுள்மீது உலகாயத அன்பை வளர்க்க இயலாது. கடவுளைப் பற்றிய கோட்பாடும் கடவுளிடத்துச் செலுத்தும் பக்தியும் மிகுந்த தூய்மை வாய்ந்த உணர்ச்சிகளைக் கிளப்புகின்றன. இரவும் பகலும் மனிதனை அடக்கியாளுகின்ற தீய உணர்ச்சிகளைக் காட்டிலும் இக்கடவுள் கோட்பாடு எவ்வளவோ சிறந்தது. எல்லா உணர்ச்சி

களையும் சாந்தப்படுத்த முடியாதவர்கள் குறைந்த பக்ஷம் தூய உணர்ச்சிகளையாவது கொள்ளல்வேண்டும். பக்தி மார்க்கத்தில் உள்ள தெய்வீக உணர்ச்சியின் முக்கியத்துவம் இதுவே ஆகும். மனைவி, குழந்தைகள், சொத்துக்கள்மீது செலுத்தப்படும் அன்பின் தரமல்ல கடவுள்மீது செலுத்தப்படும் அன்பு. இரண்டுக்கும் அதிகமான வித்தியாசம் உண்டு. மகனைப் போல, மணவாளனைப்போல, பிதாவைப்போல, நண்பனைப்போல என்றெல்லாம் உலகாயதப் பூச்சு சில பக்தர்களால் கொடுக்கப்படுகிறது கடவுள்மீது செலுத்தும் அன்புக்கு எல்லாவிதமான உலகத் தொடர்புகளையும் ஒரேயடியில் அறுத்தெறிவதில் கஷ்டப்படுகிற சில பக்தர்கள்தான் இப்படிச் சொல்லுகிறார்கள்.

அப்படியானால், கடவுள்மீது வைக்கப்படும் அன்பு நம்மை ஸம்ஸாரத்தினின்று விடுவித்து எப்படி நமக்கு முக்தி அளிக்கும்? மனிதன் அகங்கார வடிவினன். அவனுடைய ஒரே எதிரி அகங்காரம்தான். தான் உலகிலுள்ள இதர பொருள்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்டவனென்று அவன் உணருகிறான். தனது ஸ்தூல உடம்பினாலே பிரபஞ்சத்திலிருந்து தான் நுணுக்கமாய்க் குறிக்கப்பட்டவனென்று அவன் உய்த்துணருகிறான். தான் உடல் அல்ல என்று மறுக்க முயன்றாலும்கூட, தான் உடலேதான் என்ற நிச்சய புத்தி உடையவனாயிருக்கிறான். "நான்" என்று கூறுகிறபோது அவன் தன் மார்பைச் சுட்டிக்காட்டுகிறான்—அப்பாலுள்ள மரத்தையல்ல.

"நான் பிரஹ்மன்" என்று சாதிக்கிறபோது, தங்கள் உடம்புதான் பிரஹ்மன் என்று பொருள்படுத்துகிறார்கள் சில துரதிர்ஷ்ட வேதாந்திகள்—அவ்வாறே

உணருகிருர்கள். உடல் கோட்பாட்டினின்று "நான்" என்பதைப் பிரிப்பது மிகவும் கஷ்டம். "நான் ராமகிருஷ்ணன்" என்று ஒருவன் சொல்லுகிறபோது, தன் உடல்தான் ராமகிருஷ்ணன் என்று அவன் பொருள் படுத்துகிருன். உடலே உண்மையான ஆத்மா என்ற இக்கோட்பாட்டை யாராலும் தள்ளிவிட முடியாது. எல்லா யோகங்களின் இலட்சியம் இந்த அகங்கார உணர்வை வேரறுப்பதுவே ஆகும். இந்த பிரிவு அல்லது அகங்கார உணர்வைக்கொல்லுவதற்கு ஏற்ற தோர் வழியே பக்தியோகம் ஆகும். பக்தியோக மானது உள்ளத்தின் மாறுபாடுகளை முறியடித்து அதிலே சர்வ வியாபகமான உணர்வைப் புகுத்தி நிரப்புகிறது.

"ஓ, கடவுளே! நான் தங்களுடையவன். எல்லாம் தங்களுடையது. நான் தனித்ததோர் பிரகிருதி அல்ல. எனக்கு எதுவும் செய்யச்சக்தி கிடையாது. என்னை ஓர் கருவியாகக் கொண்டு, ஒவ்வொன்றையும் தாங்களே செய்கிறீர்கள் கடவுளே! தாங்கள் எங்கும் நிறைந்திருக்கிறீர்கள். அசையக்கூட என்ருல் முடியாது; ஏனெனில் தாங்கள் எங்கும் இருக்கிறீர்கள். நான் தங்கள் உடம்பின்மேல் நடந்து செல்லுகிறேன். நான் தனியே உயிர்வாழ முடியாது; ஏனெனில் தங்களை நான் எங்கும் தரிசிக்கிறேன். மனிதனுகவும், மாதாவாகவும், சாலையில் தடிகொண்டு தள்ளாடும் வயோதிகனுகவும் தாங்கள் காட்சியளிக்கிறீர்கள். எல்லாம் தாங்களாகவே ஆகிவிட்டீர்கள். எனக்குச் சுதந்திரம் எதுவும் கிடையாது நான் தங்கள் அடிமை. அடிமைக்குச் சுயேச்சையான கருத்துக்கள் ஏது? யஜமானர் உத்தரவுப்படியேதான் அவன் செய்ய முடியும். எதுவும் நான் செய்கிறதில்லை. என் மூலமாகத் தாங்கள்தான் செய்கிறீர்கள். தாங்களே

கர்த்தா. தாங்களே போக்தா (அனுபவிக்கிறவன்) நான் ஒன்றுமில்லை. தங்கள் இஷ்டப்படியே யாவும் நடக்கும்'' என்று பக்தன் ஒருவன் சாற்றுகிறான்.

பக்தியிலே மிகவும் உயர்ந்த வகை இதுவே. இது தான் தெய்வீக பக்தி என்பது. அகங்காரம் தானாக எதையும் நிச்சயிக்க இயலாது; ஏனெனில் இறைவன் எங்கும் நிறைந்துள்ளார். ஐம்பொறிகள் ஈடுபடுகிற வ்ருத்திகளாக மனமானது தன்னை மாற்றி அமைத்துக் கொள்ள இயலாது. அவனுக்குக் கடவுளைத்தவிர வேறு பொருள் இல்லை. யாரை விரும்புவது யாரை வெறுப்பது? ஆகையால், பக்தன் எக்காலத்தும் ஆனந்தமயமாகவே இருக்கிறான். எல்லாம் இறைவன் மயமாகவே நிறைந்திருப்பதால் மனம் இறைவனைத் தவிர வேறெதையும் சிந்திப்பதற்கில்லை. ''யத்ர யத்ர மனோயாதி தத்ர தத்ர ஸமாதியா'' எங்கு மனம் செல்லுகிறதோ அங்கு அது சமாதி நிலை எய்துகிறது; ஏனெனில் அது புலன் நுகர்வுப் பொருளைக் கண்டுபிடிக்கவில்லை. வெட்டவெளியில் ஒவ்வொரு அணுவிலும் ஆண்டவன் வியாபித்துள்ளான். சர்வேஸ்வரரின் மகிமை அகிலாண்டம் முழுவதையும் போர்த்துக் கொண்டிருக்கிறது. பாபியும் மகானும், நல்லவனும் கெட்டவனும், தூயவனும் தீயவனும், மனிதனும் மிருகமும்—எல்லாம் இறைவனுடைய சொரூபங்கள். தெய்வீகப் பண்பு அல்லாத வகையில் மனமானது இவர்களுடன் எப்படி நடந்து கொள்ளும்? அங்கே மனம் ஸமாதி நிலையை அனுபவிக்கிறது மனத்திற்கு உணர்வு உண்டு. ஆனால் அதற்குப் பொருள் கிடையாது. இதுதான் சமாதி—சமாதி என்பது எண்ணங்கள் இல்லாத உணர்வு; பொருள்கள் இல்லாத அறிவு; இது பராபக்தி. வேதாந்த சாக்ஷாத்காரமும் பராபக்தியும் ஒரே ஒரு பொருளுக்

குள்ள இரண்டு பெயர்கள். இந்த இரண்டிற்கும் உள்ள பலன் அகங்காரத்தை நீக்குவதும் மனத்தை அழிப்பதுமாகும். புலனுணர்வுப் பொருள் எதுவும் இல்லாமல் மனம் உயிர் வாழாது. மகாசக்தி வாய்ந்தவரும், மகா ஞானம் பொருந்தியவரும், மிக்க ஆனந்தம் நிறைந்தவருமான பரம்பொருள் பூமியையும் வாயு மண்டலத்தையும் வியாபித்துள்ளார். மண்ணும் விண்ணும் அவரேதான். அவர் அப்பாவும் அம்மாவும் சகோதரனும் சகோதரியுமாய் விளங்குகிறார். அன்பும் ஆதரவும் அதிகார நாட்டமும் ஆசையும் ஆகிய எல்லாவற்றிற்கும் பூரணமானவர் கடவுள் ஆவார். மனோ வ்ருத்திகளை நிறுத்தவல்லவர் அவரே. நாம் அடையவேண்டிய இலட்சியம் அவரே ஆவார்.

போக்த்ருவ உணர்வு இறந்துபடுகிறது — இறைவனுடைய சான்னித்தியம் எங்கும் நிறைந்திருப்பதை உணருகிறபோது, புலன் நுகர்வுப் பொருள்கள் தெய்வீக மகிமையாக மாற்றி அமைக்கப்படுகின்றன. மனைவி காமப்பொருள் அல்ல; பணம் இச்சிக்கத்தக்கதோர் வஸ்து அல்ல. எல்லாம் கடவுள்; கடவுள் அல்லாதது ஏதும் இல்லை. எல்லாம் வணங்கத் தக்கவை. "கழுதை, நாய், சண்டாளன் — வணங்கத் தக்கவை; ஏனெனில் எல்லாம் கடவுள்" என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவரிடம் உபதேசித்தார். "சர்வம் கல்பிதம் பிரஹ்மா" என்ற அறவுரைக்கு இது சமமானது. இதில் பேதம் இல்லை.

ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய ராஸ லீலையிலே இருதரப்பான சமாதி நிலைகள் சித்தரிக்கப்படுகின்றன. முதன் முதலில் எல்லாம் ஸ்ரீ கிருஷ்ண மயமே என்று கோபிகள் காண்கிறார்கள். சவிகல்ப சமாதிக்கு இது பொருத்தமானது. அப்பால் அவர்கள் தாங்களும்கூட

கிருஷ்ணனே என்று உணருகிருர்கள். இதற்குப் பொருத்தமானது நிர்விகல்ப சமாதி. இந்த நிர்விகல்ப சமாதியில் அகங்கார உணர்வு அற்று விடுகிறது. பக்தர்களுக்கு விவிலிய நூல் என்பது ஸ்ரீமத் பாகவதமே ஆகும். ராஸ வகைகளும் பக்தியை விருத்தி செய்யும் மார்க்கங்களும் அது சித்தரிக்கின்றது.

"மனத்தைக் கட்டுப்படுத்துக; அகங்காரத்தை அழித்துவிடு" எல்லா யோகங்களின் ஸாரம் இதுவே ஆகும். யோகத்திற்கு எத்தகைய பெயர் கொடுக்கப் பட்ட போதிலும், அதில் எத்தகைய வழிமுறைகள் வகுக்கப்பட்டிருந்தாலும், அடைய வேண்டிய இலட்சியம் ஒன்றுதான்—மனத்தையும் அகங்காரத்தையும் அழித்துவிடுதலே. பக்தி யோகத்தின் இலட்சியம் இதுவே. பக்தியின் முன்னேற்றத்திற்கு இதுதான் இனிய இலகுவான மார்க்கம் ஒருவன் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை—காடுகளுக்கு ஓடிப்போக வேண்டியதில்லை. அவன் தன் உணர்ச்சிகளைக் கடவுளிடத்தில் செலுத்த வேண்டும். கடவுள் எங்கும் நிறைந்துள்ளான் என்ற நோக்குடன் உலகத்தில் நடமாடவேண்டும். பக்தி சாதனத்தின் ஸாரம் இதுவே. எனவே, பக்தி என்பது ஆத்மாவின் மீது செலுத்தப்படும் அன்பின் பிரதிபிம்பமே ஆகும். இக் கருத்தை உபநிடதங்கள் முழங்குகின்றன. பெயர்கள் தான் மாறுபடுகின்றன. ஆத்மா என்கிருன் ஒருவன், மற்றவன் அதை கடவுள் என்ருன். பெயர்கள் பொருட்படுத்தப்பட வேண்டியதில்லை. உணர்ச்சி தான் பிரதானம். அது ஒரே விதமானது.

சுயச்சரணுகதியே பக்தியின் மிக மிக மேலான அம்சம். சுயச்சரணுகதி என்பது அகங்காரம் அல்லது பண்பாட்டுருவத்தினைச் சரண்புகுத்தலே ஆகும்.

மிஞ்சியிருப்பது வேதாந்திகள் கூறுகிற பரம்பொருளே ஆகும். பக்தன் அகங்காரத்தைச் சரண் புகுத்த, வேதாந்தி ஒருவன் அகங்காரத்தைத் துகள்படுத்தித் துவம்சம் செய்கிறன். எப்படியேனும் இருபேரிடத்திலும் அகங்காரம் இல்லாமல் போய்விடுகிறது. அவர்களுடைய இலட்சியம் ஒன்றேதான். ஒருவன் அரிசியையோ கோதுமையையோ தின்ருனுல், தின்கிற அம்சம் ஒன்றேயாகும். இரண்டின் உத்தேசம் பசியைத் தணித்தலே ஆகும். இரண்டிற்கும் இடையே சச்சரவு கிடையாது. பக்தியையோ வேதாந்தத்தையோ நீங்கள் பின்பற்றிஞல், அதன் பலன் அகங்கார அழிவு ஒன்றே. இதுவே உண்மை.

பக்தர்களில் இரண்டு வகையினர் உண்டு. தன்னைத் தவிர எல்லாம் இறைவன் மயமென்று கீழ்த்தர பக்தன் உணருகிறன். இப்பக்தன், தான் மாத்திரம் கடவுள் அல்லவென்றும், இதர எல்லாம் இறைவன் சொரூபமென்றுன் எண்ணுகிறன். இது கீழ்த்தர பக்தி. இறுதியில் பெறுகிற அனுபவத்தை அகங்கார சான்னித்தியமானது சிக்குப்படுத்துகிறது. மேல்நிலையிலுள்ள பக்தன் தான்கூட இறைவனில் ஐக்கியப் பட்டவனென்றும், தனக்குத் தனித்ததோர் உறைவிடம் கிடையாதென்றும் உணருகிறன். அவனுடைய அகங்காரம் பூராவும் வேரறுக்கப்படுகிறது. பராபக்தி அல்லது வேதாந்தத்தை உணருதல் இதுவே. அங்கே, இவனுடைய உணர்ச்சிகள் நின்று விடுகின்றன. இவன் அலைகள் இல்லாத அமைதியான கடல்போன்று காட்சியளிக்கிறன். மனம் சாந்தி பெறுகிறது; அது அகண்டாகாரப் பேருண்மையில் ஐக்கியப்படுகிறது. கௌரங்க மகாப்பிரபு, பிருந்தாவனக் கோபிகள் ஆகிய மேலான பக்தர்கள் அனுபவித்த பக்தியின் உச்சஸ்தானம் இதுவே.

கடவுளிடம் செலுத்தும் பக்தி சுயநலமற்றிருத்தல் வேண்டும். கடவுள் பக்தியின் பின்னால் லோகாயதக் கோட்பாடு இருக்கக் கூடாது. அப்படியிருந்தால், அது சித்தப்பிரமையின் திருத்தமாய் மாறிவிடும் அர்த்தோ, ஜிஞ்ஞாஸு, அர்த்தார்த்தோ ஆகியோர் சுயநலமுள்ள பக்தர்கள். பக்தியின் மிக மேலான பலனை அவர்களால் அடையமுடியாது. லௌகீகத் தன்மையினால் அவர்கள் மயக்கமடைகிறார்கள். ஞானி மாத்திரமே உண்மையான சுயநலமற்ற பக்தன் — உணர்ச்சியற்ற சாந்தியின் கம்பீரத்திலேயும் மஹாத்துவத்திலேயும் மூழ்கிக்கிடக்கிறான். எவன் ஒருவன் இறைவனிடமிருந்து எதையும் விரும்பவில்லையோ அவனே மிக மிக மேலான பக்தன் ஆகிறான். அவன் வெறுமனே இறைவனை விரும்புகிறான். "இறைவா! தங்களை நான் விரும்புகிறேன். வேறெதையும் நான் விரும்பவில்லை. ஒவ்வொன்றின் மூலமும் வேறுமாய் விளங்கும் தங்களைப் பெற்றானபிறகு, நான் பெற வேண்டியது வேறு என்னதான் இருக்கிறது?" என்று கூறுகிறான். கோதுமை கிடைத்தபின், ரொட்டி, பரோட்டா, ஹல்வா மற்றும் அதன் மாற்றங்கள் யாவும் கிடைத்துவிடுகின்றன. இறைவனைப் பெற்றுவிட்டால், இதர எல்லாவற்றையும் நாம் பெற்றவர்களாகி விடுகிறோம். ஈஸ்வர உணர்வினிலே பக்தன் அமிழ்ந்து காணமற்போகின்றான். பேரின்பக் கடலில் மூழ்கிவிடுகிறான். தேவாமிர்தக் கடலிலே அவன் ஸ்நானம் செய்தாகிவிட்டது. சிரஞ்சீவித்துவத்தின் ஸாரத்தை அவன் நிரம்பவும் பருகிவிட்டான். ஆப்தகாமன் ஆகிறான் — ஏனெனில் அவன் இறைவனைப் பெற்றுவிட்டான்.

மிகவும் உயர்தரமான பக்தர்களின் வரலாறுகள் கொண்ட நூல் ஸ்ரீமத் பாகவதம் ஆகும். துறவு, பக்தி,

ஞானம் ஆகிய மஹத்தான தத்துவங்களைக் களங்க மற்ற பரிபூர்ண நிலையிலே அடக்கிக் கொண்டிருக்கின்றது. ஒரு புராணம் எதைப் போன்றிருக்குமென்று கருதப்படுவதற்கும் மேலாக இப்புராணம் ஹிந்துக் களின் பக்தி நூலாகிய பாலாடையாக அமைந்திருக்கிறது. ஈஸ்வர பக்தர்களின் செல்வம் இது. தெய்வீக ஞானம்படைத்த நூல்இது. செயலின்மையின் செந்நெறியை இது விளக்குகிறது. ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் (கௌரங்க மஹான்) இதை இந்திய ஆத்மீக பொக்கிஷங்களில் மகா விசேஷமான நூலெனக் கருதியுள்ளாரென்று கூறப்படுகிறது. காம அர்த்தமாகியவற்றிற்குச் சாதனமாக அமையாது நேராக மோக்ஷத்திற்குச் சாதனமாயமைகிற தூய ஆத்மீய தர்மத்திற்குப் பெரும் பிரமாணமாகஇது விளங்குகிறது. இதனுடைய குறைகளைக் கண்டு பிடிப்பதில் தீவிரம் காட்டுபவர்களுக்கும்கூட இந்நூல் ஓர் வசீகரணம் அளிக்கிறது. பக்தி, வைராக்கியம், ஞானம் ஆகியவற்றின் சிறந்த விளக்கங்கள் இந்நூல் முழுதிலும் ததும்பி நிற்கின்றன. ரிஷப தேவர், ஜடபரதர், அவந்தி பிராம்மணர் ஆகியோரின் துறவும் ஞானமும் கொண்ட கோட்பாடு, துருவர், பிரகலாதர், அம்பரீஷர் ஆகியோரின் பக்தி, கபிலர், நாரத முனிவரின் ஞானம் மற்றும் எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்ரீ கிருஷ்ணபகவானின் சிரஞ்சீவித்துவ வாழ்க்கை, அவருடைய பக்திக்குரிய சிஷ்யர் உத்தவருக்கு உபதேசித்துள்ள பொன்மொழிகள் – இவை யாவும் ஸ்ரீமத் பாகவத நூலுக்கு மூலமாயமைந்துள்ளன.

பக்தியைக் குற்றம் கண்டுபிடித்துப் பொய்யாக்குவதில் பெரும் தவறு உண்டு; ஏனெனில் ஒவ்வொரு மதமும் தெய்வ பக்தியும் வணக்கமும் இறைவனோடு ஐக்கியமாகும் அருள் தாகமும் சுட்டிக் காட்டுகின்றன.

நித்தியானந்தப் பெருநிலையின் உயரிய கோட்பாடு என்பது வெறும் சாஷ்டாங்க நமஸ்காரமும் சேவையும் அல்ல; ஆனால் நித்தியப் பொருளோடு ஐக்கியமாகும் பேரவா. மோட்ச சாதனத்திற்கு உண்மையான பக்தியை வலியுறுத்தும்போது, மனித சமுதாயத்தை நேசிப்பதையும் சமுதாயத்திற்குச் சேவை செய்வதையும் ஒருங்கே புறக்கணிப்பதென்று அர்த்தமல்ல. ஏனெனில் யாவும் இறைவன்மயம்; சமுதாயத்திற்கு சேவை புரிகிறவன் சர்வேஸ்வரனுக்குச் சேவை புரிகிறான்.

அண்டை வீட்டுக்காரனை நேசிக்கிறவன் ஆண்டவனை நேசிக்கிறான். உலகத்தின் உயிர்கள் யாவும் தானே என்று பக்தன் உணருகிறான். இறைவனின் சாந்நித்தியமாக இப்பிரபஞ்சத்தைக் கருதுகிறான். இது அத்வைத ஸித்திக்கும் குறைபட்டதல்ல. இறைவனைச் சிரத்தையோடு உண்மையாகப் பக்தி செய்பவர்கள் வழி தவறமாட்டார்கள். அவர்கள் நாசமடைய மாட்டார்கள். பாவியும் சூத்திரனும்கூட மோட்சத்தின் உத்கிருஷ்டமான உயர்வுக்கு எழுப்பப்படுகிறார்கள். இறைவனுடைய அன்பு அளக்கவொண்ணாதது. இறைவன் அவர்களுடைய புத்தியில் ஞான ஒளி பரப்பி, அவர்களை எக்காலத்திலும் இரட்சிக்கின்றான். இப்பேருண்மைக்குப் பகவத்கீதையும் பாகவதமும் சான்றுகள் ஆகும். பக்தன் இறைவனால் வழிகாட்டப்படுகிறான்; மகத்தான பரமானந்தப் பெருநிலைப்பேற்றுக்குப் போதுமான ஞான ஒளி அவனுக்கு வழங்கப்படுகிறது.

## திருவருள் கோட்பாடு

இறைவனின் திருவருள் அவன் சிருஷ்டியிலே ஒவ்வொரு அங்குலத்திலும் நிறைந்திருப்பதைக்காணலாம்.

கடுங் கோடைக்காலத்தில் வெள்ளரிக்காய், ஆரஞ்சுப் பழம், திராக்ஷை, மாதுளங்கனி இவற்றின் இனிய ரஸத்தையும், ஹிருஷிகேஸ், ஹரித்துவார் குளிர்ந்த கங்கா தீர்த்தத்தையும் பருகிக் களிப்புறுகிறீர்கள். இது தான் இறைவனின் திருவருள். கொடிய வியாதியால் வேதனைப்படும்போது மூலிகைகளைக்கொண்டு உடனடியாக நிவாரணம் செய்து கொள்கிறீர்கள். இறைவனின் திருவருள் இதுவே. இருண்ட இராத்திரியில் நடமாடும் போது, நக்ஷத்திரங்கள் மினுக் மினுக் கென்று பிரகாசித்து உங்களுடைய பாதையில் ஒளி வீசுகின்றன. இது இறைவன் திருவருள். மிதமிஞ்சிய வலியைத் தாங்கிக்கொள்ள இயலாவிட்டால், நீங்கள் ஸ்மரணையற்றுப்போகிறீர்கள் இது இறைவன் திருவருள். நிரம்பவும் புழுக்கமாயிருந்தால், மிருதுவான தென்றல்வீசி இளைப்பாற்றுகிறது. இது சர்வேஸ்வரரின் திருவருள்.

ஆண்டவனிடம், சரணடையும் அளவுக்குத் தக்கவாறு ஆண்டவனின் திருவருள் இறங்கும். சரண்புகுதல் அதிகரிக்க அதிகரிக்க, திருவருள் அதே அளவில் அதிகரிக்கும். "கற்றல் அல்லது உபந்நியாசங்கள் மூலம் அல்ல; தர்க்கத்தால் அல்ல; புத்திசாலித்தனத்தால் அல்ல—ஆத்மானுபூதி பெறுவதற்கு. யாரை இறைவன் தேர்ந்தெடுக்கிருரோ அவர் ஆத்மசாக்ஷாத்காரம் பெறுகிருர். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பக்தருக்கு இறைவன் காட்சியளிக்கிருர்" என்று கதோபநிஷதம் கர்ஜிக்கிறது.

காமம், குரோதம், அகங்காரம், அகம்பாவம் ஆகிய சூட்சும வடிவங்கள் எல்லாம் ஆண்டவன் திருவருளினுலேயே அடியோடு நாசமடையும். எவ்வளவு தான் கஷ்டப்பட்டு முயன்று சாதனை புரிந்தாலும், அந்தச் சாதனையின்மூலம் மாத்திரமே இத்தகைய

சூட்சும வடிவங்கள் யாவும் வேரோடழிக்கப்பட மாட்டா. இறைவனுடைய திருவருள் உங்களுடைய இதயத்தைப் பூரணமாகத் தூய்மைப்படுத்துகிறது. முமுக்ஷுக்களைப் புருஷார்த்தங்கள் அல்லது நல்ல பயிற்சிகளைச் செய்யத் தூண்டுவது இறைவன் மாத்திரமே ஆவர்.

சோம்பலாயமர்ந்துகொண்டு, "இறைவன் திருவருள் எனக்காக எல்லாம் செய்யும். எந்தச் சாதனையையும் நான் ஏன் செய்யவேண்டும்?" என்று கூறிக்கொள்ளலாகாது. இது தவருன தத்துவம். தங்களைத் தாங்களே உதவி செய்துகொள்பவர்களை சர்வேஸ்வரன் ரக்ஷிக்கிருன். முயற்சி செய்யும் நபர்களின்மீதே இறைவனின் திருவருள் இறங்கும். உனக்காக சுயச்சரணுகதி ஆண்டவன் செய்ய நீ எதிர்பார்க்கக்கூடாது. எழுந்து பிரயத்தனம் செய். தீவிரமாய் ஓயாது உழைக்கவும்; சர்வேஸ்வரர் உன்மீது திருவருளைப் பொழிவார்.

மீரா அனைத்தையும் துறந்தாள். கணவன், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரையும், இராஜ்யம், சொத்து ஆகியவற்றையும் துறந்தாள். இரவும் பகலும் தான் வழிபடு கடவுளாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானையே சிந்தித்தாள். ஆனந்தபாஷ்பம் சொரிந்தாள். இறைவனுடைய திருப்புகழை மன ஒருமைப்பாட்டுடன் பாடினுள். உணவை மறந்தாள். உடல் மெலிந்தது. உள்ளமோ சதாகாலமும் கிருஷ்ண பகவானிடம் லயமாயிற்று. அப்பால்தான், அவள்மீது கிருஷ்ண பகவான் திருவருள் பொழிந்தார்.

இறைவனுக்கு ஐந்து கடமைகள் உண்டு. அவர் கர்த்தா (செயலாற்றுபவர்), அகர்த்தா (செயலாற்ருதவர்), அன்யாதி கர்த்தா (ஜீவனை அவர் மறைக்கிருர்) திரோதானம், திரோபாவம் (அவர் தமது திருவருளின் மூலமாய் திரையை அகற்றுகிருர்) (அநுக்கிரஹம்).

"எனக்காக இறைவன் எல்லாவற்றையும் செய்வார். எந்தச் சாதனையையும் நான் ஏன் செய்யவேண்டும்? அவருடைய திருவருளையே நான் நம்பியிருக்கிறேன்" என்று மக்கள் சோம்பிச் சொல்லுவார்கள். இச்சோம்பலைப் போக்குவதற்காக, ஸ்ரீ வசிஷ்டரும் மற்ற மகான்களும், "புருஷார்த்த வாதம்" என்பது பற்றிப் பிரசாரஞ் செய்துள்ளார்கள். உண்மையில், இறைவனுடைய திருவருளால்தான் எல்லாம் நடக்கிறது. இறைவனுடைய அங்கீகாரம் இல்லாமல், இலையோ அணுவோ அசையவே அசையாது.

பக்தி சிரத்தையாலே பகவானுடைய பேரருளைப் பெறுவீர்களாக! உங்கள் அனைவர் மீதும் இறைவன் தமது திருவருளைப் பொழிவாராக! கிருபை, அனுக்கிரகம், பிரஸாதம் என்றாலும் திருவருள் என்றாலும் ஒன்றே தான். பகவானின் பெருமையே பெருமை! அவருடைய திருவருளின் மகிமையே மகிமை!!

---

## தெய்வநாமம்

பக்திஸாரம் இருவகைப்படும். ஒரு புறத்தில், கடவுள் பால் ஆழ்ந்த உணர்ச்சியுடன் செலுத்தப்படும் அதிகமான பற்றுதல்; மறு புறத்தில் அவருக்காக ஏற்படும் பக்திக்குச் சிரத்தையான தூண்டுதல். இந்த இரண்டு அம்சங்களும் சேர்ந்துவிட்டால், பக்தியிடமிருந்து வெளிப்படுகிற பற்றுதலாகவோ அல்லது பற்றுதலாகத் தோற்றிக்கொள்ளும் பக்தியாகவோ இருக்கிறதைக் காண்கிறோம். அன்பு அல்லது பற்றுதல் எதுவாயினும் சரி, பக்தி என்பதின் முக்கியமான அம்சம் என்னவெனில் இந்த உணர்ச்சி மிக்க உயர்ந்த பொருள் மீது வைத்துள்ளது என்பது உண்மையான அறிவில்

லாத நேசிக்கத்தக்க மகா உத்கிருஷ்டமானவர் என்பதும், நிலையில்லாத அதனுல் நிஜமற்ற உலகாயதப் பொருள்கள் மீது வைக்கப்படும் அன்பு அல்லவென்பதுமாம். அத்தகைய அன்பு அல்லது பக்தியென்று நாம் கூறுவோமானுல், அது பலவித பெயர்களுக்கு உட்பட்டும் பல நாமங்களால் உணர்த்தப்பட்டும் உள்ளது. கீர்த்தனம் அல்லது இலக்கிய வடிவிலோ செய்யுள் ரூபத்திலோ சொல்லப்படும் விஷயம் அல்லது பகவானின் மஹிமையைப்பற்றிப் பாடுதல் அல்லது ஜனங்களுக்கு ரசிக்கும் விதத்தில் பகவானுடைய நாமத்தைப் பாடுதல் ஒரு வகையாகும்.

ஒரு குறிப்பிட்ட கருத்தைக் குறிக்கிறது ஒரு நாமம்; அது ஒரு விஷயத்தின் வாசாரூபமான அம்சம். பொதுவான அல்லது குறிப்பான, ஸ்தூலமான அல்லது சூக்ஷ்மமான, கல்பிதமான அல்லது யதார்த்தமான அம்சமாயிருந்தாலும், நாமம் அதனுடன் இணைக்கப்பட்டுள்ளது. அது தெளிவான பொருத்தமான வகையில் குறிப்பான வடிவத்திற்கோ அல்லது பொருளுக்கோ விளக்கம் தருகிறது. இதனுல் நாம் அதை உணர்ந்து கிரகித்துக்கொள்ளவும் உள்ளத்தில் தெளிவாக இருத்திக்கொள்ளவும் நமக்குச் சாத்தியப்படுகிறது.

பரம்பொருள் பல்வேறு நாடுகளிலும் காலங்களிலும் பல்வேறு நாம ரூபங்களால் அறியப்படுகிருர் நாமம் என்பது பரம்பொருளைக் குறித்த வாய்மொழி வடிவமாகும். பரம்பொருள் ஆதியந்தமற்றவர். சாதாரண மனிதனுல் வரம்புக்குட்பட்ட மன உணர்வுக்கு அப்பாற்பட்டதைக் கிரகிக்க எப்போதும் சாத்தியமாவதில்லை. ஆதலால் எல்லையற்ற மெய்ப்பொருளை வடிவங்களாகவோ, சின்னங்களாகவோ அல்லது பொருள்

களாகவோ உருவகப்படுத்தி விட்டார்கள். தத்தம் மனோபாவங்கள் அல்லது காட்சியின் தரத்திற்குத் தகுந்தவாறு மேற்படி பொருள்கள் அமைகின்றன. பல்வேறு நாமங்களிலும் அவற்றிற்குரிய உருவங்களிலும் பல வித்தியாசமும் முரண்பாடும் ஆரம்ப நிலையில் கண்டார்கள். என்றாலும், நாமத்தை ஜபிக்கும் வழக்கம் உறுதியாகிவிட்டாலோ, இறுதியிலே தெய்வீக உணர்வு எப்போதும் எழுச்சி நிலையில் வைக்கப்படுவதால், மேற்கண்ட வித்தியாச முரண்பாடுகள் கிளம்புவதே இல்லை. அப்பால், பரம்பொருளின் சகஜ ஞானம் நாம் ஜபிக்கும் நாமத்திலேயே தோற்றமாகிறது. ஏனெனில், நாம ரூபங்கள் அனைத்திற்கும் அடிப்படையாயுள்ளது மூலப் பரம்பொருள்; பல்வேறு ஸ்தலங்களில் பல்வேறு காலங்களில் பல்வேறு பகுதியினர்களால் தத்தம் பக்தி சிரத்தையான மனோநிலைகளில் கொண்டாடப்படும் பல்வேறு நாம ரூபங்களிலே அந்த மூலப் பரம்பொருள் காட்சியளிக்கிறார்.

ஒரே மாதிரியான இசையுடன் கூடிய சப்தமானது குறிப்பிட்ட ஒரு வடிவத்தைச் சிருஷ்டிக்கிறது. இது கற்பனை அல்ல. ஒவ்வொரு சப்தத்திற்கும் ஒவ்வொரு வடிவம் உண்டு. குறிப்பிட்டதோர் சப்தம் ஒன்று குறிப்பிட்ட நிலப்பரப்பில் குறிப்பிட்ட வடிவத்தை உண்டாக்குகிறதென்று விஞ்ஞான ரீதியில் நிரூபிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால், கடவுளின் ரூபங்களுக்குத் தகுந்த நாமங்கள் தமது வடிவங்களை மனோமயப் பரப்பிலே சிருஷ்டிக்கக்கூடுமென்று நம்பப்படுகிறது.

இடைவிடாமல் தொடர்ந்து ஜெபிப்பதனால், அந்த நாமமானது அவ்வாறு ஜெபிக்கிறவனுடைய மனத்திலே ஆழ்ந்து வேரூன்றிப் பதிவு பெறுகிறது. ஜெபிக்கிறவன் இறுதியில் இறைவனுடைய தரிசனத்தை அடைகிறான்.

இறைவனுடைய நாமத்திலே, ஆழங்காண முடியாத இனிமையும் கவர்ச்சியும் ததும்பியுள்ளது. வரம்புக்குட்பட்ட புத்தியினால் இதை விளக்குவது இயலாது. அனுபவத்தின் மூலமாக மாத்திரம் அறியக்கூடிய பொருள் இது. இன்னிசை முதன் முதலில் நரம்புகளைச் சிலிர்க்கச் செய்கிறது; அவற்றை நேர்மைப்படுத்துகிறது; அப்பால் மர்மமாக மனத்தின்மீது அது செயலாற்றுகிறது. சிரத்தை மிகுந்த பக்தன் தெய்வீகப் பரவசத்திலே தன்னையே மறந்துவிடுகிறான். இத்தகைய ஆழ்ந்த மனோவெழுச்சியானது உலகாயத மனப்பான்மை படைத்தவர்களால் அறியக்கூடாதது. ஆண்டவன் நாமம் சர்வ பேரானந்த மயமானது. அது உச்சரிக்கப்படும்போது மனமானது அந்த பேரானந்தத்திலே அமிழ்ந்துவிடுகிறது; அது தன்னுடைய தன்மையை பேரானந்தத்தில் இழந்துவிடுகிறது; அந்தப் பேரின்பமயமாகவே ஆகிவிடுகிறது.

இறைவனும் இறைவனுடைய நாமமும் அநந்நியமானது; அவை பிரிக்கவொண்ணாதவை. அவர் நாமம் பாடப்பெறுகிற ஸ்தலத்திலே அவர் வாசம் புரிகிறார். அச்சூழ்நிலை முற்றிலும் புனிதத்துவம் பெற்றுவிடுகிறது. அங்கே, சாந்தம், தூய்மை பேரானந்தம் விளங்குகின்றன. அவரது நாமம் பக்திச் செய்தியைக் கொண்டுவருகிறது. அவரது நாமம் துன்பம், அமைதியின்மை, பந்தம் ஆகியவற்றினின்று ஆத்மாவை விடுதலை செய்கிறது. அவரது நாமம் எவ்விதத் தடையையும் கௌரவத்தையும் அறிவதில்லை. கீழ்த்தர இயல்பு துன்மார்க்கமானது. பகவான் நாமம் இந்த இயல்பைத் தூய்மைப்படுத்தி, சர்வவியாபகமான உணர்வுக்கு உயர்த்தி, தெய்வ தத்துவத்தை மேம்படச் செய்கிறது.

சாதாரணமாய், ஆத்மீய உணர்விலே ஜெபிக்கிறவனுக்கும் ஜெபிக்கப்படும் நாமத்துக்கும் துவைதத்துவம் உண்டு இது வெவ்வேருனது. இது அநுபவத்துறைக்குள் அடக்கமானது. வரம்புக்குட்பட்ட கருத்துக்களால் ஆன மனத்தின் கடுமையான திட்டங்களில் இது திணிக்கப்பட்டுள்ளது. இறுதியில், சாதாரண ஆத்மீய உணர்வானது மேம்பாடுள்ள அநுபவமாக உயர்த்தப்படும்—அதாவது மேலான உணர்வுநிலை. ஜெபிக்கிறவனும் நாமமும் ஒன்ருக ஆகிவிடுகின்றன. நித்தியமாய்ப் பகிரங்கமான பேருண்மையானது அவனுக்கு விளங்கிவிடுகின்றது. மூலப்பரம்பொருளோடு அவன் இலயமாகிருன் என்பதை உணர்ந்துகொள்ளுகிருன். துவைத மனப்பான்மை - வரம்புள்ளதற்கும் வரம்பில்லாததற்கும் இடையே இருந்த பிரிவு எனும் குடாக்கடல்—அகற்றப்படுகிறது. சகஜ ஞானமாகிய அருேளுதயமானது அவனை எல்லையுடைமையினின்று எல்லையின்மைக்கும், பந்தத்தினின்று மோக்ஷத்துக்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மரண நிலையினின்று அமிருத நிலைக்கும் இட்டுச் செல்கிறது. தெய்வீகத்திலே அவன் ஆனந்தத்தை அநுபவிக்கிருன். இந்த ஆனந்தத்தையோ இதன் மூலத்தையோ பகுத்துப் பார்ப்பதற்குக்கூட மனப்பான்மை கொள்ளவில்லை. அப்படி அவன் பகுத்துப் பார்ப்பானுனல், ஆண்டவனிடத்தில் செலுத்தும் அவனது பக்தியேயன்றி வேறல்லவென்பதைக் கண்டு கொள்கிருன். இறைவனைத்தவிர வேறு எதனின்மீதும் அறிவைச் செலுத்துவதில்லை. அவனுக்கு ஒவ்வொன்றும் இறைவனுடைய தோற்றமாகவே இலங்குகிறது. சகலத்தையும் உறிஞ்சக்கூடிய பக்தியைப் பகவான்மீது சமர்ப்பிக்கிருன். இந்த பக்திநிலை இப்பிரபஞ்சத்திலுள்ள நாமரூபங்களை ஊடுருவிச்செல்லுகிறது; பிரபஞ்சம் முழுவதும் அதனுடைய பல்வேருன

தோற்றங்களுடன் அவனுக்கு இறைவனாக மாத்திரமே காட்சியளிக்கிறது. அவன் இவ்வுலகத்திலுள்ள உயிருள்ள, உயிரில்லாத பிராணிகளிடத்திலே ஒரே மாதிரியான அன்பு நிறைவையே காட்டி மகிழ்கிறான்.

தெய்வ நாமத்தின் மகிமை தர்க்கத்தின் மூலமோ பகுத்தறிவின் வாயிலோ வெளிப்படையாக ஸ்தாபிக்கப்படமாட்டாது. தெய்வநாம மகிமையைப் பக்தி சிரத்தை மூலமாகவே அனுபவிக்கவேண்டும். எல்லைக்குட்பட்ட அறிவு நிச்சயமாக எல்லையற்ற பரம்பொருளின் இயல்பினை அறிந்துகொள்ள இயலாது. தெய்வ நாமங்களுக்கு எல்லையே இல்லை. இறைவனுடைய பல்வேறு நாமங்களை சாஸ்திரங்கள் நமக்கு வழங்குகின்றன. இறைவனுடைய நாமங்கள் கணக்கிலடங்காதவை என்பதும் அதனால் வரம்பு கடந்தவை என்பதுமே அதன் பொருள் ஆகும். ஆகையால், எல்லையைத்தாண்டி மேலே செல்லும் பரம்பொருளை எல்லைக்குட்பட்ட அறிவு எங்ஙனம் கிரகித்துக்கொள்ள இயலும் ?

உலக பந்தபாசங்களினின்று ஒருவனை விடுவித்து, சாந்தியும் ஆனந்தமும் நித்தியத்துவமும் நிறைந்த வரம்பு கடந்த சாம்ராஜ்யத்திற்கு வழிகாட்டும் வல்லமை வாய்ந்த ஸர்வ தூய்மையான, ஸர்வானந்தமயமான, ஸர்வசக்தியுள்ள ஸர்வேஸ்வரரின் நாமத்திற்கு எல்லா மகிமையும் உரித்தாகுக ! இறைவனுடைய திருநாமத்திலே உற்சாகங்கொண்டும், தங்களை அத்திருநாமத்தாலே தாங்கிக்கொண்டும், கடவுளுடைய நாமத்திலே இரண்டறக் கலப்பதற்காக உயிர்வாழுகின்ற திருவருள்பெற்ற பக்த சிகாமணிகளுக்கு எல்லா மகிமையும் பொருந்துமாக !

நமது பெற்ருேர், மூத்தோர், போஷகர்கள் ஆகியோரிடம் நமக்குத் தேவையாயிருக்கும்போது பிரார்த்தனை புரிகிருேம். குழந்தைகளாயிருந்த சமயம் அவர்களுடைய உதவியை நாடுகிருேம்; அவர்கள் நம்மை வழிகாட்டவும் விரும்புகிருேம். இளமைப்பருவத்திலே, நாம் நம்மையே பிரார்த்திக்கக் கற்றுக் கொள்கிருேம் - நமது சூக்ஷ்மமான சக்திகளையும் வலிமையையும் நோக்கி. பிறருடைய உதவியைச் சார்ந்திருப்பதை விட்டு விட்டு, நாம் சுயமாக உதவி செய்துகொள்ள முயற்சிக்கிருேம். ஆனுல், இப்பிரார்த்தனைக்கு வரையறை ஒன்று உண்டு. நமது சக்திக்கு அப்பாற்பட்டதும், மானிட யத்தனத்தால் எப்போதும் சாத்தியமாகாததுமான ஏதாவது ஒன்று நமக்குத் தேவைப்படுகிறதென்று நாம் உணருகிறபோது, நம்மை இறைவன்பால் ஒப்படைத்துக் கொள்கிருேம் நம்மை வழிகாட்டி உதவுமாறு பிரார்த்திக்கின்ருேம். இதற்கு அத்தாட்சியாக இறைவனுடைய இணக்கத்தை நாம் உணருகிருேம். சிறிது பக்தி சிரத்தையோடு ஒழுகினுல், நமது பிரார்த்தனைகளை உற்றுக்கேட்டு அவற்றின் பிரகாரம் நமது இஷ்டத்தை நிறைவேற்றி வைக்கின்ற ஸர்வ வல்லமை வாய்ந்த அந்தராத்மாவின் சக்தி ஒன்றினை நாம் உணருகிருேம்.

பக்தன் பொறுத்தவரை, அவன் ஆண்டவனிடம் தன்னை ஒப்படைத்துக் கொள்கிருன் - தன் அகங்காரத்தை ஆண்டவனின் பாதாரவிந்தங்களிலே சரண் புகுத்தி, நிச்சயமாகத் தன்னைக் காப்பாற்றித் தனக்கு வழிகாட்டியாக உதவி புரிபவர் இறைவன் ஒருவனேயன்றி வேறெவருமில்லை என்பதை உணர்ந்து, உலகத்தைப் பற்றி எதையும் சிந்திக்காமல் மறந்துவிட்டு இறைவனை மாத்திரமே தியானிக்கிருன். தன் இச்சையை ஆண்டவனின் இச்சையில் கலக்கிருன் - ஆண்ட

வனுடைய பராமரிப்பின்படி நடந்து கொள்கிருன். அவனிடத்தில் நான் செய்கிறேன் என்கிற கர்த்ருத்வம் கிடையாது. ஆண்டவனுடைய இச்சையே தனது இச்சையென்று அவன் அறிகிருன். அவன் அதன்படி நடந்தாக வேண்டும். இதனுல் அவன் புருஷார்த்தத் தினின்று விலக்கப்பட்டவன் என்று அர்த்தம் கொள்ளு வதா? நிச்சயமாய் அப்படி அல்ல. பக்தன் தன்னை ஒதுக்கி மறைத்துக் கொண்டு ஆண்டவனிடத்திலே சரண்புகுகிருன். அவனுக்கு உடனடியாக தெய்வீகத் திருவருள் பொழிகிறது; அவனுடைய சுபாவம் தெய் வத் தன்மையாக்கப் படுகிறது. சரியான வழியில் இயற்கையிலே முயன்று வருகிருன். உண்மை பார்க்கு மிடத்து, சுயச்சரணுகதி என்கிற செயல் மாத்திரமே மிக உன்னத நிலையிலுள்ள புருஷார்த்தம் ஆகிறது.

வேதாந்திக்கோ அவனுடைய பிரார்த்தனை தனக் குள்ளே உள்ள ஆத்மாவுக்கே ஆகும். எல்லோரிடத் திலும் சுயமாய் அமைந்த ஸர்வ வியாபக உணர்வுக்கே செலுத்துகிருன் தனது பிரார்த்தனையை. ஆரம்ப நிலை யிலே, அவன் தனது பிரார்த்தனையை உலோகாயத மானதும் ஆத்மீயமானதும் குறிக்கோள் கொண்டதும் அல்லது இல்லாததுமான ஓர் வித ஆசையெனக் கருது கிருன். அப்பால் அவன் தனது சாதனையிலே போது மான அளவு முன்னேறிச் செல்லுகிறபோது, ஆசை எனப்பட்ட உணர்ச்சியைத் தனது இச்சை என்பதாகக் கருதுகிருன். இந்த இச்சையானது ஆத்மீய சகஜ ஞானத்தைத் திறந்து காட்டுவதன்றி இது ஆண்டவ னுடைய ஸர்வ வியாபகமான இச்சையுடன் இரண்ட றக்கலந்து விடுகிறது. ஸ்ரீ H.P. பிளாவட்ஸ்கி என்பவர் பிரார்த்தனையைப் பற்றி இங்ஙனம் கூறியுள்ளார்.

முஸ்லிம் சமுதாயத்தைச் சார்ந்த மர்ம சாஸ்திர ஞானி ஒருவர் - கஜாலி என்பது அவரது திருநாமம். அவரது கோட்பாட்டின்படி பிரார்த்தனை என்பது மூன்று படித்தரங்களைக் கொண்டது. (1) வாயினால் உச்சரிக்கப்படுவது (2) மானஸீகமானது (3) ஆண்டவனின் இச்சையிலே கலக்கிற நிலை. முதல் படித்தரத்திலே, பக்தன் ஆண்டவன் மகிமையைப் பாடுகிறான்; ஆண்டவனுடைய புகழைப் பிரகடனம் பண்ணுகிறான்; இன்னிசைக் கீர்த்தனங்களினால் தனது இதயத்தின் வேதனையை வெளியே கக்கிப் பாடுகிறான். இரண்டாவது படித்தரம் மானஸீகமானது. உள்ளம் அமைதி அடைந்தபோதும், வெளியே சஞ்சாரம் பண்ணுகிற புலன்களை நீடித்த சாதனைகளினால் கட்டுப்படுத்திய சமயத்திலும், தீய சக்திகளினால் இலகுவிலே உள்ளம் பாதிக்கப்படாத காலத்திலும், பிரார்த்தனை மானஸீகமாக அமைகிறது - சரீரப் பிரயாசை தேவைபடுவதில்லை. மூன்றாவது படித்தரத்திலே, தெய்வீகத் தன்மையிலே உள்ளம் ஏகாக்ரம் அடைதல் ஆகும். வெளிப்புறத்திய கவர்ச்சிகளை இழந்து ஆசைகளையும் பற்றுதல்களையும் களைந்துவிட்டு உள்ளமானது அமைதி பெறுகிறது. இச்சமயத்தில் பிரார்த்தனையானது இயற்கையாயும் வழக்கமாயும் தானாக இயங்குகிற ரீதியிலும் அமைந்துவிடும். அது தனது மிக உன்னதமான நிலையை எய்துகிறது. ஆண்டவனின் இச்சை இவனுக்கு சொந்தமான இச்சையாகி விடுகிறது. ஏனெனில், பிரார்த்தனையால் வேண்டிக் கொள்ளப்படுகிற பகவான் பக்தன் உள்ளத்தில், அவனது இச்சையில் எழுந்தருளுகிறார். அவனுக்கென சுயஉணர்வு ஒன்று கிடையாது. பக்தன் பகவானிடமே வாசம் புரிகிறான். உள்ளும்புறமும் வேறு எதையுமே அவன் காண்கிறதில்லை. உள்ளம்முற்றிலும் பகவான் மயமாய் நிறையும்.

பகவானைப் பிரார்த்திப்பதையும், பகவானுடைய அன்பிலே தான் லயித்துப் போயிருப்பதையும், நிச்சய மில்லாத துவைத உணர்வைப் பெற்றதையும்கூட பக்தன் மறந்துவிடுகிறன். ஆனல் அவனுக்கு ஒரே ஒரு அனுபவம் உண்டு—அவன் பகவானுடன் இரண் டறக் கலந்த நிலை.

பிரார்த்தனை முற்றிலும் ஆழ்ந்த அமைதியான உணர்ச்சிகளால் நிரம்பப் பெற்றது. அது பக்தி சிரத்தையுடன் கூடியது. பிரத்தியக்ஷமான சிரத் தையைக் காட்டிலும் ஓர்வித கிளர்ச்சிமயமாகப் பிரார்த் தனை வடிவெடுக்கும்போது, அது வரட்சிநிலை எய்து கிறது. அது மேலும் பயனற்றுப்போகிறது. இந்த மாதிரியான பிரார்த்தனையின்போது, கடவுளின் மறு மொழி ரூபமாக ஓர்வித இணக்கம் ஏற்படுவதில்லை. பிரார்த்தனை பலன்களைத் தருகிறது. பிரார்த்தனை பயன் தரத்தக்கதாயிருக்கவேண்டுமானல், அது பிரார்த்தனை புரிகிற நபருடைய அந்தர்முக இயல்பைப்பொறுத்தது. அவனுடைய மனேநிலை, எண்ணுகிற கோட்பாடு, தேவைகள், அவனுடைய பக்திசிரத்தை ஆகிய இவை யனைத்தும் பங்குகொள்ளுகின்றன.

சிலசமயம், பிரார்த்தனையின் முக்கிய குறிக்கோள் சுயநலமும், ஸ்தூல லோகாயதமும், காரணமில்லாமை யும், பகுத்தறிவற்ற தன்மையும் உடையதாகும். சுய நல உத்தேசங்களுக்காகவும், நமது லோகாயத ஆசை கள் நிறைவேறுவதற்காகவும் நாம் மன்றுடுகிறேம். சில சமயங்களில், தீய நமது ஆசை நிறைவேற்றும் பொருட்டுகூட நாம் துணிந்துவிடுகிறேம். இங்கேதான் அதன் எதிர்மாருன பலன்களை நாம் அநுபவிக்கிறேம். முக்கியமாகப் பிரார்த்தனை என்பது கூடுமானவரை

சுயநலமற்றதாயிருத்தல் வேண்டும். முதன் முதலில், நாம் பிறர் நலத்திற்காகப் பிரார்த்தனை செய்யவேண்டும். பின், உலகச் சுபிட்சத்திற்கும் ஸாந்திக்கும், இறுதியில் நமது சொந்தமான ஆத்மீய முன்னேற்றத்திற்கும் பிரார்த்தனை செய்யவேண்டும். தீயகுணங்கள் நீங்கி, ஞானமும் சாஸ்திர அறிவும், நல்ல பண்பாடும், ஸாது சுபாவமும் அமையுமாறு பிரார்த்தனை புரிய வேண்டும்.

"அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மிருத்யு நிலையிலிருந்து சிரஞ்சீவி நிலைக்கும் என்னை வழிகாட்டுக" — இதுவே உத்கிருஷ்டமான பிரார்த்தனை — ஒளி, சத்தியம், சிரஞ்சீவித்துவம் இவைகளுக்கான பிரார்த்தனை. முமுக்ஷுவின் முன்னணியில் உள்ள பிரார்த்தனை அஞ்ஞானத்தை நீக்கியருளுதல் என்பதுவே. அவனுடைய குறிக்கோள் அசத்தியமான பாசவலைகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு சத்தியத்தைச் சாக்ஷாத்கரிப்பதுவேயாகும். தனது முக்கியத்துவமான தெய்வீக இயல்பை அநுபவிப்பதுவே அவன் குறிக்கோளாகிறது.

யதார்த்தமான பிரார்த்தனைகூட சிலசமயம் பலன் தருவதில்லை. இதனால் நமது நம்பிக்கை பாதிக்கப்பட்டுவிடக்கூடாது. அதைரியப்படுத்தி நம்மைச் சோர்வுபடச் செய்தல்கூடாது. கடவுள்மீதுள்ள நம்பிக்கையையும் — பக்தி சிரத்தையையும் பரிசோதிப்பதற்கான தேவைப்பொருள் எனக் கருதல் வேண்டும். இவ்வாறு பிரார்த்தனை பலிக்காமற்போவது சிலசமயம் மீண்டும் மீண்டும் ஏற்படலாம். பக்தன் ஒரே குழப்பமடைகிறான். இறைவன் மீதுள்ள நம்பிக்கையை இழக்கத் தொடங்குகிறான்; சிலசமயம், தெய்வ நெறியினின்று திரும்பிவிடுகிறான். வாஸ்தவத்திலே, இறை

வனின் திருவருளிலே நம்பிக்கையும், உறுதியும், பொறுமையும் இங்கேதான் நாம் காட்டவேண்டும். கடவுள் அடிக்கடி நம்மைக் கடுமையான சோதனைகளுக்கு உள்ளாக்குகிருர். இதனுலே, இறைவன் நம்மீது பிரியமில்லாமலிருக்கிருர் என்றும் நமது பிரார்த்தனைகளுக்கு அவர் செவிசாய்க்கவில்லை என்றும் பொருள்படுகிறதா? இது நிச்சயமாக அல்ல. இது ஒரு சோதனையே; முமுக்ஷு இதைக் கடந்தாகவேண்டும். அவனுடைய நம்பிக்கை அவ்வளவு வலிமையுடன் இராது. மனத்தின் மஷ்டு (கழிவு) இன்னமும் சுத்தீகரிக்கப்படவில்லை; அவன் இதயம் இன்னமும் பரிசுத்தநிலை எய்தவில்லை. பக்தியை அவன் எப்படி வலுப்படுத்துவான்? மன மஷ்டுவை அகற்றிச் சுத்தப்படுத்தித் தன் இதயத்தை எப்படித் தூய்மைப்படுத்துவான்? சோதனைகள், வியவகாரங்கள், இடுக்கண்கள் ஆகியவற்றின் மூலமே தான் சாத்தியப்படும். தங்கம் கொல்லனுலையில் பன்முறை செலுத்தப்பட்டுச் சுத்தீகரிக்கப்படுவதுபோன்று, இதயம் தூய்மை பெறவேண்டும்; பக்தி பின்வாங்காதிருக்கவேண்டும் — சோதனைகள் எனும் உலையைக் கடக்கும்போது. ஆனல் இறுதியிலே எல்லாவிதமான பிரார்த்தனைகளும் பரிபூரணமாக உயர்ந்த நிலையில் நிறைவேறும். ஆகையால், நாம் கடவுளைப் பிரார்த்திக்கும்போது அல்லது கடவுளிடமிருந்து திருவருளைப் பெற விரும்பும்போது, பிரதிகூலம், சோதனைகள் மற்றும் துன்பங்களை மகிழ்வுடன் ஏற்கத் தயாராயிருக்க வேண்டும்.

பிரார்த்தனை மனத்திலுள்ள மாசுகளைப் போக்கித் தூய்மைப்படுத்துவதன்றி, அதைச் சமநிலைக்குக் கொண்டுவருகிறது. அது இதயத்திலுள்ள அசுத்தங்களை ஆத்மீக உணர்ச்சிகள் எனும் தூய நீரால் கழுவிப் புனிதப்படுத்தி, குறைகளையும் குற்றங்களையும் திருத்தி

ஆத்மீய ஞானம் பெறுவதற்கு மனத்தைத் தயார்ப் படுத்துகிறது. ஆபத்து மற்றும் விபத்துக் காலங்களி லே, கூட்டுப் பிரார்த்தனை ஆச்சரியகரமான பலனைத் தருகிறது. காலஞ்சென்ற ஆத்மாக்களுக்காகச் செலுத் தும் பிரார்த்தனை அவர்களுக்குச் சாந்தி அளிக்கிறது.

ஆகர்ஷண சக்தி எவ்வளவு நிஜமோ அவ்வளவு நிஜமாய் உள்ளது பிரார்த்தனை. தர்க்கவாதம் நுழைய முடியாத அவ்வளவு நுண்ணிய பிராந்தியத்தில் அது எட்டிப் பாயும். அது அதிசயமான காரியங்களைச் சாதிக்கும். அதன் மகத்தான சக்தி வர்ணிக்க இய லாது. அதன் வலிமையைப் பிரத்தியக்ஷ அநுபவமில் லாமல் உணருதல் அரிது.

## சிரத்தையும் நாட்டமும்.

நம்பிக்கைதான் சிரத்தை. சிரத்தை உலகத்திலே ஒருமகத்தான பொருள். நியாயக்கோட்பாட்டிற்கும் சிரத்தை அடிப்படையாக உள்ளது. சிரத்தையில்லாத எந்தவிஷயத்திலும் ஒருவன் நியாயம்பேச இயலாது. மகாப்பெரிய தத்துவஞானிகூட சிரத்தையைத் தனது கோட்டையாகக் கொண்டுள்ளான். சிரத்தையோடு ஆதரிக்கப்படாத எந்தவிதமான அறிவுத்தத்துவமும் நலமுடையதாக நிரூபிக்கப் படமாட்டாது. உலகம் முழுதும் சிரத்தையின்மேல் நிற்கிறது - சிரத்தையினுல் வழி காட்டப்பெறுகிறது. சமயம் சிரத்தையை வேரா கக் கொண்டுள்ளது. இறைவன்மீது சிரத்தையில்லாமற் போனுல் ஒருவனுல் இறைவனை நிரூபிக்க முடியாது. இறைவன் என்பவர் ஓர் சிரத்தைப் பொருள் ஆவார்.

இச்சிரத்தையானது ஏற்கனவேயிருந்த சம்ஸ் காரங்களின் விளைவே ஆகும். மக்களில் ஒருசிலர்

பிறக்கும்போதே தத்துவஞானிகளாகப் பிறக்கிருர்கள். ஒருசிலர் சமயத்தின் முக்கிய கோட்பாடுகளைத் தமது எழுபதாவது வயதிலேகூட ஊன்றிக் கவனிக்காதவர்களாயிருக்கிருர்கள். இவையாவும் பூர்வீக சம்ஸ்காரங்கள் அல்லது மனப்பதிவுகளுக்குக் காரணமாகும். பூர்வீக ஜென்மங்களிலே நிகழ்ந்த செயல்களின் பதிவுகளினுலேயே சிரத்தை வழிகாட்டப்பெறுகிறது. உண்மைக்கு அருகாமையிலோ அல்லது தூரத்திலோ இருக்கும் தற்கால சிரத்தையாவது ஆத்மீயத்திலே ஏற்படும் முன்னேற்றத்தைப் பொருத்ததெனலாம்.

குருட்டுநம்பிக்கை நியாயமான நம்பிக்கையாக மாற்றப்படவேண்டும். ஒன்றும் தெரிந்துகொள்ளாமல் ஏற்படுத்தும் வெறும் நம்பிக்கை குருட்டு நம்பிக்கை. நம்பிக்கையை விருத்தி செய்தல்தான் பக்தி என்பது. பக்தியை விருத்தி செய்தல்தான் ஞானம் என்பது. சிரத்தையானது ஒருவனை இறுதியான அனுபவத்திற்கு இட்டுச்செல்லுகிறது. ஒருவன் எதைச் சிரத்தையோடு பற்றிக் கொள்கிருனே அதை அவன் அனுபவிக்கிருன். அதுவாகவே அவன் மாறுகிருன். உலகம் முழுதும் சிரத்தையோடுகூடிய கற்பனையிலிருந்து விளைந்ததோர் பொருள் ஆகும். உலகினிலே உனக்குச் சிரத்தை கிடையாதென்ருல், இந்த உலகம் இருப்பது கிடையாது. இன்பநுகர்வுப் பொருள்களிடத்திலே சிரத்தை ஏற்படாவிட்டால் அவை உனக்கு இன்பம் தரமாட்டா. கடவுளிடம் நம்பிக்கை இல்லாது போனுல், ஒருபோதும் நீ பரிபூரணத்தை அடைய முடியாது. தவருன சிரத்தையானது உண்டு என்பதைக்கூட இல்லை என்பதாக மாற்றிவிடும். "பிரஹ்மன் இல்லையெனக் கருதுபவன் அவனே இல்லாமற் போய்விடுகிருன்" என்று தைத்திரியோபநிஷத்து முழங்குகிறது. ஆத்ம சாதனத்திற்குச் சிரத்தையே முக்கியமான தேவையாகிறது.

சிரத்தையின் விருத்தியே நாட்டமாகிறது. சிரத்தைக்கு ஒருபடி உயர்வு இது. மோக்ஷத்திற்கு ஆத்மீய ஆவேசமாகிய பெருந்தீயாக இந்த சிரத்தையெனும் ஜ்வாலை பற்றி எரிகிறது. முமுக்ஷுவானவன் தெய்வீக அநுபவத்தை வேண்டி ஏங்கி நிற்கிறான். அது வெறும் சிரத்தைமட்டும் அல்ல. வலிமையான உணர்ச்சியாக வடிவெடுக்கிறது. புறச்செயல் எதுவும் இவ்வுணர்ச்சியை அசைக்க வொண்ணாது. பக்திக்குரிய பகவானைக் கலப்பதற்குப் பக்தன் ஏங்குகிறான், தூக்கமோ ஓய்வோ இல்லை அவனுக்கு. பக்திக்குரிய பரம்பொருளை எப்படி எய்துவதென்றே சதாசர்வகாலமும் அவன் சிந்தனை புரிகிறான். பிரார்த்தனை செய்கிறான்; ஆண்டவனைப் பாடுகிறான்; பகவானைப் பற்றிய பைத்தியமே கொள்ளுகிறான். தெய்வீகப் பைத்தியம் பக்தனைப் பிடித்துக் கொள்ளுகிறது. கடவுளைச் சாக்ஷாத்கரிக்கும் தீவிர ஆவேசத்திலே அவன் தனது தனித்தன்மையை முற்றிலும் இழந்து விடுகிறான். இதற்குத்தான் ஆத்ம சமர்ப்பணம் என்பது.

## நான்கு வகை பக்தர்கள்.

இறைவனுடைய பக்தர்கள் நான்கு வகைப் படுவர். அர்த்தா, ஜிஞ்ஞாசு, அர்த்தார்த்தி, ஞானி ஆகிய நான்கு வகையினர். மிகுந்த வேதனைப் பட்டவன் அவ்வேதனையினின்றும் துக்கங்களி லிருந்தும் நிவாரணம் பெறும் பொருட்டு இறைவனின் திருவருளை நோக்கி மன்றாடுகிறான். இவன் அர்த்தா வகையைச் சார்ந்த பக்தன். ஜிஞ்ஞாசு என்னும் பக்தன் அஞ்ஞானியாயிருப்பதால், ஞானம் பெறும் பொருட்டு விரும்புகிறான் இறைவனின் திருவருளை. திரவியம், நிலம் ஆகிய பூலோக உடமைகளில் விருப் பம் கொண்டு இன்பகரமான வாழ்க்கையை அனுப

விக்கும் பொருட்டும் செல்வம் திரட்டும் பொருட்டும் இறைவனைப் பிரார்த்திக்கின்றான். இவ்வண்ணம் செல்வத்தில் நாட்டம் கொண்டவன் அர்த்தார்த்தி என்ற வகையில் சேர்ந்த பக்தன். ஞானியோ மகா ஞானம் படைத்த மஹான். ஆத்மாவிலேயே திருப்திப்படுகிறவன். அவனுக்கு ஆசைகள் எவையும் இல்லை. எல்லா ஆசைகளினின்றும் விடுபட்டவன்; எல்லா ஆசைகளையும் அனுபவித்துத் தீர்த்தவன். ஒரே ஒரு ஆசை ஆத்மாவே. அவன் தன் ஆத்மாவை சர்வ வியாபகமான சர்வேஸ்வரனாகக் கருதுகிறான்.

தீராத நாட்பட்ட வியாதியால் துன்புறுவோர், பூகம்பம், எரிமலை வெடிப்பு, மின்னல், திருடனாலோ, பகைவனாலோ அல்லது புலியாலோ தாக்கப்படுதல் முதலிய பிராணாவஸ்தைகளினால் வேதனையுற்று இறைவனை வேண்டுவோர்—இவர்கள் அர்த்தா பக்தர்கள். திரௌபதியும் கஜேந்திரனும் அர்த்தா பக்தர்களுக்கு உதாரணங்கள். கௌரவர்களின் சபையிலே துச்சாதனன் துரௌபதியை இழுத்துக் கொண்டு வந்து துகிலை உரிக்க முயலும்போது மானசம்ரக்ஷணத்தின் பொருட்டு மகாதேவர்—கிருஷ்ணபரமாத்மாவைக்கூவி அழைக்கிறாள். தன்னைத் தண்ணீருக்குள் முதலை இழுத்ததைக் குறித்துத் தன் பிராணனைக் காப்பாற்றும் பொருட்டு கஜேந்திர யானை நாராயணனைக் கூவி அழைக்கிறது.

ஜிஞ்ஞாசு என்பவன் விசாரிக்கிறவன். அவன் உலகத்தின்மீது வெறுப்புற்றவன். வாழ்க்கையில் சூனிய நிலை உண்டு என்று கண்ட ஜிஞ்ஞாசு எல்லாவற்றிலும் மேலானது சிற்றின்ப சுகம் அல்லவென்பதையும் தூய்மையான நித்தியானந்தம் — துக்கமும்

வேதனையும் கலவாதது — மனத்திற்குள் காணக் கிடைக்கிறது என்பதை எப்போதும் உணருகிருன். உத்தவர் ஓர் ஜிஞ்ஞாசு. உலகத்தினை வெறுத்து ஸ்ரீ கிருஷ்ண பகவானிடமிருந்து ஞானத்தைப் பெற்றவர். பாகவதத்திலே இவரது சரித்திரத்தைப் படியுங்கள்.

செல்வத்தை நாடுவோர் பணம், மனைவி, புத்திரர்கள், பதவி, பெயர், கீர்த்தி ஆகியவற்றை மன்ருடுகிருர்கள். சுக்ரீவனும் துருவனும் அர்த்தார்த்த பக்தர்கள் ஆவார்கள். வாலியைத் துரத்திவிட்டு அவன் ராஜ்யத்தை அபகரிக்க விரும்புகிருன் சுக்ரீவன். இராவணனைக் கொன்று இலங்கையைக் கைப்பற்ற விரும்புகிருன் விபீஷணன். மாற்ருந்தாய் தன்னைக் கொடுமை செய்யாமலும் அவமதிக்காமலும் உள்ள இராஜ்யம் ஒன்றை விரும்புகிருன் துருவன்.

ஆத்மஞான ஒளி அடையப் பெற்ற அறிவு உருவானவனே ஞானி. சுகப்பிரம்மம் என்ற சுகமகரிஷி ஓர் ஞானி பக்தன், மகா உத்கிருஷ்டமான நிலையை உடைய பிரஹ்மஞானி அவனே. தனது ஆத்மாவே எல்லாமாய்ப் பரிணமிக்கிறதென்று உணர்ந்தான். ஸ்ரீமத் பாகவதத்தை பரீக்ஷித்துக்குக் கற்றுக்கொடுத்தான்.

## வைர பக்தர்கள்.

வைர பக்தர்கள் என்பவர் ஒரு வகையினர். இவர்கள் பக்தர்களுக்கு மாருனவர்கள். இறைவனிடத்தில் யதார்த்த பக்தியைக் கொள்ளாதவர்கள். இவர்கள் இறைவனைச் சதா பகைக்கிறவர்கள். இங்ஙனம் இறைவனைச் சதா ஞாபகத்தில் வைத்துக் கொள்கின்றவர்கள். எதிரியைச் சதா சர்வ காலமும் ஞாபகத்

தில் இருத்திக் கொள்வதற்கே எழுந்தது பகைமை உணர்ச்சி. ஆகவே, இவர்களும் ஓர்வகைப் பக்தர் கள் எனலாம். வைர-பக்தியின் வாயிலாக அவர்கள் முக்தியைப் பெறுகிறார்கள். கம்ஸன், சிசுபாலன் மற்றும் சிலர் இறைவனிடத்தில் கொண்ட பகை காரணமாய்ச் சதா காலமும் இறைவனைச் சிந்தித்தார்கள். இங்ஙனம் அவர்கள் முக்தி அடைந்தார்கள்.

## நவவித பக்தி.

இறைவனிடத்தில் பக்தியானது ஒன்பது வகைகளில் விருத்தியாகிறது. பக்தனிடத்தில் விசேஷமாகக் காணப்படுகிற மனோபாவத்தின் மூலம் உண்டாகிற மேலான பற்று அது. ஒன்பது வகைகளிலும் ஆழ்ந்த பக்தி பொதுப்படையாகக் காண்பது. இறைவனிடத்தில் செலுத்தும் அபரிமிதமான பக்தியானது பல்வேறு மார்க்கங்களில் அமைகிறது. இந்த விதமாகப் பக்தி செலுத்துகிறவர்கள் உலகாயத சம்பிரதாயங்களுக்கு மேம்பட்டவர்களாயிருக்கிறார்கள். மானுஷ தர்ம நெறிகள் அவர்களைப் பாதிக்கிறதில்லை. அவர்கள் முழுவதும் இறைவன்பால் சம்பந்தப்படுத்திக் கொள்கிறார்கள்.

"தர்மவியாதன் எனும் வேடனின் குணாதிசயம் என்ன? துருவனின் வயது என்ன? கஜேந்திரன் எத்தகைய கல்வி பயின்றது? விதுரனின் ஜாதி என்ன? உக்கிரசேனன் எந்தவிதமான முயற்சி செய்தான்? குப்ஜா என்பவளின் உடலழகு எப்படி இருந்தது? சுதாமனின் ஆஸ்தி எவ்வளவு? மாதவ மகாப்பிரபு ஆழ்ந்த பக்திக்கே திருப்தியடைந்தாரே தவிர மக்களின் இதர குணாதிசயங்களைப்பற்றி அல்ல"—இக்கருத்துள்ள பாடல் சம்ஸ்கிருதத்தில் உள்ளது.

தர்மவியாதன் எனும் வேடன் மிருகங்களைக் கொன்று வசித்தவன். துருவன் ஐந்து ஆண்டு வாய்ந்த சிறுவன். படிப்பு இம்மியுமில்லாத யானை கஜேந்திரன். ஜாதியிலே விதுரன் ஓர் சூத்திரன். சுயப்பிரயத்தனம் எதுவும் செய்ததே கிடையாது உக்கிரசேனன்; ஆனல் எதுவும் செய்யாமல் வெறு மனே உட்கார்ந்திருந்தான். கூன் விழுந்து மகா அவலக்ஷணம் படைத்த மாது குப்ஜா எனபவள். மக்களிலே மிகவும் தரித்திரம் வாய்ந்தவன் சுதாமன். ஆனல், பகவான் பக்தர்களிடத்திலுள்ள இக்குறை பாடுகளைப்பற்றியே கருதவில்லை. அவர்களிடத்தி லுள்ள பக்தி ஒன்றினையே ஏற்றுக்கொண்டு பகவான் தமது ஆசிகளை அவர்களுக்கு வழங்கினர்.

பூரண நீதி நெறிக்குச் சம்பந்தப்பட்ட நன்ன டத்தை என்பது தூய பக்திக்குத் துணையாக நிற்கும் ஓர் பண்பு. இது பக்தன் செல்லுமிடமெல்லாம் அவனைப் பின்பற்றுகிறது. இதயத்தில் மோசக் கருத்துள்ள வனுயிருந்தாலும், உலகத்திலே அவனுக்கு அன்புக் குரிய பொருள்கள் பல இருந்தாலும், கவர்ச்சி மிகுந்த உலகப் பொருள்களினுல் அவன் தூண்டப்பட்டாலும், மனைவி மக்கள் உறவினர்களைப்பற்றிய அக்கறை கொண்டவனுயிருந்தாலும், தன் சரீரத்தை நன்கு போஷித்து வளர்ப்பதில் ஆர்வமுடையவனுயிருந் தாலும், உலகத்தில் பெயர் பெறவேண்டுமென்று கருதினுலும், உலகிலே ஸாஸ்வதமான கீர்த்தியை நிலைநாட்ட வேண்டுமென்று விரும்பினுலும், உலகத் தில் நிறைந்துள்ள கவர்ச்சி மிக்க பொருள்களை விட்டுப்பிரிய மனமில்லாமலிருந்தாலும், அவன் கடவுளிடத்திலே உண்மையான பக்தியை வளர்க்க இயலாது. எல்லாப் பொருள்களிடத்திலிருந்தும் பூரண பிரிவு பெறுதல்தான் உண்மையான பக்திக்குப்

பூர்வாங்கமானது. இறைவனிடத்திலுள்ள நிஜமான பக்தியின் விளைவு வைராக்கியமாகும். உலகப்பற்று உள்ளவன் இறைவன்மீது பற்று கொள்ள இயலாது. காமன் உள்ள இடத்திலே ராமன் இருக்க முடியாது. ராமன் உள்ள இடத்திலே காமன் இருக்க முடியாது. உலக ஆசையும் கடவுள் பக்தியும் நேர் மாறானவை கள். ஒன்றைப் பெறுவதற்கு மற்றொன்று துறக்கப் பட்டே ஆகவேண்டும். ஒன்பது விதமான பக்தி யாலே இத்துறவு கைகூடும்.

ஸ்ரீமத் பாகவதத்திலும் விஷ்ணு புராணத்திலும் ஒன்பது விதமான பக்திகளைப்பற்றிக் கூறியுள்ளார்கள். (1) சிரவணம் (கடவுளைப்பற்றிய லீலைகளையும் கதைகளை யும் கேட்பது) (2) கீர்த்தனம் (அவருடைய மகிமை களைப்பற்றிப் பாடுதல்) (3) ஸ்மரணம் (அவருடைய சாந் நித்தியத்தையும் திருநாமத்தையும் ஞாபகப்படுத்திக் கொள்ளல்) (4) பாதஸேவனு (பகவானுடைய திருப் பாதங்களுக்குச் சேவைபுரிதல்) (5) அர்ச்சனு (கட வுளை வழிபடுதல்) (6) வந்தனு (பகவானிடம் சரணு கதி அடைதல்) (7) தாஸ்யா (கடவுளுக்குச் சேவ கனுகத் தொண்டு புரியும் மனோபாவத்தைப் பண் படுத்தல்) (8) சக்யா (கடவுளுக்கு நண்பனுகப் பழகும் மனோபாவத்தை விருத்தி செய்தல்) (9) ஆத்மநிவேதனு (ஆத்மாவைப் பூரணமாகச் சரண் புகுதல்).

பக்தன் தனக்கு மிகவும் பொருத்தமான எந்தவித மான பக்தியையும் பயிலக்கூடும். அதன் மூலமாகப் பக்தன் தெய்வீக ஒளியைப் பெறலாம்.

(1) **சிரவணம்:**— பகவானுடைய லீலைகளைப் பற்றிக்கேட்பது சிரவணம். கடவுளுடைய திருவுருவம்,

திருநாமம்பற்றிய நற்குணங்கள், மகிமைகள், லீலைகள், கதைகளைக் கேட்பது சிரவணத்திலே சேர்ந்தவை. தெய்வீகக் கதைகளைக் கேட்பதிலே பக்தன் ரசிக்கிறுன்; அவனுடைய மனம் தெய்வீக எண்ணத்திலே கலக்கிறது. தெய்வீகமல்லாத விஷயங்களைப்பற்றி அது நினைக்காது. இதன் பயனுக, மனமானது உலகத்திடம் வைத்துள்ள பிரமையை இழக்கிறது. சொப்பனத்தில்கூட, பக்தன் பகவானையே சிந்திக்கிறுன். கற்றுத் தெளிந்த மகானுகிய உபாத்தியாயர் முன்னிலையில் பக்தன் அமர்ந்து தெய்வீகக் கதைகளைச் சிரவணம் செய்தல் வேண்டும். விமர்சனமோ குற்றம் கண்டுபிடித்தலோ இல்லாத உணர்ச்சியோடும் தூய இருதயத்தோடும் அவற்றைக் கேட்க வேண்டும். சாஸ்திரங்களிலே போதிக்கப்பட்டுள்ள கோட்பாடுகளிலே பக்தன் நின்று வாழ முயலவேண்டும்.

''சரணுகதி, சேவை, விசாரணை ஆகியவற்ருல் மெய்ப்பொருளை உணருவாயாக. சத்தியத்தை அறிந்த ஞானிகள் உனக்கு அந்த ஞான மார்க்கத்தைப் புகட்டுவார்கள்'' என்று ஸ்ரீமத் பகவத்கீதையில் பகவான் பகர்ந்துள்ளார்.

மகான்களோ அறிஞர்களோ கூடிய ஸத்ஸங்கம் இல்லாமல் ஒருவன் சிரவண பக்தியைப் பெறமுடியாது. தனக்குத்தானே வாசித்தலானது பெரிதும் பயன்தரமாட்டாது. சந்தேகங்கள் கிளம்பும். அவைகளைச் சுலபமாகத் தெளியவைக்க முடியாது ஒருவனுலே. நல்ல மார்க்கத்தில் பக்தனை நடாத்துவதற்குப் போதனை புரிய அனுபவசாலி அவசியம் தேவை.

''ஞானிகளின் ஸத்ஸங்கம் ஒரு க்ஷணநேரத்திற்கேனும் ஸம்ஸார ஸாகரத்தைக் கடப்பதற்கு ஒரு

படகு ஆகிவிடுகிறது'' என்று சங்கராச்சாரியார் பகர்கின்றார். ஸத்ஸங்கம் இல்லாமல், சாதனை வலிமையும் பூரணமும் பெறாது. ஸத்ஸங்கம் என்னும் அஸ்திவாரத்தின்மீது ஸாதனை எனும் கோட்டை கட்டப்பட வேண்டும். வெறும் கடுமையான ஒழுக்கங்கள் ஸாதனையின் முடிவு ஆகமாட்டா. ஸத்சங்கம் அழுக்குகளைப் போக்கிப் பக்தனை ஞான ஒளியில் நடாத்துகிறது. அப்பால்தான் நுட்பமான உண்மைகள் பக்தனால் நன்கு கிரகித்துக்கொள்ளப்படும். உலகப் பற்றுக்கள் அனைத்தும் ஒழித்துக்கட்டுவதற்கு ஸத்ஸங்கம் மாத்திரம் தேவை என்று கிருஷ்ண பகவான் உத்தவருக்கு உபதேசிக்கிறார். பகவான் லீலைகளைக் கேட்பதுவே சிறந்த தர்மமென பாகவத மகாத்மியத்தில் கூறப்படுகிறது. அதனால் ஒருவன் பரமபதம் அடைகிறான்.

சிரவணத்தினால் பரீக்ஷித்து மகாராஜா முக்தி அடைந்தார். சுகமகரிஷியிடமிருந்து பகவானுடைய மஹிமைகளைக் கேட்டார். அவர் இதயம் தூய்மை அடைந்தது. வைகுண்டத்திலே கிருஷ்ணபகவானின் பரமபதத்தைப் பெற்றார். முக்தி அடைந்து மேலான பரமானந்தத்தில் திளைத்தார்.

(2) கீர்த்தனம் :- பகவானுடைய மஹிமைகளைப் பாடுதல் கீர்த்தனம் ஆகிறது. தெய்வீக உணர்ச்சியால் பக்தன் தூண்டப் படுகிறான். பகவானுடைய பக்தியிலே அவன் தன்னை மறக்கிறான். பகவானிடத்து எழுந்த பக்தியினாலே அவன் புளகாங்கிதமடைகிறான். பகவானின் மஹிமையைப்பற்றிச் சிந்திக்கும்போதெல்லாம், இடையில் அழுகிறான். அவன் குரலில் திணறல் எடுக்கிறது. தெய்வீக பாவத்தில் அவன் மூழ்குகிறான். பகவானுடைய நாமத்தை

ஜபிப்பதிலும் எல்லோருக்கும் அவருடைய மஹிமைகளை எடுத்து வர்ணிப்பதிலுமாய்ப் பக்தன் சதாகாலமும் ஈடுபடுகிறான். எங்கெங்கு செல்லுகிறானோ அங்கங்கு அவன் பகவானைப் புகழ்ந்து பாடத் தொடங்குகிறான். தன் கீர்த்தனையில் கலந்துகொள்ளுமாறு எல்லோரையும் வேண்டுகிறான். பரவசத்தாலே பாடி ஆடுகிறான். எல்லோரையும்கூட ஆடச் செய்கிறான்.

இத்தகைய பழக்கங்கள் தூய இதயத்தினின்று வெளிப்படுதல் வேண்டும். அவை வெறும் ஆடம்பரத்திற்கென இருத்தல் கூடா. எல்லோருடைய அந்தரங்க ரகசியத்தையும் ஆண்டவன் அறிவான்; பகவானை எவராலும் வஞ்சிக்க இயலாது. பூரணமான நேர்மை இருத்தல் வேண்டும். அவனுடைய செயல்கள் அனைத்தும் இதயத்தினின்று இயற்கையாய் வெளிப்படுவனவாக இருத்தல் வேண்டும். கடவுளை நாடும் எல்லா மார்க்கங்களிலும் இதுவே மிகவும் எளிதானது. கலியுகத்தில், இரும்புயுகத்தில், கீர்த்தனம் மாத்திரமே மிகவும் சிறந்த யோகமாகிறது. இந்த யுகத்திற்கென விதிக்கப்பட்ட பக்தி மார்க்கம் இதுவே. மனமானது பகவானுடைய நாமங்களையும் பிரபாவங்களையும் பாடுவதிலே சதா கருத்துக்கொள்கிறது. உலக விஷயங்களில் கவனம் செலுத்துவதற்கு அதற்கு எவ்வித வாய்ப்பும் கிடையாது. இரவும் பகலும் பகவானுடைய தரிசனத்தைக் காண்கிறான்; பக்தனுடைய அகங்காரம் நலிகிறது. அவன் ஸாத்வீக குணம் படைத்தவனாகித் தூய இருதயம் கொள்கிறான்.

புராதன காலத்து மஹா புருஷர்களான நாரதர், வால்மீகி, சுகதேவர் ஆகியோரும், வெகு சமீபகாலத்தில் தோன்றிய கௌரங்கர், நானக், துளசிதாஸ், சூர்தாஸ் ஆகிய யாவரும் கீர்த்தன பக்தி மாத்திரம்

மூலமே பூரணத்துவம் எய்தினார்கள். மகாபாபியான அஜாமிளன்கூட சம்ஸார ஸாகரத்தை பகவந் நாமத்தினால் தாண்டினான். இக்கலியுகத்தில், ஜபமும் கீர்த்தனையும் கடவுளைச் சாக்ஷாத்கரிப்பதற்கு ஏற்ற மிகவும் வல்லமை வாய்ந்த வழிகள். கடவுள் பக்தி மூலம் பாபிகள்கூட மாயையைக் கடக்கக்கூடுமானால், பாபிகளைவிட பகவான் பக்கத்தில் உள்ளவர்களும் தங்கள் குருவுக்கும் தேசத்திற்கும் சேவை புரிந்தவர்களும், தூய உள்ளம் படைத்தவர்களுமான நல்ல பக்தர்களைப்பற்றி என்ன பேசுவது?

கீர்த்தனம் இன்னொரு காரணத்தை முன்னிட்டு பக்தி செய்வதற்கு மிகவும் பலன் தரத்தக்க மார்க்கம் ஆகும். மனிதன் காமமுள்ள பிராணி. அவன் நேசிக்கிறான், நேசிக்கிறான். உலகப் பொருள்களை விரும்பாமலிருக்க அவனால் முடியாது. ஆனால் அவன் விருப்பம் காமவசப்பட்டதே. அது தூய தெய்வீக பக்தி அல்ல. இனிய சங்கீதத்தைக் கேட்க விரும்புகிறான்; அழகான பொருள்களைக் காண அவாவுகிறான்; நாட்டியத்தை ரசிக்க நாட்டங் கொள்கிறான். சங்கீதம் கல்நெஞ்சம் படைத்தவனையும்கூட உருக்குகிறது. மனிதனுடைய இதயத்தை வெகு விரைவில் மாற்றியமைக்கத்தக்கது ஏதேனும் ஒன்று உலகத்தில் இருக்குமானால், அது தான் சங்கீதமும் நாட்டியமும். இம்மார்க்கம்தான் கீர்த்தன பக்தியில் கையாளப்பட்டுள்ளது; ஆனால் அது சிற்றின்ப போகங்களுக்கு இலக்காவதற்குப் பதிலாக இறைவனுக்கு இலக்காகிறது. மனிதனுடைய காம உணர்ச்சி தெய்வீகத்தின்பால் நிலைநாட்டப்படுகிறது. இதே சமயம் அவனுடைய நாட்டிய சங்கீத ஆசை அழிவுபடாமலிருக்கிறது. ஏனெனில் தனக்கு மிகவும் அருமையானதாகக் கொள்கிற அத்தகைய

உணர்ச்சியைத் திடீரென்று அழிப்பதானது அவனைப் பூரணனாக்குவதற்கு வெற்றிகரமாய் அமையாது. கீர்த்தனையோ இனிமையும் கவர்ச்சியும் ஒருங்கேவாய்ந்தது. அது இருதயத்தை இலகுவில் மாற்றுகிறது. கீர்த்தன பக்தருக்கு உதாரணமாகச் சுகமஹரிஷி விளங்குகிறார். பரீக்ஷித்துவுக்கு ஸ்ரீமத் பாகவதத்தை அவர் திருவாய் மலர்ந்தருளினார். பாகவதத்தைத் திருவாய் மலர்ந்தருளும்போது அவர் முற்றிலும் பாவ ஸமாதி நிலையில் திளைத்திருந்தார். ஸ்ரீ சுகமஹரிஷி பகவானுடைய பிரபாவங்களைப் பாடிக்கொண்டிருக்கும்போது விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் பிரசன்னமாகி கீர்த்தனையில் பல்வேறு இன்னிசைக் கருவிகளுடன் கலந்துகொண்டார்கள். வீணையை நாரதர் மீட்டினார்; தேவேந்திரர் மிருதங்கத்தை வாசித்தார். கைத்தாளங்களுடன் பிரகலாதர் நர்த்தனமாடினார். பரமசிவனார்கூட தமது ஆனந்தத் தாண்டவத்தைத் தொடங்கலானார். மகாவிஷ்ணுவும் பிரசன்னமாயிருந்தார். அப்போதைக்கப்போது ஆடுகிற ஸ்ரீசுகமஹரிஷியைக் கண்டு எல்லோரும் உணர்ச்சிவசப்பட்டார்கள். இவ்வாறு கூறப்படுகிறது பாகவத மஹாத்மியத்திலே. குடும்பஸ்தர்களுக்குக்கூட கீர்த்தனம் மிகவும் பொருத்தமான மார்க்கம். இது உள்ளத்திற்கு உற்சாகத்தைத் தருவதோடு இதயத்தைத் தூய்மைப்படுத்துகிறது. இது இரட்டைப் பலன்களைக் கொண்டது. எனவே, கீர்த்தனம் எல்லா மக்களுக்கும் எவ்வித பேதமில்லாமல் பொருந்துகிற சிறந்த பக்தி மார்க்கமாகும்.

(3) ஸ்மரணம் :-

ஸ்மரணம் என்பது எக்காலங்களிலும் இறைவனை ஞாபகத்திலேயே இருத்திக்கொள்ளுதல் ஆகும். இறைவனின் உருவத்தையும் நாமத்தையும் பற்றிய சிந்தைவு

படாத ஞாபகமே அது. உலகாயதப் பொருள் எதையும்பற்றி மனம் சிந்திப்பதில்லை; ஆனால் மனம் மகோன்னதம் வாய்ந்த மகேஸ்வரனைச் சிந்திப்பதிலே சதா மூழ்கிக் கிடக்கிறது. ஆண்டவனின் மஹிமைகளையும் அவருடைய நாமம், நற்குணங்கள் ஆகியவைபற்றி கேள்விப்பட்ட விஷயங்களையே மனம் தியானம் புரிகிறது; துருவனும் பிரகலாதனும் செய்ததுபோல, மனமானது இறை ஞாபகத்திலேயே மூழ்கவே தனது உடலையும் உடலைப்பற்றிய இதர விஷயங்களையும்கூட மறந்துவிடுகிறது. ஜபம்கூட கடவுளைச் சிந்திப்பதைத் தவிர வேறில்லை. அது பக்தி இனத்தைச் சேர்ந்தது. ஞாபகப்படுத்திக்கொள்ளுதல் என்பதிலே, இறைவனைப்பற்றிய கதைகளைச் சதாகாலமும் கேட்டல், இறைவனைப்பற்றிப் பேசுதல், கடவுள் சம்பந்தமானவற்றைப் பிறருக்குக் கற்றுக்கொடுத்தல், இறைவனுடைய இலக்ஷணங்களைப்பற்றித் தியானித்தல் ஆகியவை அடங்கியுள்ளன. ஞாபகப்படுத்திக்கொள்ளுதலுக்குக் குறிப்பிட்ட நேரம் எதுவும் கிடையாது.

ஒருவன் தன் உணர்வு முற்றிலும் சிதறவிடாமல் நிலையாக இருக்கும் பரியந்தம், இறைவனை இடைவிடாமல் சதாகாலமும் சிந்திக்கவேண்டும். காலையில் தூக்கம்விட்டெழுந்தக்ஷணம் தொடங்கி இரவில் தூக்கத்தால் முற்றிலும் மேற்கொள்ளப்படும் வரையில், ஒருவன் இறைவன் நினைவாகவே இருத்தல் வேண்டும். கடவுள் ஞாபகமாகயிருத்தலைத்தவிர அவனுக்கு இதர கடமை இவ்வுலகத்திலே கிடையாது. உலகாயதச் சம்ஸ்காரங்கள் அனைத்தும் இறை ஞாபகத்தால் மாத்திரமே நாசமடையும். இறை ஞாபக மட்டுமே இந்திரிய நுகர்வுப் பொருள்களினின்று மனத்தை அப்பால் துரத்திவிடக்கூடும். மனம் சாதாரணமாய் வெளிப்புறத்தே ஓடுகிறது. ஆனால், இறை ஞாபகமானது

அதை அந்தர்முகமாக்குகிறது — உலகாயதப் பொருள் களில் குறிப்பிட்டவற்றை நாடி ஓட மனத்தை அனு மதிப்பதில்லை. இறை ஞாபகமிருத்தல் என்பது சாதனை யில் மிகவும் கடினமான மார்க்கம் ஆகும். எந்நேரமும் இறைவனைச் சிந்தித்தல் என்பது சாத்தியமாகாது. மனம் மனிதனை ஏமாற்றிவிடும் இறைவனைத் தியானிக் கிறதாகவே அவன் நினைத்துக்கொண்டிருப்பான்; ஆனால் நடைமுறையில் உலகாயதப் பொருள் எதைப் பற்றியாவது அல்லது பெயர் பிரக்யாதி சம்பந்தப்பட்ட வை பற்றியாவது அவன் கனவு கண்டு கொண்டிருப் பான். ஞாபகமாயிருத்தல் என்பதற்கு ஏகாக்ரகம் அல்லது தியானம் என்பது சமமாகும். ஸ்மரண பக்தி யைச் சாதிக்கிற பக்தன் ராஜயோகியால் தியானத்திற் காகக் கூறப்பட்டுள்ள சகல அம்சங்களையும் பெற்றிருத் தல் வேண்டும். ஸ்மரணம் என்பது மாயா நதியின் உக்கிரமான வெள்ளப்போக்கிற்கு எதிராக நீந்திச் செல்லுதல் ஆகும். ஸ்மரணம் இறைவன்மீது செலுத் தப்படும் தியானத்திற்கு இட்டுச் செல்லுகிறது — ராஜ யோகத்தில் சொல்லப்படுவதுபோல

கடவுளை ஞாபகத்திலிருத்திக்கொள்வதில் உண்மை யான பக்தர்களின் உறவு ஓர் துணையாகும். மகாத் மாக்களுக்குச் சேவை புரிதல் மற்றுமுள்ளதோர் தேவை. மனம் தெய்வீக மக்களிடையில் ஈடுபாடு கொள்ளும்போது, அது தெய்வீகப் பொருள்களைப்பற்றி நினைக்காமலிராது. ஆகையால், ஒருவர்க்குச் சத்ஸங் கம் தேவைப்படுகிறது. அவர் எப்போதும் ஒரு மகா னோடேயோ, ஒரு மகா பக்தனோடேயோ வாசம் புரிய வேண்டும். அவர் உலகத்தாரிடமிருந்து பெறும் நிந் தனைக்கோ இகழ்ச்சிக்கோ பயப்படாமல் சஞ்சலப்பட லாகாது. அவர் இறைவன்பால் சார்ந்திருக்கவேண்டும். எல்லாக் கஷ்டங்களிலும் இறைவன் தம்மை இரக்ஷிப்

பானென்றும், தமக்கு இறுதியான முக்திப்பேற்றை ஆண்டவன் அளிப்பார் என்றும் நிச்சய புத்தியுடன் நடந்துகொள்வார்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவத்கீதையில், ''ஓ, அர்ஜுனு! என்மீது மனத்தைப் பதிய வைத்துக்கொள் கிறவன் என்னைச் சதா ஞாபகத்திலிருத்திக்கொள் கிருன். அவ்வாறு ஸதாஸர்வ காலமும் என்னைப் பிரியா மலிருக்கும் யோகியிடம் நான் எளிதில் அகப்பட்டுக் கொள்வேன்'' என்று பகர்கின்ருர். நவவித பக்தியில் கீதை ஓர் பிரமாணம். பல்வேறு பக்திகளும் ஒருவனைப் பரம்பொருளிடம் இட்டுச்செல்லுகின்றன என்று பிர மாணத்துடன் ஸ்ரீ கிருஷ்ண பகவான் விளக்கிக்கூறியுள் ளார். புழுவானது பகைமையாலும் அச்சத்தாலும் குளவியைத் தியானிப்பதன் மூலமாய்க் குளவியின் நிலையையே பெறுவதுபோன்று, பகவானை விரோத பாவத்தின் மூலம் ஞாபகப்படுத்திக்கொள்வதாலேயே முக்தி பெற்றுவிடுகின்றனர். பகவானைப் பகைத்தவர் கள், கம்ஸன் சிசுபாலன் போன்றவர்கள், வைர பக்தி யின் வாயிலாக மோக்ஷத்தை எய்தினுர்கள். ஆன்மீய சாதனையில் கூறப்படும் இதர எல்லாவிதமான பயிற்சி களின் விளைவு இடையருமல் ஞாபகத்திலிருத்தல் என்பது ஆகும். இது மிகவும் சக்திவாய்ந்த மார்க்கம், மிகவும் கடினமானதும்கூட.

இதர அலுவல்களிலே ஈடுபட்டாலுங்கூட உலோபி தன் செல்வத்தை மறக்கிறதில்லை. காமி தன் காதலி யை மறக்கிறதில்லை; மேய்ந்துகொண்டிருக்கும்போது கூட பசு தன் கன்றை மறப்பதில்லை. அதுபோல, உலகாயதன் ஒருவன் வாழ்க்கையில் இதர கடமை களிலே மூழ்கினுலுங்கூட கடவுளைச் சிந்தித்தலைச் சாதித்தல் வேண்டும்.

தெய்வச் சிந்தனையைப் பிரகலாதன் சாதித்தான். ஒருபோதும் அவன் இறைவனை மறந்ததில்லை. கொடிய அவனுடைய தகப்பனால் பலவகைகளிலும் அவன் தண்டிக்கப்பட்டான். ஆனால் பக்த பிரகலாதன் கஷ்டங்கள் அனைத்தும் கடந்து பகவானின் திருவருளைப் பெற்றான். இறைவன் தியானத்தில் பிரகலாதன் தன்னையே இழந்தான். பக்தர்கள் அனைவரின் தீவிர பக்தி இவ்வாறு இருத்தல் வேண்டும். பாகவதத்தின் ஏழாவது ஸ்காந்தம் பிரகலாதன் சோதனை புரியும் சூழ்நிலைகளிலுங்கூட எவ்வாறு பக்தி பயின்றான் என்பதை அழகான வர்ணனையாகத் தருகிறது.

(4) பாதசேவை :- பகவானுடைய பாதங்களுக்கு தொண்டு புரிவதற்குப் பாதசேவை என்று பெயர். பிரத்தியக்ஷமாக இது லக்ஷ்மி அல்லது பார்வதி தேவியால்தான் செய்யக்கூடும். இறக்கும் சுபாவம் படைத்த எந்த ஜீவனுக்கும் இந்த வகையான பக்தியைப் பயிலுவதற்கு அதிர்ஷ்டம் கிடையாது; ஏனெனில், ஸ்தூலக் கண்களுக்குப் பகவான் காட்சியளிப்பதில்லை. ஆனால், விக்கிரகங்களில் எழுந்தருளியுள்ள பகவானுடைய உருவத்திற்குச் சேவை புரிவது சாத்தியம். இதைக் காட்டிலும், மானிடர்கள் எல்லோரையும் மகேஸ்வரராகப் பாவித்தல் சிறப்பானது. இதுதான் பாதசேவை. நோயாளிகளுக்குத் தொண்டுபுரிவது பாதசேவை. ஏழை எளியவர்களுக்குச் சேவை செய்வது பாதசேவை. பொதுமக்கள் அனைவருக்கும் தொண்டாக உதவுவது பாதசேவை பிரபஞ்சம் முழுதும் விராட் சொரூபமே. உலகத்தாருக்குச் செய்யும் சேவை பகவானுக்குச் செய்யும் சேவையாகும்.

பகவானுடைய பாதாரவிந்தங்களுக்குச் சேவை புரிதல் என்பதை கோவில்களிலுள்ள மூர்த்திகளுக்கோ

அல்லது விக்கிரகங்களுக்கோ நியமமான பூஜை மூலமாயும், கடவுளை மானஸீகமாக உருவமமைத்துக் கிரமமான பூஜை மூலமாயும் நிறைவேற்றலாம்.

பகவானுடைய திவ்ய பாதாரவிந்தங்களை அடிக்கடி பக்திப்பெருக்குடன் சிரத்தையோடு பார்த்தல் அவைகளைச் சேவித்துத் தொண்டு புரிதல், பகவானுடைய பாதங்களைக் கழுவிய நீரை ஆசமனஞ் செய்தல், மரக்கட்டையால் செய்யப்பட்ட பகவானுடைய பாதரக்ஷைகளை வணங்குதல், அவைகளைப்பற்றித் தியானித்தல், அவற்றிற்குப் பிரார்த்தனை செலுத்துதல், பகவானுடைய பாததூளியை எடுத்து நெற்றியில் இட்டுக்கொள்ளுதல், பாததூளியால் நெஞ்சைக் கழுவுதல், மனித வர்க்கத்தின் நலனுக்காகத் தாமே அவதாரஞ் செய்து கொண்ட ஆண்டவன் எழுந்தருளியுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களையும் யாத்திரா ஸ்தலங்களையும் புனித ஆலயங்களையும் மதித்தல், பகவானுடைய பாதங்களினின்று நேராகப் பிரவாகத்துடன் ஓடிவருவதாகக் கங்கையைப் பெருமையாக நினைத்தல், கங்கையின் அத்தகைய புனித தீர்த்தத்தில் நீராடுதல் அதைப் பருகுதல் — இவை யாவும் பகவானுடைய பாதாரவிந்தங்களைச் சேவிக்கும் விதவிதமான மார்க்கங்கள் ஆகும். இத்தகைய பக்தி உலகாயதப் பற்றுக்களை நசித்து விசேஷமாகத் தெய்வத்தை நினைக்கும்படி மனத்தைத் தூண்டும்.

ஸ்ரீ ராமருடைய பாதுகைகளுக்குத் தொண்டு செய்து வந்தார் பரதர். என்னே அவருடைய பெரும் பக்தி! பாதுகைகளைச் சிம்மாஸனத்தில் வைத்து ஸ்ரீ ராமரே அமர்ந்திருப்பதாகக் கருதி அவற்றைச் சேவித்து வந்தார். ஸ்ரீ ராமருடைய பாதுகைகளின் பெயரால் அவர் ராஜ்யத்தை ஆண்டு வந்தார் — அவர்

ராமருடைய ஊழியனுகக் கருதினுர். இதற்குத்தான் பாத சேவா—பக்தி என்பது. பகவானுடைய பாததூளி அடையப்பெற்றதும், அஹல்யா தேவி தனது வாழ்வு பரிபூரணமெய்தியதாக உணர்ந்தாள். ''பரிபூரண அனுக்ரகம் பெற்று மகான்களின் அடைக்கல ஸ்தல மாக அமைந்துள்ள ஆண்டவனுடைய திருவடி நிழ லிலே தஞ்சம் புகுந்தவனுக்கு உலக வாழ்வு எனும் ஸாகரமானது கன்றுக்குட்டியின் குளம்புத் தடம் அளவு ஆழமில்லாமல் மட்டமாகிறது. மேலான பரம பதம் அவன் அடைந்து விடுகிருன். அவன் முன்னுல் உலக இன்னல்களும் கஷ்டங்களும் தோன்றுவதில்லை'' என்று ஸ்ரீமத் பாகவதம் பகர்கின்றது.

ஸ்ரீ லக்ஷ்மி தேவி இத்தகைய பக்தி பயிலுகிருள். சதா ஹரிபகவானுடைய பாதங்களுக்குத் தொண்டு புரிகிருள். விஷ்ணுமூர்த்தி தமது பாதங்களை ஸ்ரீ லக்ஷ்மி தேவியின் தொடையின்மீது வைத்தருளுகிருர். பாத சேவையில் ஈடுபட்ட ஒருவரது உதாரணமாக ஸ்ரீ லக்ஷ்மி தேவி விளங்குகிருள்.

(5) அர்ச்சனை :- பகவானைச் சேவிப்பது அர்ச்சனை யாகும். ''இவ்வுலகினிலே விஷ்ணுவைச்சேவை சாதிக் கின்ற பக்தர்கள் மோக்ஷமெனும் நித்தியானந்த நிலையை எய்துகிருர்கள்'' என்று முழங்குகிறது விஷ்ணு ரஹஸ்யம். உருவம் அல்லது படம் அல்லது மனுேவடி வம் மூலமாக வணக்கத்தைச் சாதிக்கலாம். வணங்கு கிறவனுடைய மனுேபாவத்தைக் கவரும் வகையில் அவன் வணங்கும் சிலை அல்லது உருவம் அமைதல் வேண்டும்.

வெளிப்புற உபகரணங்களினுலோ அந்தக்கரண பாவம் அல்லது வலிமையான உணர்ச்சியினுலோ சேவை சாதிக்கக்கூடும். பின்னது சேவையின்

முன்னேறிய வகையாகும்—தூய உள்ளம் படைத்தவர்களால் மாத்திரம் சாதிக்கவல்லது. வர்ணாஸ்ரம தர்மத்தில் கூறப்பட்டுள்ள சட்டதிட்டங்களின்படி சேவை புரிதல் வேண்டும். முதிர்ந்த பக்தர்களோ தமது விருப்பப்படி எப்படியேனும் பகவானை வணங்கலாம். வணக்கத்தின் நோக்கம் பகவானை மகிழ்விப்பதற்காகவும் அகங்காரத்தைச் சரண்புகுத்துதல் மூலமாயும் தெய்வ பக்தி மூலமாயும் இதயத்தைத் தூய்மைப் படுத்துவதற்காகவுமே ஆகும்.

ஏழைகளுக்குத் தொண்டு புரிவதும் மஹான்களை வணங்குவதும்கூட பகவானுடைய விராட் ஸ்வரூபத்தை வணங்குவதாகும். எல்லா வடிவங்களிலும் பகவான் தரிசனம் அளிக்கிறார். அவர் சர்வ மயமானவர் சைதன்யம் நிறைந்த பிராணிகளாகவும் சைதன்யம் இல்லாத படைப்புகளாகவும் பகவான் மாத்திரமே தோன்றுகிறார் என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. எல்லா ஜீவன்களிடத்திலும் பக்தன் நாராயண பாவம் அல்லது ஈஸ்வரபாவம் கொள்ளுதல் வேண்டும். எல்லா ஜீவன்களையும் கீழ்நிலையிலுள்ள புழுவரையும்கூட கடவுளாகவே கருதவேண்டும். இதுதான் உத்கிருஷ்டமான வணக்கம் ஆகும்.

தெய்வ வணக்கம் பொதுவாக தாந்திரீக அல்லது வைதீக முறையால் செய்யப்பட்டு வருகிறது. கோவிலிலோ, சொந்த வீட்டிலோ வெளியே எந்த இடத்திலோ பூஜை செய்யலாம். பூஜையின் நோக்கம் யதார்த்த பக்தியும் பகவானை அடைவதற்கான நிஜமான சரணாகதியுமே ஆகும். பூஜையின்போது பக்தனுடைய மனம் சதாகாலமும் பகவானுடைய வடிவத்தின்மீது ஏகாக்ரமாயிருத்தல் வேண்டும். பகவானுடைய திவ்ய குணாதிசயங்களையும் அவரது ஆதி அந்த

மில்லாத இயற்கை நிலையும் ஆனந்த ஸ்வபாவத்தை யும் அமரத்துவத்தையும் மனம் சிந்தனை செய்ய வேண்டும். உலகாயத விஷயங்களைப்பற்றி அது சிந்திக்கலாகாது.

பூஜையின்போது பகவானுக்குப் படைக்கப்படும் போஜனம் பகவானால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. (நிஜபக்தியுடன் படைக்கப்பட்டால்).

அதிதீவிரமான பக்தியோடு அர்ப்பணித்த உணவைத் தமது மேலான சொரூபத்துடன் பகவான் பிரத்தியக்ஷமாய்த் தோன்றி உட்கொண்டதாகப் பக்தர்களின் கதைகள் உண்டு. இவை அபூர்வம். இவ்வுலகில் உண்மையான பக்தர்களே அபூர்வம் என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

பிரிது, அம்பரீஷன் போன்ற பக்தர்கள் இத்தகைய பக்தியை அதாவது பகவான் அர்ச்சனையைப் பயின்றார்கள். இவர்களின் வரலாறுகள் ஸ்ரீமத் பாகவதத்தில் காணப்படுகின்றன. உலகத்திலே முதலாவதான மன்னன் பிரிது, பிரிதுவுக்கு முன்னால் பகவான் பிரத்தியக்ஷமாய்த் தரிசனம் அளித்துத் தமது ஆசிகளை வழங்கினார். அம்பரீஷனைப் பகவான் காப்பாற்றி மோக்ஷமும் கொடுத்தார். இவர்கள் கடவுள் பக்தியிலே அமிழ்ந்தார்கள். கடவுளைத் தவிர வேறே எதையும் இவர்கள் விரும்பவில்லை. உலகப் பொருள்களைக் கடவுளிடமிருந்து நாடவில்லை. ஆனால் பகவானுடைய திருவருளை மாத்திரம் அவர்கள் விரும்பினார்கள். அவர்கள் கடவுளை மகிழ்விக்கவும் அவருக்குத்தொண்டு புரியவுமே விரும்பினார்கள். வேறே எதையும் அவர்கள் விரும்பவில்லை. சுயநலமற்ற கோட்பாடு கொண்ட பக்தர்கள் யாவருடைய பக்தியும் இத்தகையதாக இருத்தல் வேண்டும்.

பகவானுடைய நைவேத்தியங்கள் அவசியமாக விலையுயர்ந்தனவையாய் இருக்கவேண்டுமென்பதில்லை யானைகளின் அரசனான கஜேந்திரன் எந்த நைவேத்தியம் வழங்கியது? குளத்திலிருந்த ஒரே ஒரு புஷ்பத்தை திரௌபதி துளசியை வழங்க சபரி காட்டுப்பழத்தை வழங்கினாள். ஆனால், இவை சர்வேஸ்வரனைத் திருப்திப்படுத்தின. பக்தியின் உணர்ச்சிக்குத்தான் பகவான் முக்கியத்துவம் கொடுக்கிறார்—வழங்கப்படும் நைவேத்தியப் பொருளல்ல. இலைகள் வெறும் ஜலத்தைக்கூட அவருக்குச் சமர்ப்பித்துத் திருப்திப் படுத்திவிடலாம்.

(6) வந்தனம் :- வந்தனம் என்பது பிரார்த்தனையும் சாஷ்டாங்க நமஸ்காரமும் ஆகும். பகவான் உருவத்தின் முன்னாலோ அல்லது ஒரே கடவுளின் வடிவங்களாக எல்லா ஜீவன்களையும் கருதி அவற்றிற்கோ பணிவாகவும் உடம்பின் எட்டு அங்கங்களும் பூமியைத் தொடும் வண்ணமும் பக்தி சிரத்தையுடனும் நமஸ்காரம் புரிவதற்கும் பகவத் பக்தியில் மூழ்கியிருப்பதற்கும் "பகவானுக்கு நமஸ்காரம் புரிதல்" என்று கூறப்படுகிறது. "ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி, நட்சத்திரங்கள், கிரகங்கள், திசைகள், நதிகள், மரங்கள், கடல்கள் மற்றும் உயிருள்ள பிராணிகள் ஸ்ரீ ஹரியின் உடம்பாக அமைகின்றன. ஒவ்வொன்றின் முன்னால் பக்தன் தலை குனிந்து வணங்கவேண்டும் அதி தீவிர பக்தியுடன்—கடவுள் முன்னாலே தான் வணங்குவதாகக் கருதி" என்று பாகவதம் சாற்றுகிறது. "பரிகாசத்தில் சிரிப்பவனைக் கவனிக்காமலும், உடம்பை மறந்தும், அவமானத்தையேபொருட்படுத்தாத உணர்வுடனும் ஒருவன் எல்லா ஜீவன்களுக்கும் தலைவணங்கி நமஸ்கரிக்க வேண்டும்—எல்லா ஜீவன்களுக்கும், பசுவுக்கும், நாய்க்கும், கழுதைக்கும், சண்டாளனுக்கும்

கூட சர்வமும் நானுகவே இருக்கிறேன் எனக்குப் புறம்பாக எதுவும் கிடையாது'' என்று உபதேசித்தார் உத்தவருக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவான்.

அர்ஜுனன் கிருஷ்ணனுக்கு வெகு அழகான வகையில் நமஸ்காரம் புரிகிருன். ''முன்னுலிருந்து நமஸ்காரம்; பின்னுலிருந்து நமஸ்காரம்; ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் தங்களை நான் நமஸ்கரிக்கின்றேன். சர்வமயமாயிருக்கும் பகவானே! வலிமையில் அளவிட இயலாதவரே! தாங்கள் எங்கும் வியாபித்து நிற்கிறீர்கள். எல்லாம் தாங்களே'' என்று நமஸ்காரம் புரிகிருன் அர்ஜுனன். விசேஷ பக்தியின் மூலமாக இறைவனைச் சாக்ஷாத்கரித்தலே இத்தகைய பக்தியின் நோக்கமாகும். ''பகவான் வாசுதேவரைக் காட்டிலும் அதிகப் புனிதம் வாய்ந்தது எதுவும் கிடையாது. வாசுதேவரைக் காட்டிலும் தூய்மைப்படுத்துவது வேறே எதுவும் இல்லை. வாசுதேவரைப் பார்க்கிலும் வணங்கத்தக்க மேலான தெய்வம் வேறே இல்லை. வாசுதேவருக்கு நமஸ்காரங்களைப் புரிகிறவன் எவ்விதமான கஷ்டங்களாலும் அலைக்கழிக்கப்படமாட்டான்'' என்று மகாபாரதம் முழங்குகிறது. ''தலையை ஒரு தடவையாவது ஸ்ரீ பகவானுக்குத் தாழ்த்துதலானது பத்து அஸ்வமேத யாகங்களைப் பூர்த்தி செய்த புண்ணியத்துக்கு நிகராகும். பின்னது அவனுக்கு மோக்ஷம் வழங்காது; முன்னது ஒருவனைக் கடவுளாகவே செய்துவிடும்'' என்று பீஷ்மர் பகர்கின்ருர் அக்ரூரன் இத்தகைய பக்தியை அதாவது வந்தன பக்தியைப் பயின்ருன். இவருடைய வரலாறு பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது. ''அத்யந்த பக்தியிலே மூழ்கியவராய், அக்ரூரன் வேகமாய்த் தேரைவிட்டுக் கீழே குதித்து ஸ்ரீ கிருஷ்ண பகவான், பலராமர் முன்னுல் கம்புபோலச் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்தான்'' என்று

பாகவதம் சாற்றுகிறது. ஆழ்ந்த மனோவெழுச்சியில் தழுதழுத்த குரலில் வயோதிகப் போர் வீரரான பீஷ்மர் தமது வந்தனத்தைப் பகவானுக்கு வழங்கியதும், அக்கணமே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவருக்குத் தெய்வீக ஞானமாகிய ஜோதியைப் பாலித்தார் என்று மகாபாரதம் பகருகின்றது. " இங்ஙனம் பகவானுக்குப் பீஷ்மாச்சாரி தமது பிரார்த்தனையைச் செலுத்தினார். அவரது உள்ளம் ஆண்டவரிடம் முற்றிலும் இலயமாகி விட்டது. அந்நிலையில் அவர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கு நமஸ்காரம் என்று கூறி தமது சிரசைத் தாழ்த்தினார் பகவானுக்கு. பீஷ்மருடைய பக்தியின் ஆழத்தைத் தமது யோக சக்தியின் மூலமாய் உணர்ந்த ஸ்ரீ ஹரியாகிய மாதவ பகவான் மூவுலகங்களையும் ஒளிமயமாக்கும் தெய்வீக ஞானமாகிய ஜோதியை பீஷ்மாச்சாரி மீது வழங்கியருளினார்".

அத்யந்த பிரார்த்தனையும் சாஷ்டாங்க நமஸ்காரமும் ஆண்டவனுக்குச் செலுத்துவதன் மூலம் அகங்காரம் முற்றிலும் அழிபட்டுப்போகிறது. தெய்வீகத் திருவருள் பக்தன்மீது இறங்கவும், மனிதன் மகேஸ்வரனாகிறான்.

(7) தாஸ்ய பக்தி :- தாஸ்ய பக்தி என்பது ஓர் வேலைக்காரனைப்போன்ற மனப்பான்மை மூலம் இறைவனிடம் செலுத்தும் பக்தியாகும். மகா உத்கிருஷ்டமான யஜமானராகிய இறைவனுக்குத் தன்னை ஒரு அடிமையாகப் பாவித்துக்கொண்டு இறைவனுக்குத் தொண்டுபுரிதல், இறைவனுடைய எண்ணங்களை நிறைவேற்றுதல், இறைவனுடைய சுபாவம், மர்மம், மஹிமை, மற்றும் இதர குணாதிசயங்களை அறிதல் ஆகியவை யாவும் தாஸ்ய பக்தியைச் சேர்ந்தவை.

கோவில்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்குத் தொண்டுசெய்து பூஜித்தல், கோவில்களைக் கூட்டிச் சுத்தம் புரிதல், இறைவன்மீது தியானம் செலுத்துதல், அடிமைபோல ஆண்டவருக்குமானஸீகமாகத் தொண்டாற்றல், மஹான்களுக்கும் முனிவர்களுக்கும் சிச்ருஷை செய்தல், பகவானுடைய பக்தர்களுக்குச் சேவை புரிதல், இறைவனுடைய வடிவங்களாகத் திகழும் ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் சம்ரக்ஷணை செய்தல் ஆகியவைகூட தாஸ்ய பக்தியில் இடம் பெறுகின்றன.

சாஸ்திரக் கோட்பாடுகளைப் பின்பற்றுதல், வேதங்களில் கூறப்பட்டுள்ள ஆக்ஞைகளை ஆண்டவனுடைய நேர் வாக்குகளாகக் கருதி அவற்றை அனுஷ்டித்தல் முதலியவை தாஸ்ய பக்தியாகும்.

பக்திவெறிகொண்ட பக்தர்களுக்குத் தொண்டாற்றுதலும் அவர்களோடு இணக்கம் கொள்ளுதலும், இறைவனைப்பற்றிய அறிவுபடைத்த உத்தமர்களுக்குச் சேவை புரிதலும் தாஸ்ய பக்தியாகும். தாஸ்ய பக்தியின் அடிப்படைத்தத்துவம் என்னவென்றால் தொண்டு புரிந்து சதா இறைவனுடன் இருத்தலும் பகவானுடைய திவ்ய திருவருளைச் சம்பாதித்து அதன்மூலம் நித்தியத்துவம் அடைதலுமே ஆகும். ஓர் அடிமையின் மனப்பான்மையோடும், ஒரு வேலைக்காரனின் தன்மையைக் கொண்டும், ஒரு சிஷ்யனின் மன பரிபாகத்தோடும், அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பார்த்து, "ஓ பகவானே! அடியேன் தங்களுடைய சிஷ்யன். தங்களிடம் அடியேன் அடைக்கலம் புகுந்தேன். எனக்கு உபதேசியுங்கள்" என்று பிரார்த்தனை புரிந்து நின்றான்—பகவானுடைய பேரருளைப் பெறும்பொருட்டு. பக்தன் ஒருவனுடைய பாவனை இப்படியிருத்தல் வேண்டும்.

தனக்கென எவற்றையும் பதுக்கி ஒதுக்கி வைத்துக் கொள்ளாமல் பரிபூரணமாகத் தன்னையே இறைவன் பால் ஒப்படைத்தல் வேண்டும். சர்வேஸ்வரனிடம் தன்னையும் சர்வத்தையும் பரித்தியாகம் புரிவதே அநந்நிய பக்தியாகும்.

இலக்குமணன், ஹனுமான், அங்கதன் ஆகியோர் பகவத் பக்தியிலே தாஸ்ய பாவத்தையே கடைப்பிடித்து ஒழுகினூர்கள். இராமபிரானிடம் வைத்துள்ள மிதமிஞ்சிய பக்தியினுலும் இராமர் முன்பு தன்னை அடக்கி ஒடுக்கி ஒழுகும் இணக்க வணக்கத்தினுலும் இலக்குமணன் இராமரோடு சில சமயம் பேசுவதுகூட கிடையாது. பகவானுக்குத் தெய்வீகத் தொண்டு புரிதலுக்கு ஹனுமானை உதாரணமாகக் கூறலாம். இது கோபுரம்போன்று மஹத்தான உதாரணமாகும். இராமபிரானுக்குத் தொண்டு புரிதலிலே ஹனுமான் தனது வாழ்நாள் முழுதையும் தியாகம் செய்தான். இராமர் கேட்டுக்கொண்டுங்கூட இராமரை விட்டுப்பிரிய அங்கதனுக்கு விருப்பமில்லை. எக்காலத்தும் அவருக்குச் சேவை புரியவேண்டுமென்பதாகவும் மிக மிக கீழ்த்தரமான வேலைகளைக்கூட இராமபிரான் பொருட்டுத்தான் புரிய ஆயத்தமாயிருப்பதாகவும் பிரார்த்தனை செய்தான் இப் பக்தர்கள் அசாதாரண ரகத்தைச் சேர்ந்தவர்கள். ஹனுமான், இலக்குமணன், அங்கதன் ஆகியவர்களைப்போல் பக்தியை வளர்த்தல் என்பது நிரம்பவும் கடினம். இதயம் தூய்மை பெற்றுகவேண்டும்; மனம் அகம்பாவம் இல்லாமல் மெல்லிய நிலைபெற வேண்டும்; ஆசைகள் அகற்றப்பட வேண்டும். அப்பால்தான் இறைவன்பால் தான் வைத்துள்ள பக்தியைப் பக்தன் உணருகிறுன். அத்தகைய தூயநிலை வராதமுன்பு, பகவான்மீது செலுத்தும் பக்தி பிரபஞ்ச சாயலைத் தாங்கி நிற்கும்—எதிர்பார்க்கும் கனி அதில்

பழுக்காது. முற்றிய சரணுகதியே தாஸ்ய பக்தியின் தத்துவமாகும் தாஸன் அல்லது தொண்டன் எதை யும் இழக்கிறதில்லை, ஆனல் பகவானுடைய தொண்டு புரிவதன் வாயிலாக, பகவானுடைய மேம்பாடான அல்லது அந்தர்க்கதமான நிலையில் சர்வத்தையும் இலாபமாகப் பெறுகிருன்.

(8) சாக்ய பக்தி :- இறைவன்பால் நட்பு மனப் பான்மையை வளர்த்தலுக்குச் சாக்ய பக்தி என்பது நந்தகோபருடைய குடும்பத்தவர்கள் யாவரும் இந்த பக்தியைப் பயின்ருர்கள். அர்ஜுனன் இத்தகைய பக்தியைச் சாதித்தான். "ஓ வ்ரஜா மக்களில் நந்த கோபருடைய அதிர்ஷ்டம்தான் என்ன! அவருடைய ஆத்ம சிநேகிதர் பரிபூரண நித்தியானந்த நித்திய பிரஹ்மன் ஆவார். என்ன ஆச்சரியம்!" என்று பாக வதம் முழங்குகிறது.

இறைவனிடம் எப்போதும் இருத்தல், தன் சொந்த குடும்பத்தைச் சார்ந்த உறவினனுகவோ அல்லது ஒரு நண்பனுகவோ இறைவனைப் பாவித்தல், இறைவனின் பேரிணக்கத்தில் இருத்தல், தன் சொந்த ஆத்மாவைப் போல இறைவனை நேசித்தல் ஆகியவை பக்தி மார்க் கத்திலே கூறப்படும் சாக்ய பாவம் ஆகும். சாக்ய பாவம் பயிலும் பக்தன் பிரேமையோடு இறைவ னுடைய எந்தத் திருப்பணியையும் ஏற்றுக்கொள் கிருன்—தன்னுடைய சொந்த அலுவலில் பராமுக மாயிருந்து, மிகவும் அவசரமான அத்தியாவசியமான வேலையையும்கூட திரஸ்கரிக்கிருன்.

உலகிலே நண்பர்கள், ஆத்ம சிநேகிதர்கள் எப் படி நேசிக்கிருர்கள்? ஒருவரோடொருவர் அவர்கள் எவ்வளவு நட்புரிமை கொண்டாடுகிருர்கள்? மனிதன்

பால் வைக்கப்படும் அத்தகைய நேசம் இறைவன்பால் வளர்க்கப்படவேண்டும். ஸ்தூல அன்பு ஆத்மீய பக்தியாக மாற்றப்படும். லௌகிகம் நித்யத்வமாக மாற்றம் பெறுகிறது.

பக்தன் அமானுஷ்யச் செயலை நிஜமாகவே புரிகிறான். எனினும், தான் செய்யும் காரியங்கள் அனைத்தையும் வெறும் பூஜ்யமாகவே அவன் கருதுகிறான். இறைவனை எல்லா வகைகளிலும் திருப்திப்படுத்தும் காரியங்களையே அவன் எப்போதும் செய்கிறான். உலகிலுள்ள ஒவ்வொரு ஜீவனையும் தனக்குச் சொந்தமான உறவினனும் நண்பனுமாகவே கருதுகிறான். ஒவ்வொருவனையும் தன்னையே சார்ந்தவனாக அவன் பாவிக்கிறான். அவன்பால் சுயநலமோ, பகைமையோ, பேதமனப்பான்மையோ காணமுடியாது. எல்லோரோடும் ஒருவனாக உணர்ச்சியில் ஈடுபடுகிறான். எல்லோரும் அவனுடைய நண்பர்கள். ஆகையால் எல்லோரையும் அவன் நேசிக்கிறான். எல்லோரும் கடவுள். அவனுடைய மேலான நண்பன் இறைவனே ஆவார். கடவுளால் ஆக்ஞையிடப்பட்டவையோடு எப்போதும் அவன் திருப்தி கொள்கிறான். தனக்குச் சொந்தமான எதுவேனும் இறைவனுடைய சேவைக்குள் ஈடுபடுமானால் அவன் மிகுந்த ஆனந்தமடைகிறான் தன் சொந்த உடைமைகளிடம் உரிமை பாராட்டுவதுபோல, இறைவன் தன் சொந்த உடைமைகளிடம் உரிமை கொள்வது சகஜமென உணருகிறான். கடவுளோடு இணக்கம் கொள்கிறான். கடினமான வேலை வாங்கும் பயங்கரமான யஜமானனாகக் கடவுளை அவன் கருதவில்லை. ஆனால், கடவுளை இனிய, பிரியமான நண்பனாகப் பாவிக்கிறான். கடவுளைத் தரிசிக்க அவாவுகிறான். கடவுளைச் சும்மா ஒரு கண நேரமேனும் விட்டிருக்க விரும்பவில்லை. "எனது

பகவானே! என் அன்புக்குரியவரே! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்?'' என்று அவன் கூறுகிறான். தனக்கு உயிர்த் துணைவராகிய இறைவனிடம் அவன் தன்னையே இழந்துவிடுகிறான். தான் வாழ்வதும், தனக்குச் சொந்தமான பொருள்கள் யாவும் இருப்பதும் கடவுளுக்குப் பயன்படுமேயானால் மட்டும் நலமெனக் கருதுகிறான்; ஏனெனில் இறைவனில்லாமல் அவனால் வசிக்க முடியாது. கடவுள் இல்லாமல் வாழுவதென்பது அசாத்தியம். எல்லா நண்பர்களைக் காட்டிலும் கடவுள் உள்ளந்தரங்கமானவரும் மிகுந்த பிரேமை கொண்டவருமாவார். ஒருவனை எல்லா நண்பர்களும் கைவிட்டு விடலாம், ஆனால் கடவுள் தமது பக்தர்களை ஒருபோதும் கைவிடமாட்டார். நீங்கள் கடவுளை நேசிக்காவிடினும், கடவுள் உங்களை நேசிக்கிறார். அன்புக்குரியவராகிய ஆண்டவனைத் தரிசிப்பதாலும், ஸ்பரிசிப்பதாலும், சிந்திப்பதாலும் பக்தன் ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்துவதாக உணருகிறான். பகவானுடைய திருநாமத்தை மாத்திரமே கேட்டால், பக்தனுடைய கடவுள் பக்தி கிளறப்படுகிறது. பரவசத்திலே அவன் குதிக்கிறான், பாடுகிறான். அன்புக்குரிய ஆண்டவனின் செய்தியை எவரேனும் கொணர்ந்தால், ஆனந்தத்தில் அமிழ்ந்துவிடுகிறான். அவரிடமிருந்து பிரிந்திருக்கும்போது பக்தன் வேதனைப்படுகிறான். அன்பிற்குரிய பகவானைச் சந்திக்க அவன் சதா எதிர்பார்க்கிறான். சாக்ய பாவத்தைப் பின்பற்றுகிற பக்தன் ஒருவனுடைய குணாதிசயங்களில் சிலவற்றை மேலே கொடுத்துள்ளோம்.

விபீஷணர், சுக்ரீவன், உத்தவர், அருச்சுனன், சுதாமன், ஸ்ரீதாமன் ஆகியோரும், விரஜாவில் பகவானுடைய விளையாட்டுத் தோழர்களும் நட்புத் தத்துவம்

நிறைந்த பக்தியைப் பயின்ற பக்தர்கள். இவர்களை உதாரணங்களாக எடுத்துக் கொள்ளலாம்.

## 9 ஆத்ம நிவேதனம்.

ஆத்ம நிவேதனம் என்பது சுயச் சரணாகதி. ''வாசுதேவ பகவானிடம் சரண் புகுந்தவனும், வாசுதேவருக்கே முற்றிலும் பக்தி செலுத்துபவனுமான பக்தனின் இருதயம் பரிபூரணமாய்த் தூய்மையடைவதன்றி அவன் நித்ய பிரஹ்மனை எய்துகிறான்'' என்று விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

பக்தன் பகவானுக்கு உடல், உள்ளம், ஆத்மா உள்பட சகலவற்றையும் அர்ப்பணிக்கிறான். அவன் தனக்காக எதையும் வைத்துக் கொள்கிறதில்லை. அவன் தன் சொந்த ஆத்மாவைக்கூட இழக்கிறான். அவனுக்குத் தனித்த சுவதந்திரமான இருப்பு கிடையாது. அவன் தன் ஆத்மாவை ஆண்டவனுக்கு வழங்கிவிட்டான். அவன் இறைவனின் பாகமாக ஆகிவிடுகிறான். கடவுள் அவனைக் கவனித்துக்கொள்கிறார். கடவுள் தம்மைப்போல அவனைப் பராமரிக்கிறார். பக்தன் துக்கத்தையும் கவலையையும் மகிழ்ச்சியையும் வேதனையையும் கடவுளால் அனுப்பப்பட்ட வெகுமானங்களெனக் கருதித் தன்னை அவற்றினோடு இணைப்பதில்லை. அவன் தன்னை இறைவனுடைய பொம்மையெனவும், இறைவன் கரங்களிலுள்ளதோர் கருவியெனவும் கருதுகிறான். அவன் அஹங்காரத்தை உணர்வதில்லை; ஏனெனில் அஹங்காரம் அவனுக்கில்லை. அவனுடைய அஹங்காரம் ஆண்டவனிடம் போய்விட்டது. தன் மனைவி மக்களைப் பராமரிக்க வேண்டுமென்பது அவனுடைய கடமை அல்ல;

ஏனெனில், அவனுக்கு ஆண்டவனைப் பிரிந்து சுயேச்சையான இருக்கை கிடையாது. எல்லோரையும் இறைவன் காப்பாற்றுவார். உலகத்தை நன்னெறியில் நடாத்துவது எப்படி என்பதை அவர் அறிகிறார். உலகத்தை நடாத்துதற்காகத்தான் பிறந்ததென ஒருவன் நினைக்கத் தேவையில்லை. ஒவ்வொன்றையும் பார்த்துக் காப்பாற்றுவதற்குக் கடவுள் இருக்கிறார். இதை மனிதனால் கனவுகூட காணமுடியாது. சிற்றின்ப இச்சை அவனுக்கு இல்லை, ஏனெனில் கடவுளுக்கு அர்ப்பணித்துவிட்டால் தேகம் அவனுக்கில்லை அவன் தன் உடம்பை நேசிப்பதில்லை; ஏனெனில் அதைக் கண்காணிப்பது கடவுள் அலுவல். அவன் இறைவனுடைய ஸந்நிதியை மட்டும் உணருகிறான்; வேறு எதையும் அல்ல. கடவுள் எல்லா நேரங்களிலும் அவனுக்குத் துணைபுரிகிறபடியால் அவன் அச்சத்தை நீக்கியவனாயிருக்கிறான். சத்துருக்களும் பகைவர்களும் இல்லாத கடவுளுக்குத் தன்னை ஒப்படைத்துவிட்டதால், பக்தனுக்குச் சத்துரு கிடையாது. அவனுக்குக் கவலை கிடையாது; ஏனெனில் இறைவனுடைய திருவருளைப் பெற்றதன் மூலம் அவன் சகலத்தையும் பெற்றுவிட்டான். முக்தியைப் பற்றிய எண்ணம்கூட அவனுக்குக் கிடையது; மேலும், முக்தியைக்கூட அவன் விரும்புகிறதில்லை. அவன் பகவானையே விரும்புகிறான்—பகவானைத் தவிர வேறு எதையும் விரும்பவில்லை.

கடவுளை அன்பு பாராட்டுவதோடு பக்தன் திருப்திப்படுகிறான்; ஏனெனில் அன்பு பாராட்டுதலால், அடையமுடியாதது எதுவும் கிடையாது. இறைவன் தமது திருவருளைப் பக்தன்மீது வருஷித்தபோது பக்தன் அடையவேண்டியது என்னதானிருக்கிறது? பக்தன் சர்க்கரையாக இருக்க விரும்பவில்லை; ஆனால்

சர்க்கரையைச் சுவைக்க விரும்புகிறான். சர்க்கரையைச் சுவைப்பதில் ஆனந்தம் உண்டு, ஆனால் சர்க்கரையாகவே மாறிவிட்டால் ஆனந்தம் இல்லை. எனவே, கடவுளாய் ஆவதைக் காட்டிலும் கடவுளை நேசிப்பதில் பரமானந்தம் அதிகமாயிருப்பதாகப் பக்தன் உணருகிறான். "நான் தங்களுடையவன்" என்று கூறுகிறான் பக்தன்.

இச்சுயச் சரணாகதி கடவுளிடத்தில் செலுத்தப் படும் நிரந்தரமான பக்தியேயாகும். பக்தனிடத்தில் கடவுளின் உணர்வு தவிர வேறு எதுவும் கிடையாது. தன் சொந்த அபிலாஷைகளுக்கு எதிர்ப்பாகக்கூட, பக்தன் பகவானுடன் ஒன்றாகிவிடுகிறான்; தனித்துவத்தை இழக்கிறான். ஐக்கியமாகும் சட்டம் இதுவே. மேலான உண்மை என்பது சுயாதீனம்; ஆத்மா பல்வேறு உணர்வுப் படித்தரங்களின் வழியாக மேலெழுந்து செல்லுகிறது. பரிபூரண நிலை எய்தும் வரையில் — அப்போது ஆண்டவனோடு இரண்டறக் கலக்கிறது. இதுதான் எல்லாவித ஆவேசங்களுக்கும் பக்திக்கும் உச்ச ஸ்தானம் ஆகும்.

பரம்பொருளை எய்துவதற்கு ஒரே மார்க்கம் ஆத்மச் சரணாகதியே. இப்பேருண்மையை ஸ்தாபிக்கிற ஸ்லோகங்கள் பகவத்கீதையிலும், பாகவதத்திலும் அநேகம் உண்டு. முற்றிலும் பரிபூரணமான ஆத்மச் சரணாகதி மாத்திரமே அவனுக்கு சாந்தி அளித்து எல்லாப் பாபங்களினின்றும் அவனை விடுவிக்குமென்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார்.

பகவத்கீதையையும் பாகவதத்தையும் கற்கும் ஒருவன் பரிபூரண ஆத்மச் சரணாகதியின்மீது எவ்வளவு ம(ஹ)த்தான முக்யத்துவம் அழுத்திக் கூறப்

படுகிறதென்பதை அறிவான். ஏனெனில், ஆத்மச் சரணுகதி என்பது தனிநபரின் உணர்வை ஒழித்து ஸ்வதந்திர உணர்வைப் பெறுதல் ஆகும். இது நிர் விகல்பசமாதி அல்லது பிரஹ்ம — சாக்ஷாத்காரத்திற்கு நிகர் ஆகிறது. பக்தன் மிகவும் உயர்ந்த மகாபாவத் திற்கு விரைந்து பறக்கிறுன். அவன் தன்னையே ஆண்டவரில் ஐக்கியப்படுத்திக்கொள்கிறுன். சமுத் திரத்தில் அலையானது அடங்குகிறது. தீப்பொறி நெருப்போடு ஒன்ருகிவிடுகிறது. கிரணம் வெயிலிலே உறிஞ்சப்படுகிறது. உள்ளம் ஆத்மாவில் இணைந்து விடுகிறது. தனித்தன்மை பரம்பொருளிலே இழந்து ஒன்ருகிறது பக்தன் பரம்பொருளோடு ஒன்ருக ஆகிறுன் உலகாயத உணர்வு மறைந்து பிரபஞ்ச உணர்வாக வடிவெடுக்கிறது. மனிதன் மஹேஸ் வரனுக ஆகிறுன். சாகும் உயிர் சாகா உயிராகி அமிர்தநிலை எய்துகிறது.

ஆண்டவருக்கு உரிமையான அனைத்தும் மிகவும் உயர்தரமான பக்தனுக்கு உரிமையாகின்றன. அவ னுடைய பாபங்கள் எல்லாம் பஸ்மீகரமாகின்றன. ஆற்றுவதற்கு அவனுக்குக் கடமைகளே இல்லை. அவன் பரிபூரணமெய்திய ஆத்மா ஆகிறுன். மிகவும் தேவகிருபை பெற்றவனுகிறுன். அவனுக்கு உலகம் முழுதும் ஆனந்தமாகத் தோன்றுகிறது அங்கே மேலான அன்பின் தோற்றம் மாத்திரமே உள்ளது. இத்தகைய பக்தியைக் கோபிகளும் பலிச்சக்கரவர்த்தி யும் பயின்ருர்கள். ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்திலே கோபிகள் தம்மையே இழந்து ஒன்ருஞர்கள். பலிச் சக்ரவர்த்தி தன் ஆத்மாவைப் பரம்பொருளுக்கு நிவேதித்தான். கோபிகள் தங்களைக் கடவுள் உணர் விலே நிவேதித்துப் பரமபதம் பெற்ருர்கள்.

## சமாப்தி.

பக்தன் ஒருவன் வாழ்க்கையின் மகோன்னதமான இலட்சியத்தைப் பெறுவதற்கான மார்க்கங்களே ஒன்பது வகைகளான பக்தியாகின்றன. பக்தன் எவனும் இம்மார்க்கங்களில் ஏதாவதொன்றைப் பின்பற்றி மகோன்னதமான நிலையை எய்தலாம். பக்திமார்க்கம் எல்லாவற்றிலும் மிக மிகச் சுலபமான மார்க்கம்; மானுஷ்ய நோக்கங்களுக்கு முரணாகவும் இல்லை. இப்பக்தி மார்க்கம் மெதுவாகப் படிப்படியாக ஒருவனைப் பரம்பொருளிடத்தில் இட்டுச் செல்லுகிறது — மானுஷ்ய இயற்கைச் சுபாவங்களை ஏமாற்றுமலே அது அருந்ததி நியாயம் அல்லது ஷாகச்சந்திர நியாயத்தைப் பின்பற்றுகிறது — வேதாந்திகளினுடைய பிரஹ்மகீட நியாயத்திற்குப் பதிலாக. இப்பக்தி மார்க்கம் கடவுளை அடையும் நேரடிப்பாதை அல்ல; ஆனால் ஆண்டவனைச் சாக்ஷாத்கரிப்பதற்குப் படிப்படியாகச் செல்லும் பாதை.

## நவவித பக்தி.

இது கோஸ்வாமி துளசிதாஸ் அவர்களின் ராம சரித்திரத்தில் கூறப்பட்டுள்ளது. சபரியைச் சந்தித்த போது ஸ்ரீ ராமர், அடியிற்கண்டவற்றை ஒன்பது வகைப் பக்தியாக வழங்குகிருர்

(1) கடவுளைச் சாக்ஷாத்கரித்த மகான்களின் சமுதாயம் முதலாவதாக உள்ளது. (2) பகவானின் மகிமைகளை ஒப்பித்தல், படித்தல் இரண்டவது பக்தி. (3) ஆண்டவனுக்குப் பக்தி பூர்வமான சேவைகளைப் புரிதல் மூன்ருவது பக்தி. (4) நான்காவது குணகானம் :- பகவானின் தெய்வீகத் தன்மைகளைப் பற்றிப்

பக்தி சிரத்தையுடன் பாடுதல். (5) வேதங்களில் கூறப்பட்டபடி உறுதியான நம்பிக்கையுடன் ஆண்டவன் நாமங்களை ஜெபித்தல். அதாவது ஜபம்—இது ஐந்தாவது விதமான பக்தி. (6) ஆருவது விதமான பக்தி சுயக்கட்டுப்பாடு:— உலகாயத விஷயங்களிலிருந்து உள்ளத்தையும் புலன்களையும் முற்றிலும் உள்ளிழுத்துக் கொள்ளுதல் மூலமாய் கண்டிப்பான சுயக்கட்டுப்பாட்டை அனுஷ்டித்தல். எல்லாப் படித்தரங்களிலும் உத்தமர்களுக்கு இதுவே கடமையாகிறது. (7) உலகம் முழுவதையும் பகவானிடத்தில் காணுவதும் மகான்களைப் பகவானைக் காட்டிலும் அதிசிரேஷ்டமாக மதிப்பதுமான பயிற்சி ஏழாவதான பக்தி. இது பிரம்மாண்டத்தைப் பிண்டாண்டத்தில் காணுவதாகும். (8) ஒருவன் எதைப் பெற்ருலும் சரி, அதனுல் பிறரிடத்தில் குற்றங்களைக் காணுமல் அதைச் சந்தோஷத்துடனும் திருப்தியோடும் ஏற்றுக் கொள்ளுதலே எட்டாவது விதமான பக்தி. (9) மக்களிடத்தில் தந்திரமோ அல்லது வஞ்சமோ செய்யாமல் பழகுவதோடு கடவுளையே நம்பிருத்தலாகும்—சந்தோஷத்தையும் சஞ்சலத்தையும் பொருட்படுத்தாமல். இதுவே ஒன்பதாவது விதமான பக்தி.

மேற்கூறப்பட்ட ஒன்பது விதமான பக்திகளில் ஏதாவது ஒன்றை மனிதனோ, ஸ்திரீயோ, உயிருள்ள பிராணியோ, உயிரில்லாத பிராணியோ சாதித்தால், அச்சாதனை கடவுளுக்கு மிக்க பிரீதியைக் கொடுக்கும்.

## பக்தியில் பாவமும் ரஸமும்.

சர்வஜோதி மயமாயும் ஆனந்த நிறைவாயும் உள்ள ஸ்ரீ கிருஷ்ண பகவான் மூன்று உலகங்களுக்கும் நாயகன், தேவகியின் மகிழ்ச்சிக்குரியவன், பிருந்தாவனத்தில் புல்லாங்குழல் வாசிப்பவன், ராதா,

ருக்மணி, சத்தியபாமா மற்றும் கோபிகா ஸ்திரீகளுக்குகந்தவன்—இவனுடைய தாமரை மலர்த் திருவடிகளுக்கு வணக்கமான நமஸ்காரங்களை நான் சமர்ப்பிக்கின்றேன். ராகம் நிறைந்த பக்தி ராகாத்மிகபக்தி எனப்படும். ராகாத்மிக பக்தியைப் பயிலும் எவனும் ஸ்ரீ கிருஷ்ண பகவானின் திருவடிகளுக்குப் பிரேமை அரும்பை அல்லது பிரீதியை விருத்தி செய்கிறான். அதைப் பயில்பவன் ராக அனுகன் எனப்படுவான். பிரேமையின் இளங்கருவுக்கு இரண்டு பெயர்கள் உள்ளன. இவை கிருஷ்ணபகவானை வசியப்படுத்தும். ரதி, பாவம் மூலமாக ஒருவன் கிருஷ்ணப் பிரேமரஸச் செல்வத்தை அடையப்பெறுகிறான்.

சித்தசுவாதீனமுள்ள ஆசை அல்லது மிதமிஞ்சிய தாகம் அல்லது ஆசைக்குரிய பொருள் மீது ராகம் தான் ராகாத்மிக பக்தியின் ஸ்வரூபம், அடையாளம் ஆகும். பிரேமைப் பொருளில் மனோலயம் பெறுதல் தாதஸ்தகுறி அல்லது அம்சம். பிருந்தாவன மக்கள் அல்லது பிரஜாவாசிகளிடம் ராகாத்மிக பக்தி விசேஷமாகக் காணப்படுகிறது. ராகாத்மிக அல்லது ராகானுக பக்தன் சாஸ்திரீய விவாதத்திற்குச் செவிசாய்க்க மாட்டான்.

புறமும் அகமும் என இருவகைகளிலே ராகானுக பக்தி பயிலப்படுகிறது. புறமாக, பக்தன் பகவானுடைய திருநாமத்தை உச்சரித்தும், கேட்டும், புகழ்ந்தும் வருகிறான். அகத்திலே அவன் தன் மனத்திலே ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மாடு மேய்க்கும் தோழனாகவும் பிருந்தாவனத்திலே இரவும் பகலுமாய்ச் சேவை புரிகிறவனாயும் சிந்தனை பண்ணித் தன் கோட்பாட்டைச் சாதிக்கிறவனாய்க் கற்பனை செய்கிறான். பூரண வடிவம் பெற்ற சித்த புருஷனாகக் கிருஷ்ணனைக் கற்பித்

துக்கொண்டு அக்கற்பனை வடிவத்திலே ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு பிருந்தாவனத்தில் இரவும் பகலும் மனோ பாவனையாகத் தொண்டு புரிகிறான். அவன் தன் மனத்திற்குள்ளே தன்னை இழுத்துக்கொண்டு, திவ்ய பூஜைக்குரிய பொருளான பிரேமை கிருஷ்ணனின் வெகு சமீபத்தில் இருந்து அவருக்கு இடையறாமல் தொண்டு ஆற்றுகிறான். அவன் ஸ்ரீ கிருஷ்ண பகவானை யஜமானனாகவோ நண்பனாகவோ குழந்தையாகவோ அல்லது கண்ணாட்டியாகவோ பாவிக்கிறான். இங்ஙனம் ரதி மூலமும் பாவத்தின் மூலமும் பகவானை ஜெயித்து, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா மீதுள்ள பிரேமைப் பொக்கிஷத்தை அடைகிறான்.

## ரதி அல்லது பாவமும் ரஸமும்.

பக்தித் தத்துவத்தின் ரஸம் என்பது பழுத்துக் கனிந்ததோர் திரவ பதார்த்தம். மாதுர்ய பாவத்தை விருத்தி செய்த பக்தனை ஆத்மீய உணர்ச்சிகளைக் கிளப்புகிற ஸ்ரீ ராதாகிருஷ்ண பகவானின் திருநாமங்களையும் ரூபங்களையும் ரஸிக்கும் திவ்ய தேவாமிருதத்தை, கனிந்த திரவ பதார்த்தத்தைச் சுவைக்கிறான். பக்தனுடைய திவ்ய பரவசமான நிலையின் சாசுவதமான ஆனந்த அனுபவம்தான் ரஸம் என்று வழங்கப்படுகிறது. "உண்மையில் அவன் ரஸம்" என்று உபநிஷதம் உரைக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் ரஸவடிவினன். அவன் அகில ரஸாம்ருதமூர்த்தி — எல்லா ரஸம் அல்லது ஆனந்தத்தின் களஞ்சியம். அவன் ரஸத்தின் மூல ஊற்று. பாகவதம் முழுமையும் இந்த ரஸக்கோட்பாட்டின் தீர்க்க விளக்கமாகும். ரஸம் என்பது ஓர் தெய்வீக உணர்ச்சி மயமான நிலை. ரஸம் என்பது நித்தியமான, வகுக்க

முடியாத, நினைக்க இயலாத மகா பரமானந்தத்தின் ஸாரம் ஆகும். பாவம் என்பது ரஸத்தின் பிரதான அஸ்திவாரம்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான்மீது பக்தி சாதித்ததனுல் அடையப்பெறும் விஸ்வாஸம்தான் ரதி என்பது. ரதி ஆழமாய்த் தீர்க்கமாய் விளங்கினுல், அதற்குப் பிரேமை அல்லது ஸ்தாயி பாவம், பக்திரஸத்தின் சாசுவதமான வடிவம் என்று பெயர். உணர்வுநிலை பாவம் என்ற பெயரால் வழங்கப் பெறுகிறது. உணர்வு நிலையின் ஸாரமே தூய ஸத்வம். அது உதயசூரிய னுடைய கிரணங்களுக்கு ஒப்பிடப்படுகிறது. பாவம் பிரேமைக்கு இட்டுச் செல்லுகிறது. கிரணங்கள் உதயசூரியனை அறிமுகப்படுத்துகிறது. அதுபோல ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பெறும்பொருட்டு கொள்ளுகிற தீவிர நாட்டத்தினுல், பாவம் இதயத்தை உருக்கு கிறது. ஆத்மாவின் இன்றியமையாத தூய்மையும், உள்ளத்தை மிருதுவாக்கும் நிலையும் முறையே பாவத் தின் ஸ்வரூபமும் தாதாஸ்த குறிகளும் ஆகும். தொடக்க நிலையைக் காட்டிலும் பாவத்திற்குரிய ரதி முதிர்ந்த நிலையில் உள்ளத்தை விசேஷமாய் மிருது வாக ஆக்கிவிட்டால், தீவிரத்தில் ஆழ்ந்துவிடும் போது, ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் பக்தன் தீர்க்க மான விஸ்வாஸம் கொள்வானுனுல் அதற்குப் பிரேமை என்று கூறப்படுகிறது.

சிரத்தையுள்ளவன் எவனுயிருந்தாலும்சரி, சாதுக் கள், பக்தர்களின் சத்சங்கத்தை நாடுகிருன். ஸ்ரீ கிருஷ்ண பகவானின் திருநாமத்தையும் பெருமை களையும் சிரவணம் செய்யவும் உச்சரிக்கவும் தொடங் குகிருன். பகவந்நாம உச்சரிப்பு, சிரவணம் என்னும் இச்சாதனைகளினுலே பக்திக்கு இடைஞ்சல்களும்,

எல்லா தீங்குகள் அல்லது பாபங்களும் அழிந்து பட்டுப் போகின்றன. தீங்குகள் அழிந்துபோனதும் நிஷ்டை எழுகிறது. இந்த நிஷ்டையினின்று, ஸ்ரீ கிருஷ்ண பகவானைப்பற்றிய பெருமைகளைப் பேசவும் கேட்கவும் ருசி எழுகிறது. இந்த ருசியிலிருந்து பக்திபுரியத் தீவிர மனப்பான்மை எழுகிறது. இந்த மனப்பான்மையினின்று ஸ்ரீ கிருஷ்ண பகவான்மீது ரதி துளிர்க்கிறது. ரதி முற்றினால், அது பிரேமையாகப் பரிணமிக்கிறது.

## 3. ஸ்தாயி பாவ விபாவம்

ஸ்தாயி பாவம் என்பது ரஸத்தின் முக்கிய ஆதாரம், முதுகெலும்பு. ரதி ஆகியவை எதற்காக உணரப்படுகிறதோ அதுவே விபாவம் ஆகும். எதிலே ரதி முதலியவை தங்கியுள்ளனவோ அதுவே விபாவம் ஆகும். ரதி முதலியவற்றை எது எழுப்புகிறதோ அதுவே விபாவம் ஆகும். விபாவம் என்பது இரண்டு வகை கொண்டது—ஆலம்பனம்—உத்தீபனம்.

எதன் சார்பாக ரதி மதிக்கப்பெறுகிறதோ அதுவே ஆலம்பனம் என்பது. ஆலம்பனம இரண்டு வகையாய்ப் பிரிந்துள்ளது. (1) விஷய ஆலம்பனம் அதாவது எவருக்காக ரதி முதலியவை உணரப்படுகின்றனவோ, அவரே அதாவது ஸ்ரீகிருஷ்ணபகவானே (2) ஆஸ்ரய ஆலம்பனம் என்பது ரதி முதலியவை வாசம் புரிகிற கிருஷ்ண பக்தர்கள் ஆவார்கள். இவ்விரு சார்பினர்களும் தத்தம் சாந்நித்தியத்தால் ரதியைக் கிளப்பி விடுகின்றனர்.

உத்தீபனம் — ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் சம்பந்தப்பட்ட காரணத்தால், எது கிருஷ்ணபகவானுக்காக ரதியைக் கிளப்புகிறதோ அதுவே உத்தீபனம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய குணவிசேஷங்கள், தீர வீரச்செயல்கள், அவரது புல்லாங்குழல், பாதச் சுவடு கள், துளசி முதலியவை உத்தீபனம் அதாவது பக்தி யைத் தூண்டுகிற கருவிகளாக அழைக்கப்படுகின்றன.

## 4. ஸ்நேஹம், மானம், பிராணயம்

கருப்பஞ்சாற்றினின்று வெல்லப்பாகு, கறுப்புச் சர்க்கரை, வெள்ளைச் சர்க்கரை, கற்கண்டு ஆகியவை தயாரிப்பது போன்று, ப்ரேமை என்பது ஸ்நேஹம், மானம், பிராணயம், ராகம், அனுராகம், பாவம், மஹா பாவம் ஆகிய வடிவமாகப் பரிணிமிக்கிறது.

அன்பு (ப்ரேமை) ஒன்ருகத் திரட்டப்படும் அள வில் இதயத்தை உருக்கும்நிலை உண்டாகுகிறது. அதுதான் ஸ்நேஹம் எனப் பேசப்படுவது, சினேகிதர் களிடையில் உள்ள ரஸிக்கும் தன்மையை அதிகரிக் கும் பொருட்கு சினேகம் அடுத்த உயர்ந்த விருத்தி நிலைக்கு ஏறும்போது தொல்லையைத் தரும் மனப்பான் மையை, (கோபமாகத் தவருகக் கொள்ளப்படினும் அது கோபமல்ல மேற்கொள்ளுகிறது. அதற்குத்தான் மானம் என்பது. தான் நேசிக்கும் காதலியோடு ஒன்ருகக் கருதும்படி செய்யும் காதலுக்குப் பிராணயம் என்பது. தான் காதலிக்கும் ஒருத்தியின் பொருட்டுத் துன்பத்துக்குள்ளாக்கப்பட்டுங்கூட அந்த பக்தன் சந்தோஷபடுவானுனல் அதற்கு ராகம் என்பது. காதலிக்கப்படுபவளிடம் சதா புதிய இனிமை கண்டு பிடிக்கும்போது அநுராகம் என்று பெயர். பாவம் என்பது பக்திரஸத்தின் ஸ்திரமான வடிவம். இந்த பாவத்தின் மிகுந்த உயர்ந்தநிலை மகா பாவம்.

ரதி என்பது கருப்பஞ்சாற்றைப்போல, தூய்மை யாகவும் ருசியிலும் மணத்திலும் படிப்படி அதிகரிக்க

வும் செய்யும். ரதி ஐந்து வகைப்பட்டது :- ஸாந்தி ரதி, தாஸ்யரதி, சக்யரதி, வாத்ஸல்ய ரதி, மதுர ரதி, இந்த ஐந்து ஸ்திர உணர்ச்சிகள் ஐந்து வகையான மணம் கொண்டவை. இவை பக்தனை உற்சாகப் படுத்தும், ஸ்ரீ கிருஷ்ணபகவானைக் கவர்ச்சி செய்யும். இந்த ரதிகள் அல்லது ஸ்தாயிபாவங்கள் (பக்தியின் ஸ்திரமான உணர்ச்சிகள்) மகா பாவங்கள் வரை, விபாவம், அநுபவம் ஆகிய அம்சங்களுடன் கலந்துள்ளன. இவை கிருஷ்ண பக்திரஸத்திலே முடிவுறுகின்றன.

ஸ்திரமான உணர்ச்சி (ஸ்தாயிபாவம்) ரஸத்துடன் கலந்து, விபாவம், அனுபவம், ஸாத்வீகம், விபிசாரி என்ற நான்கு வகைகளாக மாறுகின்றன. சர்க்கரை, கறுப்பு மிளகு, சூடம் இவற்றுடன் கலக்கப்பட்ட தயிர் ரஸாலா என்ற இனிமையான பண்டமாக மாற்றம் பெறுவதுபோல. இந்த ரஸாலா தின்பண்டத்தைப்போல, ஸ்தாயிபாவமானது விபாவம், அனுபவம், ஸாத்வீகம் விபிசாரி ஆகியவற்ருேடு கலக்கப்பட்டு பக்குவமடைகிறது.

## 5. விபிசாரி.

விபிசாரி என்பது உற்சாகம். மகா ஆனந்தம் முதலிய 33 வகைகளாகப் பிரிக்கப்படுகிறது. வார்த்தைகள், சைகைகள், ஸாத்வீகம் ஆகியவற்ருல் வெளிப்படுத்தப்படும் உணர்ச்சிகளுக்கு விபிசாரி என்று பெயர். இவற்றிற்குச் சஞ்சாரிபாவங்கள் என்னும் பெயரும் உண்டு. அவைகள் பின்வருமாறு :— (1) நிர்வேதா—தன்னைத் தாழ்மைப்படுத்திக்கொள்ளல். (2) விஷாதா—அதைரியப்படுதல் 3) தெய்ன்ய—மிகுந்த பணிவு (4) க்ளனீ—துக்கம் (5) ஸ்ரமம்-

சோர்வு (6) மதம்-அகந்தை (7) கர்வம் (8) ஷங்கம்-சந்தேகம் (9) திரஸா-பயம் (10) அவேக -உணர்ச்சிவேகம் (11) உன்மதம்-பிதற்றுதல் (12) அபஸ்மரம்-முடிவு (13) வியாதி (14) மோஹம்-உணர்வு இழத்தல் (15) ம்ருத்யு-மரணம் (16) ஆலஸ்யம்-சோம்பல் (17) ஜாட்டியம்-மந்தம் (18) வ்ரீத -வெட்கம் (19) அகர்கோபன-சொந்த உடைகளைத் தயாரித்தல் (20) ஸ்மிருதி-ஞாபகப்படுத்திக்கொள்ளல் (21) விதர்க்கம்-தவருன தர்க்கம் (22) சிந்தனை (23) மதி-தீர்மானம் (24) திரிட்டி-அமைதியுடைமை (25) ஹர்ஷ-உற்சாகம் (26) ஔத்சுக்ய-ஜாக்கிரதை (27) உக்கிரதம்-கொடிய தன்மை (28) அமார்ஷா-பொறுமையின்மை (29) அசூயை-பொருமை (30) சபலத-சபலசித்தம் (31) நித்ரா-தூக்கம் (32) சுப்தி -தூக்க மயக்கம் (33) போத-தெரிந்துகொள்ளுதல் அல்லது கண் விழித்தல்.

ஸ்தாயிபாவம் அல்லது கிருஷ்ணரதி ரஸத்தின் பிரதான அம்சம். அது 49 விதமான பாவங்களுக்குத் தலைமை கொண்டது. அது பகவானுடைய சத்துவானந்தமாகும். ஜீவாத்மாவிலே அது சூக்ஷ்மமாய்த் தோன்ருத நிலையில் தங்கியுள்ளது. விபாவம் என்பது ரஸத்தின் காரணம் அல்லது விரிவு. ரஸத்தின் பயன் தான் அனுபவம், மயக்கம், மயிர்ச்சிலிர்ப்பு இவை போன்றவை ஸாத்வீக பாவத்தின் அம்சங்கள். ரஸத்தினுல் விளையும் பிரதான பயன்கள் இவையே. ரஸத்திற்குத் துணை அல்லது ஆதாரவுதான் சஞ்சரி பாவம் என்பது. விபாவங்களும் அனுபவங்களும் வெளிப்புறத்தியவை. ரஸம் தோற்றதற்கு இவை துணை செய்கின்றன. உட்புறத்தியது பாவம். இங்ஙனம் பாவம் ரஸத்திற்குப் பிரதான அடிப்படை ஆகிறது.

பாவத்தின் இயல்பும் சாரமும் தூயசித்து ஆகும். தொடர்ந்து பக்தி புரிவதாலும், பகவானுடைய திருவருள் விளங்குவதாலும், பக்தனுடைய மனமானது தூயசித்தான நிலைக்கு மாற்றப்படுகிறது. ஸாத்விக பாவங்கள் எட்டு அவையாவன :— (1) ஸ்தம்பம் (2) ஸ்வேதம் (வியர்வை வழிதல்) (3) ரோமாஞ்ச (மயிர்ச்சிலிர்ப்பு) (4) ஸ்வரபங்கம் (குரலில் கம்மல்) (5) வேபது (நடுநடுக்கம்) (6) வைவரண்ய (நிறம் மாறுதல்) (7) அஸ்ரு (கண்ணீர்) (8) பிரளம் (உணர்வு நஷ்டம்).

## 6. ஐவகை பாவங்கள்

பக்தி பாவத்தில் ஏற்படும் பல்வேறு உணர்ச்சிகள் ரஸம் எனப்படும். பகவானிடத்து வைக்கும் பக்திக்கேற்ப, பக்தியின் உச்ச நிலையிலே பக்தன் அனுபவிக்கும் ஆனந்தத்தின் படித்தரங்களே ரஸங்கள். இந்த நிலை எதிர்மறையான வெறுமையல்ல—ஆனால் ஆனந்தமும் உற்சாகமும் கொண்ட சாதகமான நிலையே ஆகும். தெய்வீக ஆனந்தம் நித்திய ஆனந்தத்தைத் தருகிறது. இதை அனுபவிக்கும் நிலையே ரஸம் அல்லது சுவை எனும் பெயரால் வழங்கி வருகிறது. கடவுள் தாமே ரஸம். இந்த சாரத்தை ஒருவன் பெற்றுவிட்டால், அவன் ஆனந்தமயமாகிறான். இங்ஙனம் உபநிஷதங்கள் முழங்குகின்றன. சுவேச்சையான பரம்பொருளிடத்து பக்தன் வைத்துள்ள மனோபாவனையின் திறவுகோல் இதுவே.

ரஸம் என்பது இதயத்தில் எழும் உணர்வு நிலையின் உச்ச ஸ்தானம். தெய்வீக ரஸம் அஞ்ஞானச் சிப்பியை உடைத்து, ஆத்மாவை வெளிப்படுத்துவதற்குக் காரணமாயிருக்கிறது. இந்த ரஸங்களைப்

பற்றி மிகுந்த பரிபூரண நிலையில் ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளன. புத்தகம் முழுவதும் இந்த ரஸங்களின் உருவமைப்பே. பக்திரஸங்களைப் பயிற்சி செய்வதன் வாயிலாக ஒருவன் எங்ஙனம் பரிபூரணம் எய்துவிடக்கூடும் என்பதை அது சித்திரிக்கிறது. பாவம் என்பது ஓர் மனநிலை — ஒரு உணர்ச்சி. தெய்வீக ரஸம் என்பது ராஜஸம் தாமஸம் அல்லாமல் வேறு கலப்பு இல்லாமல் பரிசுத்தமான ஓர் பாவம் ஆகும். இது மனத்தை மிருதுவாக்கி சாந்தப்படுத்தி அதைத் தூய ஸத்துவத்திஞல் நிரப்புகிறது. ஸத்வத்தின் தூய்மையான இந்த நிலை ஆத்துமா அல்லது ஆண்டவனின் ஸாராம்சத்தை ஏற்றுக்கொள்கிறது. மெய்ப்பொருளின் நித்ய சுபாவத்தை இது பிரதிபலிக்கிறது. இங்ஙனம் ஆத்ம, இறை சாக்ஷாத்காரமாகிறது.

உள்ளத்தில் இந்த பாவம் ஆழ்ந்து வேரூன்றிவிட்டால் இதற்கு ஸ்தாயிபாவம் அல்லது சாஸ்வத மனோநிலை என வழங்கப்படும். இதுதான் ரஸத்தின் அடிப்படை. கடவுளின் ஆனந்த சக்தியே ரஸம் எனப்படுவது. நாட்டிய சாஸ்திரத்திற்குக் கர்த்தாவாகிய பரதர் ரஸங்களை எட்டு வகைகளாகப் பிரித்துள்ளனர். (1) சிருங்காரம் (2) வீரம் (3) கருணை (இரக்கப்படத்தக்க) (4) அற்புதம் (5) ஹாஸ்யம (6) பயாக (பயங்கரமான) (7) பீபத்ஸம் (வெறுப்பு) (7) ரௌத்திரம் (கோபிக்கத்தக்க). இந்த எட்டுடன் ஸாந்தா என்பது ஒன்பதாவது ரஸமாக இதர அலங்கார சாஸ்திரிகளால் சேர்க்கப்பட்டுள்ளது. பொதுவாக, பக்தியோகத்திலே ஐந்து வகை ஸாரங்களே உள்ளன. (1) ஸாந்தி (2) ப்ரீதி (3) சாக்யம் (4) வாத்ஸல்யம் (5) ப்ரியதா அல்லது மதுரா. இந்த ரஸங்களிலிருந்து, ஸாந்த பாவம், தாஸ்யபாவம், சாக்யபாவம், வாத்ஸல்யபாவம், மதுரபாவம் ஆகிய

சாதனைகளாகப் பரிணமிக்கின்றன. இங்ஙனம், பக்தி என்பது ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கு ஒரு வழியாகும். வெறும் உணர்ச்சிகளின் விளையாட்டு அல்ல.

## 1. ஸாந்த பாவம்.

ஸாந்தி ரஸத்தில் பக்தனின் உள்ளம் அறிவு நிறைந்து உணர்ச்சியற்று இருக்கும். இது மேலான நிலையிலுள்ள பரமஹம்ஸ ஸந்நியாசிகளாலும் ஞானிகளாலும் மாத்திரமே பயிலப்பெற்று வருகிறது. அவர்களுடைய உணர்ச்சிகள் அமைதியாக்கப்படுகின்றன — இறை உணர்வு நேரடியாக இவர்களிடம் உண்டு. எல்லா உணர்வுகளும் தெய்வீகமயமாக்கப் பெறுகின்றன. பீஷ்மர் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திய சீலர். ஸாந்தரஸ பக்தனுக்கு இவரே உதாரணமாக விளங்குகிறார். இவரிடம் உணர்ச்சிக் குமிழிகள் கிடையா. அவர் கடவுளுடைய கடுமையான பக்தர்-உணர்ச்சிகளுக்கு அடிமை அல்ல. அவர் தமது உணர்ச்சிகளை அடக்கி ஆள்வல்லவர். ஆகையால் அவர் ஓர் ஞானி. ஞானிகள் மாத்திரமே ஸாந்த ரஸத்தை வகித்திருக்கிறார்கள். பிரஹ்மன் அல்லது சுயேச்சையான பரம்பொருளுக்கு ஸாந்தரஸம் ஓர் குண விசேஷம். பிரஹ்மன் மாத்திரமே ஸாந்தன். பிரஹ்மனை உணர்ந்த ஞானிகூட ஸாந்தனே.

ஸாந்த பாவ பக்தன் உலக விஷயங்களில் ஈடுபாடு கொள்ளான்-முற்றிலும் இச்சையடக்கியவன். ஸாந்தம் என்பது மனோவமைதி அல்லது சமம் என்பதற்கு பொருந்தும், ஸாந்த பாவம் பயிலும் பக்தர்கள் ஆத்மராமா முனிகள் அல்லது தபஸ்விகள் என அழைக்கப் பெறுவர். இவர்கள் உபநிஷதங்கள் போன்ற சாஸ்திரங்களை கற்பதனாலும், ஏகாந்த வாழ்க்கை மேற்

கொள்வதாலும், தெய்வீக சகஜஞான அறிவு ஒளி களினுலும், தங்கள் சுபாவத்திற்கு ஒத்தவர்களோடு பழகுவதாலும் ஸாந்த பாவத்தை எழுப்ப வல்லவர் களாகிருர்கள். ஸாந்த பக்தன் சதாகாலம் ஸாந்தி அமைந்தவன். குழப்பமடையாதவன். வெளிப்புற நிகழ்ச்சிகளால் நிலை குலையாதவன். அவன் தன் அபிப்பிராயங்களில் உறுதியானவன். பிறருடைய சொல்படி மாற்றிக்கொள்ளாதவன். இறைவனிடத் திலே அவன் இளைப்பாறுகிருன் அமைதியாக. அலை கள் இல்லாத சமுத்திரம் போலக் காணப்படுகிருன். ஸாந்த பாவம் பயிலும் பக்தன் ஒருவனுடைய குணங் கள் இவைகள் ஆகும்.

## 2. தாஸ்ய பாவம்.

தாஸ்ய பாவம் என்பது ப்ரீதிரஸம் அல்லது பிரேம பக்தியின் விளைவே ஆகும். சாக்ய பாவம், வாத் ஸல்ய பாவம், மதுர பாவம் ஆகிய நிலைகளிலே காணப் படுகிற பொதுவான அம்ஸம் ஆகும். பக்தன் சதா காலமும் பகவானிடமிருந்து திருவருளைப் பெறுகிற வனுகத் தன்னைப் பாவிக்கிருன். பக்தன் மரியாதை அல்லது கண்ணியம் கலந்த பக்தியுடன் பகவானை நேசிக்கிருன். முந்தையது சாம்பிரம ப்ரீதி எனவும், பிந்தியது 'கௌரவ ப்ரீதி' எனவும் வழங்கப்படுகிறது.

தாஸ்ய பக்தன் தன்னைப் பகவானுக்குக் கீழ்ப்பட்ட வனுகக் கருதுகிருன். பகவானை நேசித்து வழிபடுவ தைத் தனது கடமையாகக் கருதுகிருன்; ஏனெனில், பகவான் அவனது யஜமானர். அவன் பகவானுக்குச் சேவை செய்கிருன்; பகவானின் தோற்றமாகக் கொண்டு உலகம் முழுவதையும் நேசித்து உலகத் தார்க்குச் சேவை புரிகிருன். அவன் எல்லோருக்கும்

தொண்டன். உயிர்கள் யாவற்றிற்கும் அவன் அடிமை. அவன் எல்லோரையும் தனது யஜமானர் களாகக் கருதுகிருன். ஏனெனில், எல்லாம் தன்னைத் தவிர, கடவுள். பக்தன் தான் பகவான் அல்லவென் றும் இதர யாவும் பகவான் என்றும் உணருகிருன். எப்போதும் பகவான் தன்னைக் காப்பாற்ற வேண்டு மென்றே பக்தன் கருதுகிருன்; ஏனெனில் அவனுக்குத் தனித்து சக்தி எதுவும் கிடையாது. அவன் கிங்கரன் —பகவானுடைய அடிமை. யஜமானர் ஏவலாளைக் கவனித்து ரக்ஷிக்கவேண்டும்.

தாஸ்ய பக்தன் தன் யஜமானராகிய கடவுளைத் தன்னைக் காப்பாற்றுமாறு எப்போதும் பிரார்த்திக் கின்ருன். பகவத் தியானத்திலே அவன் ஈடுபடு கிருன். இடையருத தியானத்தினுலே, அவன் இறுதி யில் பகவானிடம் தன்னையே சரண்புகுத்திக் கலக் கிருன்.

## 3. ஸாக்ய பாவம்

பகவான் ஒரு நண்பன். அவர் மிகவும் மேம்பட்ட ஆப்த சிநேகிதர். அவர் பிரதான நண்பர். அவர் ஒரு காதலர், ஒரு ரக்ஷகர், ஓர் வழிகாட்டி. அவர் தமது பக்தனை ஓர் நண்பனுகக் கருதுகிருர். “நான் என்பக்தனுடையஹிருதயம், பக்தனேஎன் ஹிருதயம்” எனப் பகருகின்ருர் பகவான். பக்தன் பகவானை உறவு, வர்ணம், அந்தஸ்து, உடை, குணுதிசயம் ஆகியவற்றிலே தனக்குச்சமமானவராகக் கருதுகிருன். எனினும், பகவானிடம் நம்பிக்கைக் குறைவு என்பதே கிடையாது. பகவானிடமிருந்து பிரிந்திருத்தலை மிக வும் உணருகிருன்; பிரிவைக் கஷ்டமாகக் கொள் கிருன். தனது நண்பனை விட்டுப்பிரிந்து ஒரு நண்பன்

வாழமாட்டான். நண்பர்கள் சேர்ந்து புசித்துக் கூடிப் பேசியும், சேர்ந்து வசித்தும் வருவார்கள். பகவானில்லாமல் பக்தன் வாழமாட்டான்.

## 4. வாத்ஸல்ய பாவம்.

இங்கே, பகவானைத் தனது மகனாகக் கருதுகிறான் பக்தன். உண்மையிலே, பகவான் அதே சொந்த உறவின் முறையிலே பக்தன் முன்னால் காட்சியளிக்கிறார். பக்தன் எண்ணுவதெதுவோ, அதையே பகவான் அவனுக்கு அளிக்கிறார். நீ விரும்பியதைப் பெறுவாய். இதுதான் சாஸ்வதமான சட்டம். பக்தனுக்கும் பகவானுக்கும் இடையிலுள்ள உறவு பெற்றோருக்கும் பிள்ளைக்கும் உள்ள உறவே ஆகும். பிள்ளையின் பாலுள்ள வாத்ஸல்யம் பகவான்பால் அதே பாணியில் திருப்பப்படுகிறது. பகவானுடைய யஜமானத்துவம் குழந்தைத் தன்மையின் அன்பு நிலைக்கு உயர்த்திச் சீர்ப்படுத்துகிறது. பகவான் யஜமானர் அல்ல, ஆனால் ஒரு குழந்தை. பொதுவாக, பக்தன் பாலுள்ள இத்தகைய உணர்ச்சியானது பகவானுடைய ஸ்வாதீன இயல்புக் கொள்கையை மறைவிடத்தில் வீழ்த்துகிறது. இங்ஙனம் பக்தன் மானுஷ்ய உறவு முறையைப் பகவானிடம் வளர்க்கிறான். இது தகுந்த வழியில் செலுத்தப்படாவிட்டால், சாக்ஷாத்காரத்தை அனுபவிக்க விடாமல் தடுக்கும். வாத்ஸல்ய ரஸம் அல்லது மகன்-பிதா-உறவு முறையை வளர்ப்பதாலே பக்தன் பகவானுடைய மகத்தான பெருமையை மறக்கும்படி செய்கிறது. பகவான் தனது மகன் என்ற கோட்பாட்டைச் சில பக்தர்கள் மிகுந்த அளவில் பற்றிக்கொண்டிருக்கிறார்கள். பகவான் தமது உத்கிருஷ்டமான வடிவத்திலே பிரசன்னமானாலுங்கூட, பகவான் வெறும் குழந்தையே என்ற கோட்பாட்டைத்

தள்ள முடியாமல் தவிக்கிறார்கள். தெய்வத் திருவருளின் மகிமையால் மாத்திரமே பகவானுடைய யதார்த்த உணர்வுக்குத் திருப்பப்படுவார்கள். பகவான் சர்வ கருணாமூர்த்தியானபடியால், அதை அவர் செய்வார்.

மாதர்களிடத்தில் இந்த ரஸம் பால்பெருகும்படி செய்து வருகிறது. மனோ உணர்ச்சிகள் ஸ்தூல உடம்பின்மீது நேரடியான நடவடிக்கையை எடுத்துக் கொள்கின்றன. கடுமையாக ஏதாவது ஒன்றைப்பற்றி ஒருவன் சிந்தனை செய்வானானால், அதுவாகவே அவன் நிச்சயமாக ஆகிவிடுகிறான்.

## 5. மதுர பாவம்.

ரஸத்தை வளர்க்கும் மகா உன்னதமான நிலை மதுர பாவம். பக்தன், காதலி இவர்களின் நிலை இதுவே. கடவுள் பிரதானமாக ஆனந்தமயமானவன் —தூய ஆனந்தத்தின் தோற்றம் மதுர-ரஸம். கடவுள் தூய ஆனந்தம். உயிரின் பிரதான இயல்பு ஆனந்தம். காதலன், பக்தன் ஆகியோரிடையில் உள்ள பக்தியின் உச்சநிலை அடையப் பெறுகிறது. இதர பக்திகள் வெறும் அரைகுறையானவை. காதலனுக்கும் காதலிக்கும் இடையேயுள்ள அன்பு இதர அன்புகளைக் காட்டிலும் மிகுந்த நெருக்கமானது. இந்த அன்பை உடைப்பது கடினமானது. இந்த அன்பை உணர்ந்து கொள்வதும் கடினம். இத்தகைய அன்பாகிய பக்தியை வளர்ப்பது கடினம்.

கடவுள் ஓர் பிரேமமூர்த்தி. அவர் சாட்சாத் மன்மதா-மன்மதன். மன்மதனின் மன்மதன் அக் கடவுள். கடவுள் மிகுந்த அழகு வாய்ந்தவர், கவர்ச்சி

படைத்தவர். அவர் சுந்தரம், காந்தம் உள்ளவர். அவரை நேசிப்பதென்பது பக்தியின் சம்பூர்ணத்தை விளக்குவதாகும். கடவுளிடத்தில் வைக்கும் பக்தி பக்ஷபாதமானதல்ல. கடவுள்மீது செலுத்தும் பக்தி உணர்ச்சியின் பரிபூரண நிலையாகும். மதுர ரஸமானது சிருங்கார ரஸத்தின் மிகுந்த இன்பநிலையின் மூலப்பிரதி ஆகும்.

பொதுவாக, உலகத்தில் சிற்றின்பமானது தாம்பத்யக் காதல் என்பதில் அதன் உன்னத நிலையை அடைகிறது. இந்தப் பரஸ்பர சம்பந்தத்தைப்போல், சிருங்கார அல்லது மதுர ரஸம் ஆத்மீயத் துறையிலே வளர்ச்சியின் உன்னத நிலையிலே உள்ளது. அது சரீராபிமான இன்பம் அன்று; ஆனால் தூய அன்பு, லௌகிகத்தைப்பற்றியதன்று. இத்தகைய பாவத்தை விருத்தி செய்வது மிகக்கடினம். இது பலன் தருவதைக் காட்டிலும் அபாயகரமானது—ஆரம்ப சாதகர்கள் விஷயத்தில்.

மதுர ரஸமானது மிகுந்த உயர்தரமானது. ஏனெனில், இதிலே ஒளிவு மறைவுகளோ, சம்பிரதாயங்களோ தனிப்பட்டவர் நோக்கங்களோ தாமதங்களோ தள்ளிவிடப்பட்டுள்ளன. பக்தி ஒன்றே எவ்வித மாசும் இல்லாமல் விருத்தி செய்யப்பட்டு வருகிறது. அபரிமிதமான சந்தோஷம் அல்லது ஆனந்தம் அடைகிறோம் மதுரபாவத்தை விருத்தி செய்யும்போது.

இது காம சம்பந்தமான தேட்டம் (ஆசை) அல்ல. காமாதுரர்களால் உணரமுடியாத தூய பக்தி இது. மக்களிற் பெரும்பாலோர் இதை உணரமாட்டார்கள்; ஏனெனில் பெரும்பாலோர் தூய இதயம் அற்றவர்களே.

மதுர-ரஸத்திலே, அணைத்துக்கொள்ளுதலை விரும்பும் ஆசை உண்டு. காதல் விளக்கத்தின் உச்சநிலை எது? பரஸ்பரமாய் அணைத்துக்கொள்ளுதலே காதல் விளக்கத்தின் பலன். இது லோகார்த்தமாயும் ஆத்மார்த்தமாயும் அமைந்திருக்கிறது. லோகார்த்தமாய், அது பற்றிலிருந்து பிறந்த பந்தம் ஆகும். ஆனால், ஆத்மார்த்தமாய்ச் சித்தப் பிரமையூட்டும் மோகாவேசத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான ஓர் சாதனம் ஆகும். காதல் வேட்கையின் இயக்கங்கள் அறிவுக்கெட்டாதவை. அவை அநுபவிக்கப்படும்; ஆனால் அறிவினாலே உணரக்கூடாதவை. இதுபோலவேதான் பிரஹ்மனாகிய மெய்ப்பொருள் விஷயத்தில் ஏற்படும் ஆனந்தமும். அது காரண காரியங்களிலிருந்தும் வாக்குவாதங்களிலிருந்தும் அப்பாற்பட்டு நிற்கும் நிலை — அறிந்துகொள்ள முடியாத நிலை. தத்துவ ஞானிகள் அதைத் தெரிந்துகொள்ளமாட்டார்கள்; வேதாந்திகள் அதை உணர்ந்துகொள்ளமாட்டார்கள். அது இதயத்தின் ஓர் நிலை ஆகும். அதனுடன் அறிவு என்ன செய்யக்கூடும்? குறிப்பிட்டதோர் நிலையின் அனுபவத்தை அனுமான நியாயத்தாலே அள்ளித்தர இயலாது. அனுபவம் விகசிக்கும்போது, அறிவு நின்றுவிடத்தான் செய்யும். பக்தி அனுபவமாய் இளகுகிறது. பக்தன் தன் காதலியின் அன்பிலே ஆழ்ந்து தன்னையே இழந்துகொள்கிறான்.

“கணவன் தன் மனைவியை இறுக அணைத்துக்கொண்டு இன்பத்திலிருக்கையில் அகம் புறம் அறியாமலிருக்கிறான். அதுபோல, பரம்பொருளின் பக்தி அணைப்பில் பரவசப்பட்டுக்கொண்டிருக்கும்போது, அவன் அகத்தையோ புறத்தையோ எதையுமறியாதவனாயிருக்கிறான்” என்று பிரஹதாரண்யக உபநிஷதம் முறையிடுகிறது. ஆனந்தம் மாத்திரமே நிலைத்திருக்

கிறது; வேறே எதுவும் இல்லை. பொருள் விளக்கமற்ற ஆனந்தம் விகசித்திருக்கிறது. கணவனும் மனைவியும் அல்லது பரம்பொருளும் பக்தனும் ஆனந்தம் எங்கிருந்து வருகிறதென்பதை அறியார்கள். ஆனந்த சாகரத்திலே அவர்கள் அழுந்திக்கிடக்கிருர்கள். கர்த்தாவும் போக்தாவும் பற்றிய உணர்வு அங்கு கிடையாது. நான் காதலன், அவன் காதலிக்கப்படுபவன் எனும் உணர்வு கலப்பற்ற தூய பரமானந்தத்திலே அமிழ்ந்துகிடக்கிறது. இப்பரமானந்தம் விளக்கப்பட இயலாதது. ஆழ்ந்த தூக்கத்திலே பரமானந்தம் அரும்புகிறது; ஆனால் அது எப்பொருளிடமிருந்தும் வெளிப்படவில்லை. சம்போகத்தில் பரமானந்தம் உண்டு; ஆனால் அது கணவனிடமிருந்தோ மனைவியிடமிருந்தோ வரவில்லை. பரம்பொருளைச் சாக்ஷாத்கரித்தலிலே பரமானந்தம் உளது. அது கர்த்தாவிடமிருந்தோ வரக்கிடையாது. நிலைத்திருக்கும் நித்திய சுபாவத்தினிலே பரமானந்தம் நிறைந்து கிடக்கிறது.

ஆண் பெண் பாலாரிடையில் மிகவும் ஆழ்ந்த காதற்பசி உள்ளது; பக்தன் இந்த பசியாகிய பாவத்தை வளர்த்து போக்தாப் பொருளின் உணர்விலே தன்னை மறக்கிருன். சம்போகம், விப்ரா லம்பம் என மதுர ரஸம் இருவகை கொண்டது. பரஸ்பர சுகத்தை விரும்பி அத்தியந்த சுயநலமற்றுச் சேருகின்ற காதலர்களிடையில் வேகமாக எழுகிறது ஆனந்த உணர்வு. சம்போகம் என்பது இந்த ஆனந்த உணர்வைக்காட்டிலும் அதிதீவிரமான ஓர் வகை பாவம் ஆகும் இதன் குணாதிசயங்கள் பல. விப்ரா லம்பம் என்பது காதலர்களின் எதிர்காலச் சம்போகத்தை அதி தீவிரமாக மதுரமாக்கும் பரஸ்பர சேர்க்கை அல்லது பிரிவுகாலத்தில் நிற்கிற ஓர் உணர்ச்சி. இது நான்கு வகைப்பட்டது.

(1) பூர்வராகம் :— காதலர்களின் பரஸ்பர நற்குணம், அழகு, யோக்கியதை இவற்றைக் கேட்ட போதோ அல்லது முதலாவது பார்வையின்போதோ சம்பவிக்கின்ற ரதி அல்லது ஆர்வம் ஆகும். இது விபாவங்களுடன் கூட இணைந்திருக்கும். (2) மனம்:— பின்வாங்காமல் தத்தம் இதயங்களிலே காதலர்கள் பரஸ்பரமாய்ப் பிணைந்துள்ள சேர்க்கை உணர்வு. இந்த உணர்வு அதி தீவிரமான சம்போகானந்த பரவசத்தை எதிர்க்க இயலாதது. மனம் என்பது இச் சேர்க்கை உணர்வைத் தடைப்படுத்துகிற பாவம் ஆகும். (3) பிரவேசம் :— ஏற்கனவே சம்போகித்த காதலர்கள் நீண்டகாலத் தடையால் பிரிந்துள்ள போது எழுகிற நிலையாகும். (4) பிரேம்வைச்சித்தியா:— தன் காதலியோடு பரமானந்த நிலையில் பிரத்தியக்ஷமாகச் சம்போகிக்கின்றபோது, ஆரம்பக் காதலன் பிரிவு ஏற்பட்டுவிடுமோ என்ற இலேசான உணர்வினால் அவஸ்தைப்படுகிற ஆழ்ந்த காம உணர்ச்சி.

நீங்கள் எல்லோரும் பக்தி பாவத்திலும் ரஸத்திலும் ஸ்தாபிக்கப்பெற்றவர்களாய், கிருஷ்ண பகவானுடைய ரஸத்தைப் பருகுவீர்களாக.

## 7. எச்சரிக்கை !

பூலோக அனுபவமான இல்வாழ்க்கை இன்பத்தினின்று முற்றிலும் மாறுபட்டது மதுர-ரஸம். ஒன்று மற்றொன்றாகத் தவறி எடுத்துக்கொள்ளப்படாது. பூலோக இல்லற இன்பம் சுயநலமே சுத்தமாகக் கொண்டது. ஒருவனின் சொந்த ஆத்மாவுக்குச் சந்தோஷம் கொடுக்கிறதனால், அது அவன் பொருட்டே ஏற்றுக்கொள்ளப்படுகிறது. ஆனால் பகவத் பக்தியிலே பக்தனின் ஆத்மாவுக்கு அல்ல பகவானுக்கே மகிழ்ச்சியைத் தருகிறது. தெய்வீக

பக்தி சுயநலம் அன்று. ஸத்வத்திலே அது பிறக்கிறது. ஆனால் இலௌகிகக் காமமானது ரஜஸினின்றும், உடல்களின் பற்றினின்றும் பிறக்கிறது. இலௌகிக இல்லற இன்பம் அகங்காரமான சுயநல உணர்ச்சியினின்றும் ஏற்பட்ட விளைவு. தெய்வீகப் பேரிணக்கமோ அகங்காரமற்ற இதர நல் உணர்ச்சியினின்று ஏற்பட்ட விளைவு. இலௌகிகப் பாசத்திற்கு வலிமையான சுயநலமே வேர் ஆகும். அகங்கார இழப்பின் பலனே தெய்வீக பக்தி. காமத்திற்கும் தெய்வபக்திக்குமுள்ள மகத்தான வித்தியாசம் இதுவே. ஒன்று காமம் — மற்றொன்று பிரேமை. இருள் ஒளிக்கு எவ்வளவு சொந்தமோ அவ்வளவு சொந்தமாக இவ்விரண்டும் அமைந்துள்ளன. பூலோகப் பற்று எவ்வளவு பூரணமாக விருத்தி செய்யப் பெற்றாலும், அது தெய்வீகப் பேரிணக்கத்தின் மகத்தான ஆனந்தத்திற்கு ஒருவனை இட்டுச்செல்லாது. பொருள்களிலே எரியும் பந்தபாசத்தின் காரணமாய்க் காமம் இதயத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறது. இலௌகிகன் எவ்வளவு மதாசாரமுள்ளவனாயிருப்பினும் அவனுக்குத் தெய்வ பக்தி தெரியாது. மனிதன் வெறும் மனிதனாகவும், பெண் வெறும் பெண்ணாகவும் இருக்கும் வரையில், தெய்வ பக்தியின் இரகசியம் புரிந்துகொள்ள இயலாது — புரிந்துகொள்ளப்பிரயத்தனம் செய்யவும் கூடாது. மானுஷத்தினின்று தெய்வீகத்திற்குக் கண்டிப்பான மாறுதல்தான் உண்மையான தெய்வ பக்திக்குத் தொடக்கமாகும்.

மதுர–ரஸத்தின் மிகவும் உயர்ந்த நிலைக்கு மஹா–பாவம் என்று பெயர். பகவத் பக்தியின் மகத்தான பேரானந்த நிலைக்குள்ளே பக்தன் பறக்கிறான். உற்சாக உணர்வு சிற்றின்பத்தொடர்பினின்று முற்றிலும் தனித்திருந்து நித்தியப் பொருளிலே இலயமாகின்றது.

ஸ்நேகம், மான, பிராணய, ராகம் மற்றும் அனுராகம் ஆகியவை நடுவிலுள்ள படித்தரங்கள். மகாபாவத்தின் உச்சிக்கு இவை இட்டுச் செல்கின்றன. இம் மஹாபாவத்தில்தான் ஜீவ உணர்வு பரமாத்மா உணர்விலே கலந்துகொள்கிறது. தீவிர விரக உணர்வு மகாபாவத்திற்கு முன்னுள்ள படித்தரமாகும். மதுர ரஸ பக்தர்கள் அல்லது மகோன்னத நிலையிலுள்ள பக்தர்களுக்கு பிருந்தாவன கோபிகள், கௌரங்கர், ஜயதேவர் ஆகியோர் உதாரணங்கள். பக்தன் இந்த பாவங்கள் அல்லது ரஸங்களிலே எதையேனும் பின் பற்றலாம். தெய்வீகத்தை அடையலாம். ஜீவனுக்குள்ள அபிலாஷையும் சாதனையும் முடிவாகிற மகா பாவம் அல்லது மதுரபாவத்தை இறுதியில் அவன் அடைகிருன்.

## அனுபவமும் சாத்விகமும்

புன்சிரிப்பு, நடனம், கீதம் இவற்ருல் அனுபவம் கிளரப்படுகிறது. இவை உத்வாத்ஸார் அனுபவம் ஆகும். வெளியுலகத் தொடர்பின்மை மற்றும் இதர உணர்ச்சிகளும் சாத்விக அனுபவத்தில் அடங்கியுள்ளன. நாட்டியம், பாடல், சிரிப்பு இவை போன்ற வெளிப்புறக் கிருத்தியங்களினுல் உட்புற உணர்ச்சிகளைக் காட்டுகிற நிலைக்கு அனுபவம் என்பது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் தரிசனம் கிடைக்கப்பெற்றவுடன் அல்லது அப்பகவானுடைய தரிசனத்திற்குச் சார்பான சூழ்நிலைகளிலே ஏற்படும் மனோபாவத்திற்குச் சத்வம் என்று பெயர். இச்சத்வத்தினின்று எழுகிற உணர்ச்சிகள் ஸாத்வீகம் வாய்ந்தவை. மயக்கம், வியர்வை, உற்சாகம். குழறும் குரலோசை, நடுக்கம், நிறம்மாறுதல், கண்ணீர் உகுத்தல், மூர்ச்சைநிலை ஆகியவை எட்டு வெளிப்புறச் சின்னங்களாகும்.

## 8. பிரிவுப் பாகுபாடுகள்.

பிரிவுப் பாகுபாடுகள் ஆவன :- கிருஷேட் (மெலிவு), தாபம் (கிலேசம்), ஜாகர்ய (தூக்கமின்மை), ஆலம்பசந்நியத (உதவியில்லை என்ற உணர்வு), அதிருத்தி (சிடுசிடுப்புத்தனம்), ஜடத (ஜடநிலை), வ்யாதி (வியாதி), மூர்ச்சித்த (மூர்ச்சை நிலை), மிருதி (மரணம்). பக்திப்பெருக்கு உணர்வினால் உண்டாகிற இரண்டு உணர்ச்சி நிலைகள் :- (பிரிவுற்றிருப்பதால்) தன்னை அடக்கிக் கொள்வதால் அல்லது தன்னை அடக்க முடியாமையால் ஏற்படுகிற மந்தநிலை ஒன்று—மற்றொன்று உற்சாகநிலை—இங்கே எட்டுவித சாத்வீக பாவங்கள் சாக்ஷாத்கரிக்கப்படுகின்றன.

## 9. ருத, அதிருத பாவங்கள்.

மதுர ரஸத்திற்கு இரண்டு விசேஷ அம்சங்கள் உள்ளன. ருத (புதிதாகத் தொடங்குதல்), அதிருத (முற்றிலும் பூரண பக்குவமடைதல்). ருக்குமணி மற்றும் இராணிகள் ருத பாவங்கள் கொண்டவர்கள். கோபிகள் அதிருத பாவங்கள் வாய்ந்தவர்கள். மதன—மோஹன—இரண்டு உண்டு. ஸ்ரீ கிருஷ்ணபகவான் முன்னிலையில் இருப்பதற்கு மதனம் என்றும், அவர் பிரிவின் போதுள்ள நிலைக்கு மோஹனம் என்றும் பெயர். ருத என்பது ஓர்வகை தீவிர உணர்ச்சி—பிரேமையின் ஆரம்பத்தில் சாத்வீக பாவத்தை உற்பத்தி செய்து வலுப்படுத்துகிறது. அதிருத என்பது பிரேமையின் பரிபக்குவ நிலையின் ஆழ்ந்த உணர்ச்சி.

அதிருத பாவத்தின் இரண்டு அம்சங்களிலே, மதனம் என்பது எல்லா உணர்ச்சிகளும் பூரணம் பெற்ற நிலை. இதற்குச் சான்று இராதை ஒருத்தியே.

ஆழ்ந்த பக்தியின் வெளித்தோற்றமான பல அம்சங்களைக் கொண்டது மதனம். மோஹனத்திற்கு முக்கியமாய் இரண்டு அம்சங்களே உள்ளன—உத்குர்ணு, சித்ர ஜல்ப. பகவானைப் பிரிந்ததினுல் ஏற்படும் ஆழ்ந்த கவலையால் உண்டாகும் பல்வேறு உணர்ச்சிப் பிறழ்ச்சிகளின் நிலையே உத்குர்ணு என்பது. சித்ர ஜல்ப என்பது பத்து வகைப்பட்டது. பிரிவு நேரிட்டமையால் அடக்கியுள்ள கவலை (வெடிகுண்டுபோல) வெளிப்படுதல். காதலன் வராமையினுல் கவலைப் படும்போது துணைக்காதலனைப் பார்த்ததும் எழுகின்ற ஆழ்ந்த சோகம். இதற்குத்தான் சித்ரஜல்ப என்பது.

**பத்து வகைகள் கொண்ட சித்திரஜல்ப :—**

**சித்திரஜல்ப பத்து வகைகள் கொண்டவை :—**

(1) **பிராஜல்ப :-** காதலிக்கு வரையப்படும் ஆழ்ந்த காதல் கடிதம். காதலன் காமாதுரனுயிருந்தும் தன் ஆழ்ந்த காதலைத் தெரிவிக்கும் நிலை. அகங்காரமாய்க் கண்டிக்கிற ஓர் வகை.

(2) **பரிஜல்பிதா :-** மேற்கண்ட அதே வகைதான். ஆனுல் காதலி தன் காதலனின் அஜாக்கிரதையான கவனமின்மை, முரட்டுத்தன்மை, வஞ்சகம் இவைகளை வாதித்துத் தன் பொறுமை, மேன்மை ஆகியவை பற்றித் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிருள்—ஆழ்ந்த காதலினுல்.

(3) **சுஜல்பா :-** தன் காதலின் விஷயங்களைத் தெரிந்துகொள்வதில் வெற்றி கண்ட காதலிக்கு எழுதப்படும் கடித விளக்கம். காதலன் பெரும் ஆவலுடன் ஆத்திரமாக விளக்குவது.

(4) விஜல்பா:- தன் காதலனைப்பற்றி நிந்திக்கிற காதல் விளக்கம். காதலியின் மனக்கவலை உணர்ச்சிகளைத் தெளிவாக எடுத்துக்காட்டுவது.

(5) யுஜல்பா:- ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய செப்பிடுவித்தை, மாயாஜாலங்களைப்பற்றி வர்ணிக்கும் நிந்தை கவலைகொண்ட காதலியின் விளக்கம்.

(6) சம்ஜல்பா:- பரிதபிக்கின்ற கடித விளக்கம். காதலியைக் கவனிக்காது உபேக்ஷிக்கும் காரணத்தினுலே காதலன் அவளைக் கேலிபண்ணுகிற தோரணையில் பரிதாபம் காட்டும் ஓர்வகைக் காதல்.

(7) பிரதிஜல்ப:- கிருஷ்ண பகவானிடம் செல்ல விரும்பாமைபற்றி கன்னி கிருஷ்ண தூதனிடம் தெரிவித்தல்; ஏனெனில் இதர ஸ்திரீகளிடம் அவர் தொடர்புகொண்டுள்ளார்.

(8) அவஜல்ப:- இரகசியப் பயத்தாலும் பொருமையாலும் கன்னிப் பெண் தான் செய்த குற்றத்தைப் பற்றிக் கூறுகிருள். ஒருவனிடம் காதல் தொடர்பு கொண்டதன்பின் அவன் தன்னைப் புறக்கணித்து ஏமாற்றுகிருன் என்ற அனுபவத்தை விளக்குதல்.

(9) அபிஜல்பிதா:- ஸ்ரீ கிருஷ்ணன் சிறிய குற்றமற்ற பறவைகள்போன்ற பிராணிகளுக்கும் கூட கொடுமை இழைக்கின்ருன். இது எவ்வளவு பரிதபிக்கத்தக்கதென விளக்குகிருள் கன்னிப்பெண். ஆதலால் எல்லோரும் கிருஷ்ணனுடைய தொடர்பினின்று விலகியிருத்தல் வேண்டுமெனக் கோருகிருள்.

(10) அஜல்பா:- அப்பெண் கிருஷ்ணனைக் குற்றம் சாட்டுகிருள். அவன் பிற ஸ்திரீகளிடமிருந்து இன்

பத்தை அனுபவித்துக்கொண்டு தனக்கு மாத்திரம் தொந்தரவும் துன்பமும் அளிக்கிறனென்று அவனுடைய ஏமாற்றுத்தனமும் மோசமும்பற்றி குற்றம் சாட்டுகிறுள்.

## ஆத்ம சமர்ப்பணம்.

ஆத்மாவைப் பூரணமாக ஆண்டவனிடம் சமர்ப்பித்தலே ஆத்ம சமர்ப்பணம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. தெய்வீக அருள் மற்றும் எக்காலத்தும் உதவி அளிக்கும் ஆண்டவனின் லாகவம் இவற்றின் உண்மையைப் பக்தன் உணருவதற்கு ஆத்ம சமர்ப்பணம் உதவுகிறது. தெய்வீகப் பிரபாவம் அவன் சரீரத்திற்குள் அருவிபோன்று பாய்ந்து, அதைத் தெய்வீக சாக்ஷாத்காரத்திற்கும் தெய்வீக உபகரணத் (முகாமை) திற்கும் தக்கதோர் சாதனமாக உருவாக்கி விடுகிறது. சமர்ப்பணமும் திருவருளும் சம்பந்தப்பட்டவை. சமர்ப்பணம் திருவருளைக் கீழே இறக்க, திருவருள் சமர்ப்பணத்தைப் பூரணமாக்குகிறது. சமர்ப்பணமானது இதய சுத்தியைத் தொடங்குகிறது. திருவருள் அதைப் பூர்த்தி பண்ணுகிறது. திருவருள் இன்றி, பூரண ஐக்கியம் சாத்தியமன்று உனது உடலைத் திருவருள் தெய்வமயமாக்குகிறது. இதனுல் இடையருத உயிர்ப்பு பெற்று சேமித்துவைக்கப்படும். தெய்வத்திருவருள்மூலம் மாத்திரமே அவனுடைய சரீரம் பூராவும் மின்சாரம் பாய்ச்சப்பெற்றதுபோல, புத்துயிர் பெறுகிறது.

சமர்ப்பணம் புரிவதால் சர்வேஸ்வரனைச் சாக்ஷாத்கரிக்கக்கூடும். ஒரு வாரத்திலோ அல்லது ஒரு மாதத்திலோ செய்யக்கூடியதல்ல சமர்ப்பணம் என்னும் பொருள். சாதனைத் தொடக்கத்திலிருந்தே நீ பூரண

சமர்ப்பணத்தைச் செய்ய முடியாது. வீம்பு பண்ணுகிற அற்பத்தனமான அகங்காரமானது உயிர்த்திருந்து அடிக்கடி எதிர்க்கிறது அது தனது பழைய பழக்கங்கள், பற்றுக்கள், ஆசைகளோடு அட்டைபோல ஒட்டிக்கொள்கிறது. அது தாறுமாருகச் சண்டை தொடுக்கிறது அது சமர்ப்பணம் செய்யவிடாது தடுக்கிறது. தன் மர்மமான அனுபவானந்தத்திற்கு அது சில பொருள்களைக்கோருகிறது. தன்னைப் பூரணமாகச் சமர்ப்பித்தல் வேண்டும். இக் காரணத்தால்தான் ஸ்ரீ கிருஷ்ண பகவான் "ஓ பாரதா! இறைவனிடம் உன்னை முற்றிலும் தஞ்சம் புகுத்திக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளினுர். சித்தம், அகங்காரம், உள்ளம், புத்தி மற்றும் ஆத்மா ஆகியவற்றை ஆண்டவனுடைய பாதகமலங்களிலே சமர்ப்பிக்கவேண்டும். இதை மீரா செய்தாள். ஆகையால் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருவருளைப் பெற்று அவனேடு இரண்டறக் கலந்தாள்.

இழிவான, திமிர்பிடித்த, பிடிவாதம். அகங்காரமானது வைரம், இரும்பு பொதிந்த காரை அல்லது எஃகு இவற்றைக்காட்டிலும் கடினமானது. இதை உருக்குவது வெகு சிரமம். சாந்தி மற்றும் ஞானத்திற்கு ஆபத்தான இந்த சத்ருவைக் கொல்லுவதற்குத் தீவிரமான கண்காணிப்பும் இடையருத பிரயத்தனமும் தேவை. தனது சொந்த திருப்திக்கு அது சூக்ஷ்ம ஆசைகளை வைத்துக்கொள்கிறது. அந்தர்முகமாய்ப் பாருங்கள். ஏகாக்ரம், விவேகம் ஆகிய நீளொளி (Search-light) மூலமாய் உங்கள் இதயத்தின் மூலைமுடுக்குகளில் ஒளிந்துள்ள சூட்சும ஆசாபாசங்களை துருவிக்கண்டுபிடித்து, அவற்றை அமைதியான ஒழுங்கான தியானத்தின் வாயிலாக இரக்கமில்லாமல் கொன்று போடுங்கள்.

உங்களுடைய தேகத்தைக் கவனிக்க வேண்டுமே என்று அலட்டிக் கொள்ளாதீர்கள். இவ்வுடம்போடு மேற்கொண்டு சேவை புரிவதற்காகப் பகவான் விரும்பினுல் அவர் இதை ரக்ஷிப்பார். இதைப் பகவானுடைய பாதாரவிந்தங்களிலே சரண் புகுத்திவிட்டுச் சாந்தியில் இளைப்பாறுவீர்களாக. அதை அவர் கவனித்துக்கொள்வார். உண்மையான பக்தன் ஒருவன், "எனக்குப் பத்து லக்ஷக்கணக்கில் ஜன்மங்கள் வரட்டும் அதனுல் பரவாயில்லை. ஆனுல் ஹரி பகவானுடைய பாதாரவிந்தங்களோடு நான் இணைந்திருக்க வேண்டும். பகவானிடத்தில் ஸ்வேச்சையான பக்தி இருக்கட்டுமாக. தூய்மை, ஆத்ம வலிமை, சுயநலமற்ற சேவை புரிதலாகிய மனப்பான்மை, தெய்வீக இயல்புகள் ஆகியவற்ருல் எனக்கு ஊக்கமுண்டாகட்டும்" என்று கூறுகிருன்.

"ஓ பகவானே, நான் உன்னுடையவன்" என்று உண்மையாக அந்தக்கரண உணர்ச்சியில்லாமல் (வெறுமனே வாயினுல்) நீ கூறினுல், இது நிஜமான முழுமையான ஆத்ம சமர்ப்பணமாக அமையாது. இது உனது இதயத்தின் மையத்தினின்று வருதல் வேண்டும். மூலாதார மாறுதலுக்கு நீ தயாராகிக் கொள்ளுதல் வேண்டும். உனது பழைய பழக்கங்கள், கொள்கைகள் வழிமுறைகளோடு நீ ஒட்டியிருத்தல் கூடாது. நீ விரும்புகிற பிரகாரம் ஒவ்வொரு காரியமும் நடைபெற வேண்டுமென்று நீ எதிர்பார்க்கக் கூடாது. தெய்வத்தின் சங்கற்பத்தை நிறைவேற்றுதற்பொருட்டு நீ வாழ்ந்தாக வேண்டும். மனம் திருப்திப்படுத்த விரும்புகிற ஆசாபாசங்கள் அனைத்தும் பற்றி நீ சிந்தனை பண்ணக்கூடாது. தெய்வீகத் திருவருள் அல்லது தெய்வீகச் சக்தியைக்கூட உனது சொந்த நோக்கத்தின் பொருட்டுப் பயன்படுத்திக் கொள்ளக்

கருதலாகாது. தடுத்து அடக்க முடியாத அகங்கார மானது பல்வேறு வழிமுறைகளில் ஆதிக்கம் செலுத்தித் தனது பழைய பழக்க வழக்கங்களை விட்டுவிட மறுக் கிறது. தெய்வீகத்தினின்று அது ஒவ்வொன்றையும் பெறுதற்குப் பிரயத்தனம் பண்ணும். தெய்வீகத்தி னிடம் அது தன்னை முற்றிலும் ஒப்படைக்க மறுக்கும். பல வருஷங்கள் சாதனை புரிந்த பின்னரும்கூட சாதகர்கள் ஆன்மீய நெறியில் ஏன் கணிசமான முன்னேற்றம் பெறவில்லை, என்பதற்கு இதுதான் காரணம்.

ஆத்ம சமர்ப்பணத்தில் எவ்விதமான நஷ்டமும் கிடையாது. ஆண்டவனிடமிருந்து நீ யாவற்றையும் பெறுகிறாய். இறைவனுடைய தெய்வீக ஐஸ்வர்யங் கள் அனைத்தும் நீ அனுபவிக்கிறாய். பகவானுடைய செல்வம் முழுவதும் உனக்குச் சொந்தம். உனது பாதத்தடியில் சித்திகளும் ரித்திகளும் உருண்டோடும். நீ பகவானோடு ஒன்றாக இணைகிறாய். தேவைகள், ஆசாபாசங்கள் ஆகியவற்றிலிருந்து நீ விடுதலை பெறு கிறாய். ஆன்மீயப் பசியும் நிஜமான ஆன்மீய தாகமும் கொண்ட சாதகன், பகவானுடைய தரிசனத்திற்காக ஆவல்கொண்ட சாதகன், தெய்வீகத்தின் பால் திரும்பித் தனது உடல், மனம், உயிர், ஆத்மா அனைத்தையும் ஆண்டவனுடைய பாதங்களிலே பிர திஷ்டை பண்ணுவதற்கு முற்றிலும் பரிவும் மகிழ்ச்சியும் கொள்ளுகிறான்.

ஆத்ம சமர்ப்பணத்தின் முதலாவது படித்தர மானது தன்னைப் பகவான் அல்லது குருவிடத்தில் சரண் புகுத்துதற்கு உறுதியான தீர்மானமே ஆகும். தனது போதகரின் சேவைக்கோ அல்லது மானுட சேவைக்கோ அல்லது ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுதற்

பொருட்டோ தன் வாழ்வை அர்ப்பணித்துள்ள சாதகன், தனது ஆத்ம சமர்ப்பணத்திற்குப் பிறகு செய்கிற காரியங்களினுல் அவன் கட்டுப்படமாட்டான். தெய்வ சாக்ஷாத்காரத்திற்குப் பிற்பாடுதான் ஆத்ம சமர்ப்பணம் பரிபூரணம் அடைகிறது.

ஆத்ம சமர்ப்பணத்தின் ஆரம்பநிலை குடும்ப வாழ்வைத் துறத்தலே ஆகும். அதி தீவிரமான வைராக்யமும் விவேகமும் பொருந்தியவனுய், தனது ஆன்மீய முன்னேற்றத்தில் உண்மையான அக்கறை உடையவனுய் யார் இருக்கிருனே அவன் உலகத்திலே இருந்தாலும்கூட ஆத்ம சமர்ப்பணம் செய்யவல்லவனே ஆகிருன். உலகத்திலே இருந்துகொண்டு உலகத்தின் மூலமாய்த் தனது உடல் பொருள் ஆவியைப் பகவானுக்குப் பூரணமாய்ச் சமர்ப்பித்துப் பகவானைச் சாக்ஷாத்கரிக்கிருன். ஆனுல் இந்த வகையில் சாதிக்கவல்லவர்கள் வெகு சிலரே. ஏனெனில் உலகவாழ்வு பலவித இடையூறுகளாலும் ஆசைகாட்டி மயக்கும் சக்திகளாலும் சூழப்பட்டுள்ளது; இவ்வளவு சிற்றின்பங்கள், தடுமாற்றங்களினூடே சாதகன் இருந்துகொண்டு பரிபூரண வைராக்கியம் அடைய வேண்டும் என்பது மிகவும் கடினமானது. ஆகையினுல், குடும்ப வாழ்வைத் துறத்தல் என்பதே அவனுடைய நெறியை மிருதுவாகவும், எளிமையாகவும் செய்யும். இப்போது விதை விதைக்கப்பட்டது. பின், சாதகன் தன் போதகரிடம் போய் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரிக்கிருன். இப்போது விதை முளைவிடுகிறது. அவன் தன் போதகரின் சேவையைத் தொடங்குகிருன். அவன் தன் பக்தியிலும் யதார்த்த சேவையிலும் முன்னேறும் அளவு, அவனுடைய சமர்ப்பணம் சக்தியில் அதிகரித்துப் பரிபூரணம் எய்துகிறது. அவனுடைய இதயம் கொஞ்சம் கொஞ்சமாய்த்

தூய்மை அடைகிறது. அப்பால் படிப்படியாக ஞான ஒளி அவனிடத்தில் உதயமாகிறது. எங்கும் நீக்கமற நிறைந்துள்ள மேலான பரம்பொருளாகிய ஆத்மனை அவன் அறிகிறன்.

துறவுக்குப் பின்னர் சாதகனால் செய்யப்படும் காரியங்கள் அவனைக் கட்டுப்படுத்தமாட்டா; ஏனெனில் அவன் தன் போதகர் அல்லது பகவானுக்குத் தன் செயல்கள் அனைத்தையும் அர்ப்பணிக்கிறன். சுயநலமெனக் கருதக்கூடிய காரியம் எதையும் அவன் செய்கிறதில்லை. ஆத்ம சமர்ப்பணத்துடன் ஒருவன் தன் போதகரைச் சேவை புரிவதன் மூலமாக இங்ஙனம் அவனுடைய இதயம் பரிசுத்தமாகிறது—இறுதியில், பகவானே அவனுடைய போதகராக ஆகிறர். இப்போது அவன் பகவானுக்குப் பூரணமாகச் சமர்ப்பிக்கப் பட்டவனுகிறன். எல்லாவற்றிலும் மேம்பட்ட சகஜ ஞானத்தை அவன் அடையப்பெறுகிறன்.

தொடக்கத்தில் மனிதப் பிரயத்தனம் இன்றியமையாதது. சமர்ப்பணம் சம்பூர்ணமானல், தெய்வீகத் திருவருள் அவனிடத்தில் உதயமாகிப் பின் அத்தெய்வீகச் சக்தியே சாதகனுக்காகச் சாதனை புரிகிறது. தெய்வீகத் திருவருளும் சக்தியும்கூடி கீழிறங்கியவுடன், அவை அவனுடைய உடல், மனம், இச்சா சக்தி, உயிர் ஆகிய அத்தனையும் பரிபூரணமாகச் சுவாதீனப்படுத்திக்கொள்கின்றன. அப்பால் சாதனையோ பிரம்மாண்டமான வேகத்துடன் செல்லுகிறது. ஆத்ம சமர்ப்பணத்தின் மூலம் பக்தன் தன் இஷ்ட தெய்வம் அல்லது சகுண பிரஹ்மத்துடன் ஒன்றுகிவிடுகிறன் —ஆத்ம பரித்தியாகம் அல்லது விரக்தியின் மூலமாய் ஞான யோகத்தில் பயிலும் வேதாந்த மாணவன் அல்லது சாதகன் சூக்ஷ்மமான மெய்ப்பொருளோடு இரண்டறக் கலப்பதுபோல. தெய்வீகத் திருவருள் சாத்தானையும்

அவனுடைய இராஜ்யத்தையும் அழிக்கிறது. சாதகன் பகிரங்கமாகச் சொல்லுவதற்கு வெட்கப்படும் எக்காரியத்தையும் செய்யக்கூடாது ஆப்படி அவன் செய்தால், அது அவனுடைய ஆத்மீய முன்னேற்றத்தைத் தடைப்படுத்தும். பகவான் சேவை எனும் பலிபீடத்திலே ஸ்தூல சரீரமும் மனமும் நிவேதிக்கப்படுகின்றன. இறுதியில் அவன் மனம் உள்ளே ஆத்மாவில் கலக்கிறது. சாதகன் ஜீவன் முக்தனுகவோ அல்லது ஸ்வாதந்திர மகானுகவோ ஆகிறுன்.

தைரியமுள்ள சாதகர்களே! பகவானிடமிருந்து திரும்பிப் போனுலும்கூட பகவான் உங்களை நேசிக்கிறுர். சிரத்தையுடன் நீங்கள் அவர்பால் திரும்பி பக்தி செலுத்திஞல், கடவுள் எவ்வளவு ஆழமாக உங்களை நேசிப்பார்! அவர் நேசம் மகத்தானது, பிரம்மாண்டமான மலைகளைக் காட்டிலும் மகத்தானது; அவரது அன்பு வெகு ஆழமானது, ஆழமளந்தறியக்கூடாத சமுத்திரத்தைக் காட்டிலும் ஆழமானது.

## பரபக்தி.

பக்தியில் மகா உன்னத நிலையில் உள்ளது பரபக்தி. சந்தனம், புஷ்பம், தூபதீபத்துடன் தொடங்கும் விக்கிரக வழிபாடு சாதாரண பக்தியாம். பரபக்தன் விக்கிரகங்களை வழிபடமாட்டான். மணியாட்டமாட்டான். நெற்றியில் திலகமோ அல்லது இதர சின்னங்களோ அணியமாட்டான். கோவில்களுக்குப் போகமாட்டான். அவன் தீர்த்த யாத்திரை புரியமாட்டான். எவ்வித சட்டதிட்டங்களுக்கோ அல்லது சம்பிரதாயங்களுக்கோ அவன் கட்டுப்படமாட்டான். வைதீக பக்தி பரிபூரண வளர்ச்சி எய்திவிட்டால் அது பரபக்தியாகிறது. ஒழுங்கான கட்டுப்பாட்டின் வடி

வத்திலே உள்ளது வைதீகபக்தி. பரபக்தியில் ஸ்தாபிக்கப் பெற்ற பக்தனுக்கு உலகம் முழுதும் பிருந்தாவனம் ஆகிறது அவன் எங்கணும் ஹரியை, ஸ்ரீகிருஷ்ணனைத் தரிசிக்கிறான். கிருஷ்ண பகவானைத் தன்னைக் காண்கிறான்.

நம்மாழ்வாருக்கு அனுபவம் அடியில் வருமாறு: அவர் பூமியைப் பாராட்டி "ஓ, இது வாமன மூர்த்தியின் பூமி!" என்று புகழ்ந்து பேசுவார். அவர் வானத்தைச் சுட்டிக்காட்டி, "அதோ, அவருடைய வைகுந்தம்!" என்று பிரகடனம் பண்ணுவார். குளிர்ந்த இளங்காற்றைச் சீராட்டி "இது என் அச்சுதா" என்பார். அவர் அக்கினி ஜ்வாலைகளை மனமாரத் தழுவி "ஓ, மரணமற்ற ஆனந்தப்" என்பார். சமுத்திரத்தின் பக்கமாகத் தமது கரங்களை உயர்த்தி "என்னுடைய மகோன்னதமான பகவான் பள்ளிகொண்டிருக்கும் கடலைக் காண்க" என்று கூக்குரலிடுவார். மலையைச் சுட்டிக்காட்டி "வாருங்கள்; கம்பீரமான ஹரிபகவான்; எனது விஷ்ணு வந்துவிட்டான், பாருங்கள்" என்று பகர்வார். கறுத்த மேகத்தைக் கண்டாலோ, "அவர் எனது ஸ்ரீ கிருஷ்ண பகவான்" என்பார்.

பரபக்தி வாய்ந்த பக்தர் நாமதேவர். அவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை எங்கணும் கண்டார். உலர்ந்த ரொட்டித் துண்டு எடுத்துக் கொண்டு நாய் ஓடினால், ரொட்டியை மிருதுவாக்கும் பொருட்டு அவர் ஒரு கோப்பை நெய்யை எடுத்துக்கொண்டு ஓடுவார். அவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை நாயில் கண்டார். துக்காராமும் அப்படியே. "கருப்பஞ்சாற்றிலே சர்க்கரை பரவியுள்ளது போலவே, கிருஷ்ண பகவான் உலகம் முழுவதிலும் வியாபித்துள்ளார்" என்று அவர்

கூறினார். பிரகலாதன் தன்னுடைய ஹரியைத் தூணிலே கண்டு, "கிருஷ்ண பகவான் தூணில் இருக்கிறார்" என்று தனது தகப்பனாரிடம் கூறினான்.

பரபக்தி ஒரு நாளில் இரண்டு நாளில் பெற்றுவிட முடியாதது. அதை வளரச் செய்வதற்கு நீண்டகாலம் ஆகிறது. பக்தியின் ஆரம்பப் படித்தரங்களை யெல்லாம் ஒருவன் கடந்தாக வேண்டும். அவன் கோவில்களுக்குச் செல்ல வேண்டும், பிரகாரங்களைச் சுற்றவேண்டும், புஷ்பம் சந்தனம் சாத்த வேண்டும். தீபாராதனை செய்யவேண்டும். அவன் பக்தர் களுக்குத் தொண்டு செய்யவேண்டும். ஜபம் புரிதல் வேண்டும். தியானம் செய்ய வேண்டும். நவவித மான பக்தியை அவன் பயிலல் வேண்டும். பக்தியைப் பற்றி முழங்குகிற இராமாயணம், பாகவதம் மற்றும் இதர புனித நூல்களையும் அவன் கற்றாக வேண்டும். ஆத்ம முன்னேற்றம் படிப்படியானது. பாபத்தால் கடினமான இதயம் மிருதுத்தன்மை பெறவேண்டும். பக்திக் கட்டுப்பாட்டை மிகுந்த பக்திசிரத்தையுடன் மேற்கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் வைதீக பக்தி, பரபக்தி அல்லது மகா உன்னத பக்தியாகப் புஷ்பித்து மலரும். கிருஷ்ண பகவானுடைய மகிமை களைப்பற்றி உற்றுக் கேட்பதாலும் பாடுவதாலும் பகவத் பிரேமை உணர்வு இயற்கையில் உண்டாகி விடும். பக்தியின் உணர்வு அதிகரிக்கிறது. அவை பாவம், பிரேமை, மஹாபாவம் என்ற பெயர்களால் வழங்கி வருகின்றன. "எல்லாம் பிரம்ம மயம்" என்று பிரமக்ஞானி ஒருவர் முழங்குகிறார். பரபக்தர் "சர்வம் விஷ்ணுமயம் ஜெகத்" என்று கூறுகிறார். "எல்லாம் வாசுதேவ மயமாய் உள்ளது" என்றும் பகர்கின்றார். பரபக்தியும் ஞானமும் ஒன்றே.

## பூஜை.

பகவானை வணங்குவது பூஜை ஆகும். ஒன்பது வகை பக்தியில் இது ஒன்று. இதற்கு அர்ச்சனை என்பதும் ஒரு பெயர். நிர்க்குண அல்லது சகுண ரீதியிலே பகவான் ஆராதனை செய்யப்படுகிறார். இந்த வழிபாடுகூட புறச்சாமான்களுடனே அல்லது முதிர்ந்த பக்தர்கள் விஷயத்தில் வெறும் மானஸீகமாகவோ செய்யப்படுகிறது. பக்தன் தனது இஷ்ட தெய்வத்திற்குப் பூஜை புரிகிறான். பக்தனுக்கு ஏற்றாற் போல, பூஜையானது வேத சம்பந்தமாய், தாந்திரீயமாய் அல்லது கலப்புடையதாய் அமையும். அவனவன் விருப்பப்படி எந்த முறையையேனும் பின்பற்றலாம்.

காலையில் நீராடி தினசரி சந்தியா அல்லது பிரார்த்தனை செய்வாயாக. தேவதா விக்கிரகம் ஒன்று இருக்குமானால் அது நலமே. இன்றேல், வெறும் தரைமீது பூஜை செய்யப்பட வேண்டும் — ஸ்தலத்தைச் சுத்தப்படுத்தி ஓர் மண்டலம் வரைந்த பிறகு புஷ்பங்கள், வாசனைப்பத்திகள், சந்தனம், தீபம், கற்பூரம், தூயநீர், நைவேத்தியம் இவை யாவும் பகவானுக்குத் தேவை. அமருவதற்கு ஓர் ஆசனம், சிறியமணி, சங்கு, கிடைக்குமானால் தாளங்கள் வேண்டும். பாவத்துடன் பக்தியுடன் பிரார்த்தனையைப் பகவானுக்குச் செலுத்து. புஷ்பங்களை வழங்குக. நீரில் நனைந்த அரிசியுடன் குங்குமம் கலந்தது அக்ஷதை. இதைப் பகவானுக்கு நூற்றெட்டு திருநாமங்களுடன் வழங்குக அல்லது மூலமந்திரத்தை நூற்றெட்டு தடவை உச்சரிக்கவும். சௌகரியம் போல் நன்னீராலோ, பாலினாலோ, நெய்யினாலோ, தேனாலோ அல்லது பஞ்சாமிர்தத்தினாலோ அபிஷேகம்

செய்க. பகவானுடைய லீலைகளும் மஹிமைகளும் பொருந்திய மகோன்னதமான ஸ்தோத்திரங்களை அல்லது பகுதிகளை பாகவதம் இராமாயணத்தினின்று பாராயணம் செய்க. கூடுமானால், சஹஸ்ரநாம அர்ச்சனையைப் புரிக. அர்க்கியம், பாத்யம், நீராஜன முதலியவை வழங்குக. எப்போதும் பகவானுடைய வடிவத்தைப் பற்றி மானஸீகமாய்த் தியானிக்கவும்.

பூஜை மத்தியில் நீ எதையாவது சேகரிக்க எழுந்து போகலாகாது. முன்கூட்டியே யாவையும் சித்தப் படுத்திக்கொள். கூடுமானவரை மந்திரங்களையும் ஸ்தோத்திரங்களையும் பிரார்த்தனைகளையும் உச்சரிக்கவும்–தெய்வ உணர்ச்சியைக் கிளப்புவதற்கு, புத்தாடைகளாலும் புஷ்ப மாலைகளாலும் பகவானை அலங்கரிக்க வேண்டும். அவரை ஆபரணங்கள், புஷ்பங்கள், நறுமணச் சந்தனம் ஆகியவற்றால் அலங்காரம் புரிக. இதை ஆழ்ந்த பக்தி சிரத்தையுடன் செய்யவும். சர்க்கரைப் பொங்கல் அல்லது வேறு உணவாவது பகவானுக்கு நிவேதிக்கவும். நெய், பால் முதலியவற்றால் தயாரிக்கப்பெற்ற உணவும், தயிர் காய்கறிகள், வெண்ணெய் ஆகியவற்றால் தயாரிக்கப்பெற்ற உணவும் மிகவும் சிபார்சு செய்யப்படுகின்றன—விக்கிரகத்தை எண்ணெயினால் தேய்த்துச் சுத்தப்படுத்தவும். உலகத்தில் தனக்கு மிகுந்த அன்பும் வாத்சல்யமும் வாய்ந்த ஒருவருக்கு பிரேமை கலந்த உபசாரணை எப்படிச் செய்யப்படுகிறதோ அப்படி பகவானை அலங்கரித்து உபசரித்தல் வேண்டும். விசேஷ நாட்களில் பல்வேறு சித்திரான்னங்கள் தயாரிக்கவும். தெய்வீக உணர்ச்சியுடன் சங்கீதக் கச்சேரி மற்றும் நாட்டியத்திற்கு ஏற்பாடு செய்யவும். மஹாபூஜை செய்க. தீபாராத்திகள் பண்ணவும். கற்பூரம் கொளுத்தவும். நெய் ஊற்றித் திரிபோட்டுத் தீபமேற்றவும். பகவானு

டைய மஹிமைகளைப் பாடுதலும் அவருடைய திரு நாமங்களை உச்சரித்தலும் நடைபெறட்டும். பிரார்த் தனைகளைப் புரிந்து பகவானிடம் உன்னை சரண்புகுத் திக்கொள். சாஸ்திர நூல்களில் பதிவு செய்யப்பெற்ற இறைவனுடைய லீலைகளை விளக்கும் கதைகளைக் கேட்பாயாக. "ஓ, பகவானே! என்மீது கருணை பாராட்டுங்கள், எனக்குத் திருவருள் புரியுங்கள்" என்று பகவானிடம் முறையிடுவாயாக.

பகவானுடைய பாதங்களில் உன் சிரசை வைத் துக்கொண்டு "ஓ கடவுளே! மரணமெனும் சுறுமீன் கொண்ட சம்சார சாகரத்தினின்று என்னைக் கரை யேற்றிக் காப்பாற்றுவாயாக. அதை வெகுவாய்ப் பயப்படுகிறேன். தங்களிடம் சரண் புகுந்துள்ளேன்" என்று பிரார்த்திப்பாயாக. பிறர்க்குப் பிரசாதம் வழங்கு. தினந்தோறும் கூடுமானால் ஏழைகளுக்குப் போஜனம் அளிப்பாயாக. அவர்களுக்கு ஆடையும் தக்ஷிணையையும் வழங்கு. ஏழைகளைப் பகவானாகக் கருதி வணங்குவாயாக. நிமித்த பாவத்துடன் எதை யும் செய்வாயாக. நீ செய்கிற பூஜையில் சுயநல ஆசைகளை வைக்காதே.

## II மானஸீக பூஜை.

பகவானுக்கு எவ்விதமான வெளிப்புறப் பொருள் கள் இல்லாமல் செய்யப்படுகிற பூஜைக்கு மானஸீக பூஜை என்று பெயர். பூஜைக்குத் தேவையான உப கரணங்கள் யாவும் மனத்திலே பாவிக்கப்படும். சம் பிரதாயமாகச் செய்யப்படும் பூஜையைப்போல, அவை யாவும் பகவானுக்கு வழங்குவதாக நீ பாவிக்கிறாய். வெளிப்புறத்திய பூஜையைக் காட்டிலும் இது எவ் வளவோ சக்தி வாய்ந்தது. ஏனெனில், பாஹ்ய

பூஜையில் செலுத்தப்படும் ஏகாக்ரத்தைக் காட்டிலும் மானஸீக பூஜையில் அதிக ஏகாக்ரம் ஏற்படுகிறது. வெளிப்புறப் பூஜையில் நீ செய்கிறதெல்லாம் மானஸீகமாய்ப் பாவிப்பாயாக. உன் இதயத்தில் பகவானுக்குச் சிம்மாசனம் சமர்ப்பி. பூஜை செய்; தீபாரதனை காட்டு, அர்க்யம் முதலியவை வழங்கு—மானஸீகமாக. ஷோடஸோபசாரப் பூஜையை மானஸீகமாய்ப் புரிவாயாக. பிரத்தியக்ஷமாய்க் கைகளால் செய்யும் காரியத்தின் மனோபாவனையே இது. செயலைக்காட்டிலும் பாவனை அதிக சக்தி வாய்ந்தது.

## III பரபூஜை.

பரபூஜை என்பது பூஜையில் அதி உத்கிருஷ்டமான வகையாகும். ஞானிகள் பூஜை இது. ஆத்ம சாக்ஷாத்காரத்தின் பயன் இதுவே. இறைவனை அனுபவிக்கிறதைத்தவிர வேறு எதுவும் செய்யவில்லை என்று பக்தன் உணருகிறான். "ஓ, பகவானே! பாவங்கள் இல்லாதவர் தாங்கள்! இருப்புமயமானவர் தாங்கள்! தங்களை நான் எங்ஙனம் பூஜிப்பது? தாங்கள் என் சொரூபமாய் விளங்கிக்கொண்டிருக்கையில், தங்களுக்கு நான் எவ்விதம் பிரார்த்தனை செலுத்துவது? தாங்கள் எப்போதும் புனிதமுடையவராயிருக்கையில், தங்களுக்கு நான் எப்படி அர்க்யம், பாத்யம் ஆகியவை விநியோகிப்பது? எப்போதும் தாங்கள் ஆப்தகாமராயிருக்கையில், தங்களுக்கு நான் எப்படி எதையாவது கொடுப்பது? சூரியனுக்கு ஓர் மெழுகுவத்தி தீபத்தைக் காட்டுவதா? சமுத்திரத்தை நான் ஓர் கண்ணாடிப்பாத்திர நீரால் குளிப்பாட்டுவதா? தாங்கள் சுயதிருப்தியோடிருக்கையில் தங்களுக்கு போஜனம் நான் வழங்குவது எங்ஙனம்?" என்று பக்தன் பகருகின்றான். இவ்விதமாக, இறைவனின் அந்த

மற்ற இயற்கை நிலையினைப் பக்தன் உணருகிறான். சித்தும் ஆனந்தமும் நிறைவாகியும் அந்தமற்றவராயும், நித்தியத்துவ இயற்கை நிலைபடைத்தவராயுமுள்ள இறைவனுக்குச் சம்பிரதாயமான பூஜை செய்ய இயலாமையை விளக்குகிறதாய்ப் பரபூஜை அமைகிறது. பரபக்தியும் பரபூஜையும் ஒரே படித்தரத்தைச் சார்ந்தவை.

## சிவ-பக்தி சூத்திரங்கள்.

(1) பக்தியில் ஓர் விசாரணை செய்வோம். (2) பக்தி என்பது பகவானிடம் வைக்கப்படுகிற ஆழ்ந்த பற்று. (3) ஒன்பது வகையான பக்தியை வளரச் செய்க. (4) ஐந்து பாவங்களை அப்பியஸிக்கவும். (5) முனிவர்களுக்குத் தொண்டு புரிக. (6) உன் குருவிடம் அத்யந்த பிரேமைகொள். (7) நெறிபிறழாத அத்யந்த பக்தி சிரத்தையை மேற்கொள். (8) பாகவதம், இராமாயணம் படியுங்கள். (9) பகவானுடைய மஹிமையையும் லீலைகளையும் பற்றி சிரவணம் செய். (10) தெய்வ சந்நிதானத்தை எங்கணும் பாவிப்பாயாக. (11) பரிபூரணமான முணுமுணுப்பில்லாத ஆத்மீயச் சரணாகதியைச் செய் (12) இறைவனுடைய நாமங்களை இடையறாமல் உச்சரிக்கவும். (13) அவர் புகழ்பாடிக் கீர்த்தனம் புரிவாயாக. (14) பக்தியின் விளைவே ஞானம். (15) பரபக்தியும் ஞானமும் ஒன்றே ஆகும்.

## பக்தி வளர்ச்சிக்குரிய குறிப்புகள் பதினொன்று.

பக்தியை வெறும் உணர்ச்சிநிலை என்று கருதினால், அது பெருந்தவறாகும். பகவானிடத்து வைக்கப்படும் அத்யந்த பிரேமையின் மூலமாய் இறைவனைச்

சாக்ஷாத்கரிக்கச் சகஜஞான சாதனை பக்தி ஆகும். நிச்சயமான சாதனை இது. ஒருவனுடைய உள்ளத்தையும் சங்கல்பத்தையும் நன்கு வலிமைப்படுத்தும் வகையில் பிரத்தியக்ஷமாய் மேற்கொள்ளப்படும் கட்டுப்பாடு பக்தி ஆகும் மெய்ப்பொருளை உண்மையாய் முற்றிலும் உணர்ந்தறிவதற்கு உற்ற நல்லதோர் சாதனம் பக்தி ஆகும்—விக்ரக ஆராதனையாகிய ஆரம்பநிலை தொடங்கி இறைவனோடு இரண்டறக் கலக்கும் இறை சாக்ஷாத்காரமாகிய உன்னத நிலைவரை. ஸ்ரீ இராமானுஜர் அவர்கள் இயற்றியுள்ள பதினொன்று அம்சங்களைப் பின்பற்றுவதால் இறை சாக்ஷாத்காரம் உங்களால் பெற இயலும். அவை பின்வருமாறு:- (1) அப்யாஸம் (2) விவேகம் (3) விமோகம் (4) சத்தியம் (5) ஆர்ஜவம் (6) க்ரியை (7) கல்யாண (8) தயை (9) அஹிம்ஸை (10) தானம் (11) அன்வஸாடம்.

ஒரு காரியத்தில் வெற்றியும் ஆதிக்கமும் பெறுதற்கு மேற்கொள்ளப்படும் இடைவிடாத முயற்சியே அப்யாஸம் ஆகும். தொடர்ந்த பயிற்சியின் மூலம் தன் மனத்தின் ஒருமைப்பட்ட நிலையைப் பெறவும் அதன் வெளிப்புறத்து வ்ருத்திகளையெல்லாம் கட்டுப்படுத்தவும் இவற்றினால் இறைவனாகிய ஒரு பொருளைப் பெறவும் சாதகன் முயலுகிறான். இடையறாத அப்பியாஸத்தினால் அவனுடைய மனத்தின் வெளிச் செல்லும் போக்குகளைக் கட்டுப்படுத்தி உட்புறமாக அவற்றைத் திருப்பி இடைவிடாமல் இறைவனைத் தியானிக்கிறான்.

நல்லது பொல்லாதது அறிவதற்கு விவேகம் அவனுக்குத் துணை புரிகிறது. எது சரியோ, அதைப் பின்பற்றி ஒட்டிவாழ்வதற்கும் (எது செய்ய வேண்டும்) எது தவறோ அதனின்று விலகி இருத்தற்கும் (எது

செய்யக்கூடாது) விவேகம் துணை செய்கிறது. நல்லது கெட்டது அவன் அறிகிறுனு? எது அவனை உயர்த்தி இறைவன் சமீபம் இட்டுச் செல்கிறது, எது அவனுக்கு நலமும் மகிழ்ச்சியும் ஸாந்தமும் அடையச் செய்கிறது அக்கோட்பாட்டை அவன் சரியானதெனக் கருதி அதைக் கடைப்பிடித்து அதன்படி செயலாற்றுகிறுன். ஆயாசமும் வேதனையும் அமைதியின்மையும் கொடுக்கக்கூடியதும், அவனது உண்மையான மனச்சாட்சியைக் குத்திப் புண்படுத்தக் கூடியதும், நன்மையினின்று அவனைக் கீழே விழுத்தாட்டிக் கடவுளிடமிருந்து அப்பால் விலகச் செய்வதும் எதுவோ அதைப் பொல்லாததாகக்கருதி அதனின்று முற்றிலும் நீங்கியிருப்பதோடல்லாமல் அதன் ஆதிக்கத்திற்கு உட்படாமல் பந்தோபஸ்தாய் பாதுகாப்பான நிலையிலிருக்கிறுன். ஆகார விஷயத்தில், சாத்வீக உணவு உட்கொள்ள வேண்டும், ராஜஸ அல்லது தாமஸ உணவு அதாவது எது உட்கொள்ளக்கூடாது என்ற பாகுபாட்டை அவன் உய்த்துணர்ந்து கொள்கிறுன். இங்ஙனம், நலம்கேடு ஆகியவற்றை விவேகத்திஞல் அறிகிறுன். ஞானிகளின் உபதேசங்களை ஏற்றுக் கொண்டு, அவர்கள் எச்சரிக்கின்ற விஷயாதிகளில் கவனம் செலுத்தி மரியாதை செய்வதோடன்றி ஞானிகளின் உத்தரவுகளுக்கும் கீழ்ப்படிந்து நடந்துகொள்கிறுன். இங்ஙனம், அவன் தன் குறிக்கோளை எய்துதற்கு இடையருது முயன்று சன்மார்க்கத்தைப் பின்பற்றுகிறுன்.

விமோகம் என்பது இறைவனை அடைய மேற்கொள்ளும் தீவிர முயற்சியாகும். தன் முன்னேற்றத்தைத் தடைப்படுத்தக் கூடிய அனைத்தையும் அகற்றுகிறுன். நித்தியத்துவமான, சாஸ்வதமான, அஞதியான மெய்ப்பொருளை நாடுவோர் உலகாயத சம்பந்

தங்களை ஒருங்கே தள்ளியாக வேண்டும். விஷயப் பொருள்களின்மீதுள்ள ஆசாபாசங்கள் எல்லாவற்றையும் சாதகன் துறந்தாகவேண்டும். நல்ல பிரயத்தனம், தன்னைத்தானே சோதித்துக்கொள்ளல் ஆகியவற்றின் மூலம் அவன் மனத்தின் தீய வ்ருத்திகளை அகற்றல் வேண்டும். அப்பால்தான் இறைவனை நோக்கி அவன் செல்லவும் கூடும். இரண்டு பானங்களை ஒரே சமயத்தில் ஒரே கோப்பையிலிருந்து உன்னால் அருந்த முடியாது. கடவுள்பால் முன்னேற வேண்டுமென்னும் கருத்துகொண்டால், அம் முன்னேற்றத்திற்கு ஏதுவாயில்லாத இதர விஷயங்களை அத்தியாவசியமாக நீ துறந்தாக வேண்டும். இதுவே இரகசியம். கடவுளிடத்துத் தீவிரமான நாட்டத்தைப் பெறுவதற்குரிய மகத்தானதும் மிகச்சிறப்பு வாய்ந்ததுமான வழி எதையும் விரும்பாமையே ஆகும்.

சத்தியம் என்பது சாதனையிலே நிச்சயமாய் அமையும் பிரதான ஆதார நியாயம் ஆகும். சர்வேஸ்வரன் சத்தியம். அவனைச் சாக்ஷாத்கரிக்கச் சத்தியமே வடிவெடுத்தவனாக நீ ஆகவேண்டும். நீ சத்தியத்திலே வாழவேண்டும். சத்தியத்தை மட்டுமே நீ சிந்திக்கவேண்டும். சத்தியத்தைப் பேசவேண்டும். உன் மனசாட்சிக்குப் பொருத்தமானதும் உண்மையுள்ளதுமான காரியங்களைச் செய்துவா.

ஆர்ஜவம் என்பது நேர்மை அல்லது யோக்கியம், கடவுளை நாடுவதில் மோசம், ஏமாற்றம் அல்லது பொய்க்கு இடமே இல்லை. கடவுள் உன் புத்திசாதுரியமோ விரும்பவில்லை. வஞ்சனை, பாசாங்குத்தனம், அறியாமை ஆகியவை முற்றிலும் நீங்கப்பெற்ற யதார்த்தமான பரிசுத்த இதயத்தை மாத்திரமே அவர் விரும்புகிறார். அவர் சர்வஞ்ஞர்—சர்வ வியாபக பர

மாத்மா — ஆகையால், அவரிடத்தில் எதையும் மறைப்பதற்கில்லை. பளிங்குக்கல் போன்றும் வெண்மையான பனிக்கட்டி போன்றும் உன் இதயம் அவ்வளவு தூய்மை படைத்தாய் இருத்தல் வேண்டும். புழுதிபடிந்த மிகப்பழமையான ஓர் கண்ணுடியில் சரியான தெளிவான உருவத்தை உன்னுல் காண முடியாது; அதுபோல, உன் இதயம் சிலந்திக்கூடு போல சுயநல ஆசையால் நிறைந்துவிட்டாலும், குறுகிய மனப்பான்மை, ஏமாற்றம் ஆகியவற்ருல் நிரப்பப் பெற்ருலும், இறைவனின் உண்மையான இயல்பை உன்னுல் உணர இயலாது. சாதகன் ஒரு பாலகனைப் போன்ற இதயத்தை பண்படுத்திக்கொள்ளவேண்டும்.

கிரியை அல்லது பிறர்க்கு நன்மை புரிதல் அடுத்த படியாக வருகிறது. உண்மையான பக்தனுகிய நீ எல்லோரிடத்திலும் அவனைப் (இறைவனை) பார்த்தல் வேண்டும் – ஏனெனில் நீ காணும் யாவற்றிலும் தோற்றமாயிருக்கிற வடிவம் அவருடையதாய் இருக்கிறது. நன்மை செய்வதும் பிறர்க்குத் தொண்டு புரிவதும் சாதகனுடைய அதிசிரேஷ்டமான கடமையாகும்— எவ்வித பாரபட்சமும் சுயநல நோக்கமும் இல்லாமல் துன்பப்படுவோர்க்குத் தொண்டுபுரிந்து உதவி அளித்துவருதல் மானுஷ்ய வாழ்வின் துயரங்களை உணர்த்தி உன் கண்களைத் திறக்கச் செய்யும். உலகாயத வாழ்வின் துயரம் நிறைந்த இயல்பை நீ உணரத்தொடங்குகிருய் சுயநலம் பொதிந்த கல்நெஞ்சம் பிறரிடத்து இரக்கம்கொள்ளக் கற்றுக்கொள்கிறது. அப்பால், தயை, காருண்யம், அன்பு ஆகியவை உன் இதயத்தில் வளரும். இதயம் தூய்மை அடைய, உன்னிடம் வைராக்கியம் உதயமாகிறது.

கல்யாணகுணம் அல்லது பிறர்க்கு நலம்புரியக் கருதுவது பக்தனுக்குத் தேவையான மற்ெறாரு பண்பாடு எனலாம் பக்தி ததும்பும் தூய இதயத்துடன் பிறருடைய நலத்தையும் க்ஷேமத்தையும் கோரிப் பகவானுக்குப் பிரார்த்தனை புரியவேண்டும். முதலில் பிறர்க்காகவும், உலக க்ஷேமத்திற்காகவும் அமைதிக்காகவும் அப்பால் உன்னுடைய முன்னேற்றத்திற்காகவும் பிரார்த்தனைபுரிவாயாக. உன் பகைவர்களிடத்தில் பொறாமையோ தீய உணர்ச்சியோ எதையும் வைத்துக் கொள்ளவேண்டாம். சகலருக்கும் நன்மையும் மங்களமும் » ண்டாக நீ நினைக்கவேண்டும். இதுவே ஓர் பக்தனுடைய யதார்த்த மனப்பான்மை ஆகும்.

தயை அப்பால் வருகிறது. கடவுள் தயா சொரூபி. கருணையே வடிவெடுத்தவர். அத்தகைய இறைவனை நீ சாக்ஷாத்கரிக்க முயல்வதால், அன்பும் தயையும் நிறைந்த ஸமுத்திரமா · நீ ஆகவேண்டும். அந்தமில்லாத ஆகாயம்போல விசாலமான இதயத்தை நீ பண்படுத்திக் கொள்ளல் வேண்டும். ஒருவனுடைய முன்னேற்றத்திற்கு இன்றியமையாத தெய்வீகக் குணங்கள் யாவும் அஹிம்சை அல்லது தீங்கு புரியாமை என்ற கோட்பாட்டிலிருந்தே உதயமாயிருக்கின்றன. அஹிம்சை உயிர் ஊட்டவல்ல சக்தி படைத்தது. துர் எண்ணம், பகைமை, கோபம், பொறாமை முதலியன இதனுடைய அபாரமான சக்தியின் முன்னால் நிற்க மாட்டா. ஆத்மாவின் விசேஷமான பண்பாடு இதுவே அஹிம்சையைப் பயிலுதல் இறுதியிலே வாழ்க்கையின் ஐக்கியத்திற்கும் ஒருமைப்பாட்டுக்கும் வழி காட்டுகிறது. சர்வ வியாபகமான சகோதரத்துவமும் விஸ்வாகார அன்பும் நிறைந்த உணர்ச்சியை அது உற்பத்தி செய்கிறது அடுத்தது தானம். ‘தானம் அல்லது தருமம் பலவித பாபங்களை மறைக்கின்றது’ என்று இயேசுகிறிஸ்துவப் பெருமான் இயம்பியுள்ளார்.

தருமத்தைத் தூய இதயத்துடன் துன்புறுவோர்க்குச் செய்தல் என்பது சக்திவாய்ந்த சாதனம். இச்சாதனம் இதயத்தை உயர்ந்த நிலைக்கு உயர்த்துவதன்றி அதனுடைய மாசுகளையும் அஞ்ஞானத்தையும் களைகின்றது. விரிந்த இதயத்தைக் கொள்ள வேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு தருமம் புரிகிருயோ அவ்வளவுக்கவ்வளவு புண்ணியம் வரும். இயற்கையின் சட்டம் இதுவே. அன்வஸாத என்பது உற்சாகமும் நம்பிக்கையும். இது ஒரு பக்தனுக்கு வேண்டிய முக்கிய குணம். ஆன்மீய நெறியிலே மனக்கவலைக்கு இடமென்பதே கிடையாது. உத்தம மனோபாவனையுடனும் பக்தி வைராக்கியத்துடனும் இடைவிடா முயற்சியுடனும் நீ செல்லல் வேண்டும். உன் முன்னேற்றத்தை எதிர்த்து விழுத்தாட்டவல்ல அநேக உத்வேகச் சக்திகள் உள. நம்பிக்கையை இழக்கக்கூடாது—கவலையோ படலாகாது. புயலை எதிர்த்துச் செல்லும் திறமை கொள்வாயாக; கஷ்டங்களிருந்தாலும் முன்னேற வேண்டும். சாதனை நெறியினின்று வெளியே தள்ளிவிடக்கூடிய சக்திகள் உன்னை எதிர்த்து நிற்கும். எப்படியேனும் நீ முன்னேற வேண்டும். உற்சாகமான விடாமுயற்சி, உத்தம மனோபாவனையுடன் கூடிய ஊக்கம், அந்தராத்மாவையே நம்பியிருத்தல் இவற்றுடன் சாதனை புரிவாயாக—இறுதியிலே வெற்றி உன்னுடையதாகும்.

## போலி பரபக்தர்களுக்கு !

பக்தி நெறியில் செல்லக்கூடிய நவசீஷன் (புதிய சீஷன்) “நான் பரபக்தியைச் சாதிக்கிறேன்; கோவிலுக்குப் போய் விக்கிரகங்களைத் தொழுவது அவசியமில்லை. விக்கிரகங்களைத் தொழுவதிலோ, புஷ்பங்களை வழங்குதலிலோ, தீபாராதனைக் காட்டுவதிலோ

என்ன இருக்கிறது?'' என்று கூறுகிறன். பயங்கர மான மனப்பிராந்தியினுல் அவன் அல்லல்படுகிறன். ஆத்மீய நெறியிலே ஆத்மீய குருவின் உபதேசமோ அல்லது துணையோ இல்லாமல் செல்லுகிறவர்களின் மனோநிலை இதுவே அவர்கள் இஷ்டப்பட்டதெல்லாம் செய்கிறர்கள். கீழ்மனம் தூண்டுகிற விஷயங்களைப் பின்பற்றுகிறர்கள் எவ்விதமான ஆன்மீக முற்போக்கும் செய்யவில்லை போலி வேதாந்த சிஷ்யர்களைப் போன்றவர்கள் இவர்கள்.

பக்தியை விருத்தி செய்வது மிகக் கடினம். வேதாந்தம், ஞானயோகம் இவைகளைப்போல அவ்வளவு கடினமானது பக்தியோகம். அகப்பகைவர்களான காமம், பேராசை, கோபம், பகைமை, அகங்காரம் மற்றும் பொருமை முதலியவை மிக மிகச் சக்தி வாய்ந்தவை. பக்தியைச் சாதிக்கும் மார்க்கத்திலே இவை தடைகளாய் நிற்கின்றன. M. A. வகுப்பில் உட்காருவதற்கு முன்பு மாணவன் மெட்ரிகுலேஷன், எப். ஏ, பி. ஏ. வகுப்புகளில் படித்துத் தேர்வு பெற வேண்டும். அதுபோல், சாதகன் பக்தி யோகத்தில் பல்வேறு படித்தரங்களை அல்லது பூமிகளைக் கடந்தாக வேண்டும். ஆரம்பத்தில் சரியை, கிரியை பயில வேண்டும். அவன் கோவிலுக்குப் போய்ப் பூஜை செய்யவேண்டும். அவன் பகவானுக்குப் பூமாலைகள் தொடுக்கவேண்டும். கோவில் சுத்தம் பண்ணவேண்டும். அபிஷேகத்திற்குத் தீர்த்தம் கொண்டுவரவேண்டும். கோவில் தீபங்களைச் சுத்தி செய்யவேண்டும். மணிகளை ஆட்டவேண்டும். பக்தி சிரத்தையுடனும் அத்யந்த பாவத்துடனும் இவை செய்தல்வேண்டும். மூர்த்தியின் சந்நிதானத்தில் அடிக்கடி சாஷ்டாங்க நமஸ்காரம் புரியவேண்டும்—கோவிலைச் சுற்றி வலம் வரவேண்டும்.

மணியாட்டுதல், தீபங்களை விளக்குதல், தீர்த்தம் கொணருதல், புஷ்பமாலை தொடுத்தல் இத்யாதி காரியங்களைச் செய்வது தங்கள் மரியாதைக்குக் குறைவு எனச் சில சாதகர்கள் கருதுகிறார்கள். கீழ்த்தரமான பணியாளனின் வேலை இதுவெனக் கருது கிறார்கள். இத்தகைய சாதகர்கள் கோடானுகோடி ஜன்மங்களிலும்கூட பக்தி வளர்த்தலைக் கனவு காண முடியாது. பக்தியோகத்தின் முக்கியத்துவத்தை அவர் கள் புரிந்துகொள்ளவில்லை. தென்னிந்தியாவிலுள்ள அறுபத்துமூன்று நாயன்மார்களின் வாழ்க்கை வர லாறுகளைக் கற்றுத் தெளியுங்கள் அவர்கள் கல்வியறி வற்றவர்கள். ஆனால் அவர்கள் அதி தீவிரமான சிரத்தையுடன் கூடிய பக்தியைப் பெற்றிருந்தார்கள். சரியை கிரியை அல்லது கோவில்களின் திருப்பணி களில் இரவும் பகலும் ஈடுபட்டார்கள். இத்தகைய திருத்தொண்டுகளின் மூலமாகவே அவர்கள் சிவ சாயுஜ்ய பதவி பெற்றார்கள்.

பரபக்தி நிலையை அடைவது பெரிதும் சிரம மானது. பரபக்தியும் ஞானமும் ஒன்றே. பரபக்தி என்பது மேலான பக்தி. முணுமுணுப்பில்லாத, களங்கமற்ற பரிபூரண சரணாகதி மூலமாய் அது வந் தமையும். இப்பரபக்தியைச் சாதித்தவர்கள் மீரா, நாமதேவர், கௌரங்கர், ஏகநாதர் ஆகியோர். மூடத் தனமாயும் அசத்தியமாயும் சாதகன் பரபக்தியின் மேலான நிலையை எய்துவிட்டதாகவும் கருதி சரியை கிரியைகளைப் பயில்வதில் வெறுப்புகொண்டால் பக வானிடத்துள்ள கொஞ்சநஞ்ச பக்தியும் விரைவிலே ஆவியாகப் போய்விடும். அவன் உலகாயதமெனும் மாயையின் ஆழமான பாதாளத்திலே சீக்கிரமே வீழ்ந்துவிடுவான்.

பணிவாயும் எளிய வாழ்க்கையோடும் இருப்பாயாக. பக்தியோக வகுப்பிலே நீ வெறும் சிறிய மாணவனெனக் கருதுவாயாக. பக்தி தீவிரத்தை வலுப்படுத்துவாயாக. ஜாக்கிரதையாய் இரு பக்தர்களின் சங்கத்திலே இரு—உலகக் கவர்ச்சிகளின் தூண்டுதல்களிலிருந்து உன்னைக் காப்பாற்றிக்கொள். சதா காலமும் விழிப்பாய் இரு. அப்பால்தான் பக்தியிலே நீ வளர்ச்சியடைவாய். அப்புறம்தான் தெய்வீகத் திருவருள் வந்திறங்கும். பொய்யான தைரியமும் திருப்தியும் ஆத்மீய நெறியிலே பிரம்மாண்டமான விக்கினங்கள். மாயையானது பல வழிகளில் வேலை செய்கிறது. அது பல்வேறு வடிவங்களை ஏற்றுக் கொண்டு பலவாருகச் சாதகனை ஏமாற்றுகிறது. பக்தியின் இரண்டாவது பூமி அல்லது நிலையைக் கூடச் சாதகன் எய்தாமலிருக்கும்போது, அவன் பரபக்தியின் மகோன்னதமான நிலையிலிருப்பதாகப் பொய்யாகக் கருதுகிருன். இதுவே மாயை. சாதனையை விட்டுவிடுகிருன். இத்தகைய பொய்க் கற்பனையினுலே முன்னேற்றம் மேற்கொண்டு நின்றுவிடுகிறது. ஒரு குருவின் கீழ் அவன் வசித்தால், அவன் செய்கிற தவறுகளைக் குரு சுட்டிக்காட்டுவார். ஆனுல் அவன் அப்படிச் செய்ய விரும்பவில்லை. பொய்யான சுதந்திரக் கோட்பாட்டைக் கொள்ளுகிருன். அவனுடைய மூர்க்கத்தனம், கட்டளையிடும் சுபாவம், தன்னம்பிக்கையுள்ள தன்மை, சுயத்திருப்தி, டம்பம் இவை யாவும் வெறியூட்டவல்ல திரைகளாகவும் தடுமாறி விழுத்தாட்டும் கற்களாகவும் செயல்படுகின்றன. அவன் எதைச் செய்கிருன் என்ருே, அவன் யதார்த்தநிலை எது என்ருே அவனுக்கே தெரியாது.

பரபக்தி நிலை எய்திய மகான் முற்றிலும் அச்சமில்லாதவராயும், ஆசையற்றவராயும், கோபமற்றவ

ராயும், நான், எனது எனும் அகங்கார மமகாரங்கள் இல்லாதவராயும் ஜ்வலிப்பார். அவர் மகா பணிவுடன் இருப்பார். எதன் மீதும் எவ்வித மனப்பற்றும் வைத்துக் கொள்ள மாட்டார். தெய்வீக ஐஸ்வரியங்கள் அனைத்தையும் அவர் அனுபவித்து ரசிப்பார். ஸ்ரீமத் பகவத்கீதையின் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள குணாதிசயங்கள் யாவையும் பெற்றிருப்பார். இத்தகைய அறிகுறிகள் இல்லையானால் நான் பரபக்தன் எனக் கூறிக்கொண்டால், அவனை நம்பாதீர்கள். அவன் ஓர் நயவஞ்சகன்; வேஷதாரி. அவனுடைய நூல்களுக்கு மதிப்பு கொடுக்கவேண்டாம். சிலர் திடீரென்று அழச்செய்வார்கள் சுத்தப் பொய். உடம்பின் கோளாறினால் அது அமைகிறது. பக்தனுடைய உண்மையான பிரேமை ததும்பும் கண்ணீர்த்துளிகள் அல்ல. உணர்ச்சியைப் பக்தியெனத் தவறாகக் கொள்ளக்கூடாது. சர்வ ஜாக்கிரதையுடன் இருப்பாயாக. அவர்களுக்கு ஆண்டவன் தக்க அறிவைத் தரட்டும். இவ்வுலகம் இத்தகைய போலி பரபக்தர்களிலிருந்து விடுதலை பெறட்டும். நம்பிக்கை, பக்தி, மகிழ்ச்சி இவைகளோடு உழைக்கும் நிஜமான பக்தி தாகம்கொண்ட சிரத்தை வாய்ந்த பணிவடக்கமுள்ள பக்தர்களே தேவை.

## நாம அபராதம்

தெய்வநாமத்தை உச்சரிப்பதால் அது நம்மைப் பாபங்களினின்று விடுவித்து மோக்ஷத்தை அடையவும் தெய்வபக்தியைப் பெறவும் உறுதுணை செய்கிறது. இவை அடைதல் மிகக் கடினம். ஆனால், நாமம் பக்தி சிரத்தையுடன் உச்சரிக்கப்படவேண்டும். அடியிற் கண்ட பத்துவிதமான பாபங்களினின்று விடுதலையாகி மேற்கொள்ளும் சாதனை தூய்மையாயிருத்தல் வேண்டும்.

(1) தபசிரேஷ்டர்களையும் பக்தர்களையும் தூஷித்தல். (2) தெய்வநாமங்களில் பேதம் காணுதல். (3) குருதேவரிடத்தில் மரியாதையில்லாமை. (4) சாஸ்திரங்களை எளிதாக இழிவுபடுத்தல். (5) மிதமிஞ்சிய புகழ் தவிர நாம மஹிமையில் ஒன்றுமில்லை எனத் தர்க்கித்தல். (6) தெய்வநாமத்தைக் கூறிக்கொண்டு பாபங்கள் செய்தல். (7) தெய்வநாமத்தை இதர பண்பாடுகளுடன் சேர்த்து, விரதம், தருமம், பலி முதலியவை சாதித்தல். (8) நாம உச்சாடனம் பயிலும்படி இத்தகைய உபதேசத்தைக் கேட்கத் தயாராயில்லாத தெய்வீகமற்ற தகுதியில்லாத மக்களை வற்புறுத்தல். (9) தெய்வநாம மகிமையைச் சிரவணம் செய்தான பிறகும், அந்த நாமத்தில் பக்தி இல்லாமை. (10) நான், எனது என்பவற்றைப்பற்றி அழுத்தமாய்ப் பேசுதலும் இன்ப நுகர்வுப் பொருள்களிலே பற்று வைத்தலும்.

மேற்கண்ட பத்து பாபங்களிலே எவனுவது ஒருவன் பராமுகமாய் எதையாவது ஒரு பாவத்தைச் செய்தானுல் அப்பாபத்தினின்று விடுதலைபெற ஒரே வழி அத்தெய்வ நாமத்தை மீண்டும் மீண்டும் உச்சரித்தலும் அத்தவறுக்காகப் பச்சாத்தாபப் படுதலுமே.

"நாமத் துவேஷமாய் நிகழ்த்திய பாபங்களுக்குச் சிறந்த பிராயச்சித்தம் அத் திருநாமமே ஆகும். அத் தெய்வ நாமத்தைக் கீர்த்தனையாகப் பாடுதல் மூலம், நமது ஆசைகள் யாவும் நிறைவேறக் கூடும்." —பத்ம புராணம்.

## ராதை பக்திக்கு உருவகம்

பிருந்தாவனம் அருகில் பர்ஷாணு என்னும் இடத்தில் ராதை பிறந்தாள். ஸ்ரீ கிருஷ்ண பிரேமைக்கு

உறைவிடமானவள். இத்தகைய உலக மாதாவாகிய ஸ்ரீ ராதைக்கு வணக்கம். பிரேமைக்கு முக்கிய அம்சம் மகாபாவனை அதாவது மகத்தான உணர்ச்சி. இந்த மகத்தான உணர்ச்சியின் உருவகம்தான் ராதை. ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் ராதை செய்த திருவிளை யாடல் மிக்க கருத்தாழம் கொண்டது. இதை தாஸ்ய, வாத்ஸல்ய மற்றும் இதர பாவனைகளினுல் உணரமுடி யாது. இதற்கு லாயக்கானவர்கள் சகிகள் மாத்திரமே. லீலைகளைப் பூரணமாக ரசிக்கிறவர்கள் அவர்களே. சகிகள் அல்லது ஸ்ரீ கிருஷ்ண பகவானை அவரது சகிகள் நிலையில் வணங்குகிறவர்கள் இந்த லீலையிலே உரிமை கொண்டாடுவார்கள்.

சகி ஸ்ரீ கிருஷ்ண பகவானேடு விளையாட, தானே விரும்புவதில்லை. கிருஷ்ணன் ராதையுடன் ஸரஸ விளையாடலில் ஈடுபடும்போது அவன் மிகுந்த உற்சா கம் அடைகிருன். கிருஷ்ணனின் கல்பலதா அதாவது நினைத்ததை நிறைவேற்றும் கொடியே ராதை. சகி களோ அக்கொடியின் இலைகள், பூக்கள், கிளைகள் ஆவார்கள். கிருஷ்ணனுடன் செய்யும் கிரீடை எனும் அமிர்தசத்துவானது கொடிக்கு நீர் பாய்ச்சும்போது, தமக்கு நேரே நீர் பாய்ச்சப்படும்போது அடையும் மகிழ்ச்சியைக் காட்டிலும் பல கோடி மடங்கு அதிக மாக இலைகளும் பூக்களும் மகிழ்ச்சி அடைகின்றன. சகிகள் ஸ்ரீ கிருஷ்ணபகவானின் ஆலிங்கனத்திற்காக ஆசைப்படுவதில்லை; ஆனுல் ராதையை ஆலிங்கனம் செய்ய ஸ்ரீ கிருஷ்ணபகவானை அவர்கள் தாமாகப் பிரயாசை எடுத்துத் தூண்டுகிருர்கள். அவர்கள் கிருஷ்ணனைப் பல சாக்குகளைக்காட்டி, இக்காரணத் திற்காக அவளிடம் அனுப்பிவைக்கிருர்கள். சுயமாக இன்பம் பெறுவதைக்காட்டிலும் கோடி மடங்கு அதிக மாக இதனுலே ஆனந்தம் பெறுகிருர்கள். ஒருவர் மீது

ஒருவர் கொண்ட சுயநலமில்லாப் பக்தியானது லீலையின்பத்தைப் பலப்படுத்துகின்றது. இத்தகைய சுயநலமற்ற தூய பிரேமையைக் காணும்போது அது கிருஷ்ணனை மகிழ்வூட்டுகிறது. கோபிகளால் உணரப்பெற்ற பிரேமையானது, உலக சம்பந்தப்பட்ட காமம் அல்ல. ஒருவன் தானே சிற்றின்பம் நுகர்வதையே உலக சம்பந்தப்பட்ட காமம் வலியுறுத்துகிறது. தங்களைப்பற்றிய நினைவைத் தள்ளிவிட்டுக் கோபிகள் கிருஷ்ணனுடைய இன்பத்தை நாடுகிறார்கள். அவர்கள் தங்கள் சொந்த இன்பத்தை நாடுவதில்லை. அவர்கள் கிருஷ்ணனைத் தழுவுகிறார்கள் கிருஷ்ணனுடைய இன்பத்திற்காக. கிருஷ்ணனை எவ்வளவு தான் பூஜை செய்து வணங்கினாலும் அவனை உங்களால் அடைய முடியாது. அவனைத் தெய்வமாகத் தியானித்தாலும் அடைய முடியாது ஓர் கோபியைப்போல் பணிவிடை செய்யாவிட்டால் அடைய முடியாது. லக்ஷ்மிதேவி கிருஷ்ணனை எவ்வளவோ நேசித்தும் அவனை அடைய முடியவில்லை.

ராதை தேவியாவள். ஜ்யோதிமயமான அழகுகளுக்கு அவள் இராணி அல்லது ஸ்ரீ கிருஷ்ணனுடைய காதல் விளையாட்டுக்களுக்கும் வணக்கத்துக்கும் உரிய ஸ்தலம் அவளேயாவள். எல்லாவற்றிலும் எங்கேயும் அவள் கிருஷ்ணனைத் தரிசிக்கிறாள். காதல் சுடர் வீசும் கண்களால் அவள் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்குகிறாள். கிருஷ்ண பகவான் மிகவும் மேலான நிகரற்ற காதலர். ஸ்ரீ ராதை அவருடன் ஒன்றாகப் பேசப்படுகிறாள். கிருஷ்ணனின் ஓர் பாகம் அவள்—அவனுடைய காதல் சக்தியில் ஓர் அம்சம் அவள். ஸ்ரீ கிருஷ்ணனின் விருப்பங்களைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்பதே அவள் வாழ்க்கையின் பிரதான கோட்பாடும் பக்திபூர்வமான பிரார்த்தனைகளின் முக்கிய நோக்கமும் ஆகும். ஆன

படியால் அவளை கிருஷ்ணமாயி என்று அழைக்கிருர்கள். அவளுக்கு உள்ளும் புறமும் நிறைந்திருக்கிருர் ஸ்ரீ கிருஷ்ண பகவான். சகலரையும் வசியம் பண்ணுகிறவர் சாக்ஷாத் கிருஷ்ணன். ராதையோ கிருஷ்ணனை வசியம் பண்ணுகிறவள். ஆகையால் அதிமேலான தேவதையாகிருள். வணங்கத் தகுந்த எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாக இராதை வணங்கப் பெறுகிருள். எல்லா உலகங்களை உஜ்ஜீவிக்கச் செய்கிறவளும் அவற்றின் தாயாகவும் இராதை விளங்குகிருள். வைகுண்டங்களில் வாசம் புரிகின்ற லக்ஷ்மிகளிலே தலைமைபுரியும் தெய்வம் இவளே. ஸ்ரீ கிருஷ்ண பகவானின் தெய்வீகக் குணங்கள் ஆறுக்கும் தலைமை புரியும் அதிதேவதையுமாகிருள். சௌந்தரியங்கள் அத்தனையும் ஒருமித்துக் குவிக்கப்பட்ட இருப்பிடமாக இராதை விளங்குகிருள். இந்த மூலஊற்று அல்லது ஆதாரத்திலிருந்தே லக்ஷ்மிகள் தங்கள் சௌந்தரியங்களைக் கைவரப்பெற வேண்டியதாகிறது.

ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா பரமானந்தத்தின் ஸ்வரூபம்; நிஜானந்தத்திற்கு மூலமாயும் ஆதாரமாயும் அவர் விளங்குகிருர் பரமானந்தம் என்பது தெய்வீக போஷணையுடன் கூடிய அமரத்துவத்தை வழங்கும் பரம ஔஷதம். சிற்றின்பமோ ஓர் விஷம் — அது நோயையும் மரணத்தையும் உண்டாக்குகின்றது. ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் ஓர் வித சக்தி உண்டு. அதற்கு அந்தரங்க சக்தி அல்லது ஸ்வரூபசக்தி என்று பெயர். கிருஷ்ணனுக்கும் அவருடைய பக்தர்களுக்கும் ஆனந்தம் வழங்கவல்ல சக்திக்கு ஹ்லாடினி சக்தி என்று பெயர்.

ஹ்லாடினியின் சாராம்சம் பிரேமை அல்லது கிருஷ்ணனுடைய சுயநலமற்ற பிரேமையாகும். இந்த

சுயநலமற்ற பிரேமைக்கு ஆனந்த சின்மயாரஸம் என்று பெயர். இந்த ரஸத்தின் தத்துவாம்சம் இராதை

மகாபாவனையின் ஸ்வரூபம் ராதை. ராதை என்ற பதத்திற்கு பக்தன் என்று பொருள். கிருஷ்ணனின் அந்தரங்கக் காதலிகளுக்குத் தலைமை வகிப்பவள் ராதை. வைகுண்டத்திலுள்ள எல்லா லக்ஷ்மிகளும் அவளுடைய விலாஸமூர்த்திகள். துவாரகையின் இராணிகள் அவளுடைய பிரதிபிம்பங்கள். பிருந்தாவனத்து லலிதையும் மற்றும் இதர கோபிகளும் அவளுடைய பல்வேறு உருவங்கள். இராதை தன் ஸூக்ஷ்மவடித்திலே கோபிகளிடத்தில் வியாபகமாயிருக்கிருள் கிருஷ்ணனுக்கு இன்பம் வழங்கும்பொருட்டு. ஆகவே, இராதை கிருஷ்ணனுக்கு ஆனந்தம் தருபவள், வசியம் செய்பவள், அவருடைய வாழ்க்கையின் சமஸ்தமுமாய் அவள் விளங்குகிருள். பிரஜாவிலுள்ள அழகிகள் எல்லாவற்றுக்கும் இராணி இவளே. தெய்வப்பெண் அழகிகளே, மகுடத்தில் தரிக்கவல்ல மாணிக்கமாய் விளங்குகிருள். நெருப்பும் அதன் உஷ்ணமும் பனிக்கட்டியும் அதன் குளிர்ச்சியும், புஷ்பமும் அதன் நறுமணமும்போல இராதையும் கிருஷ்ணனும் இணைபிரிக்க இயலாதவர்கள். ஸ்ரீ கிருஷ்ணனுக்காகவே, ராதையின் உடல் இனிய மென்மையினுலும் அழகினுலும் ஆக்கப்பட்டது. மகாபாவனையின் சூட்சுமசொரூபம் கிருஷ்ணனின் பிரேமை ஸ்ரீ கிருஷ்ணனின் மீதுள்ள அத்யந்த காதலே அவளுடைய ஆடை. அவளுடைய இனிய பிரகாசம் பொருந்திய புன்னகையே கற்பூர ஆராதனை. அவளுடைய எல்லாச் சிறந்த குணங்களும் அவளுடைய பூமாலைகள். பாவனைகள் அனைத்தும் அவளுடைய அங்கங்களுக்கு ஆபரணங்களாக அமைகின்றன. கிருஷ்ண நாமமும் நற்பண்புகளும் அவளுக்குச் செவி

நகைகளாய் மிளிர்கின்றன. கிருஷ்ண நாமமும் அவரது நற்பண்புகளும் அருவிபோல ஓடும்போது அதுவே அவளுடைய நாவாக மிளிர்கிறது. அவள் கிருஷ்ண னுக்கு பிரேமரஸம் அல்லது ஷியாம ரஸத்தினுல் தொண்டு புரிகிருள். பக்தியின் முடிவு மாதுர்யபாவனை யில் உள்ளது. காதல் அதிகரிக்கையில் காதலனும் காதலிக்கப்படுபவளும் ஒன்ருய் அமைகின்ருர்கள். ராதை இத்தகைய காதல் வகையைச் சார்ந்தவள். மாதுர்யபாவத்திலே, பக்தனுக்கும் பகவானுக்கும் இடையில் மிகவும் நெருங்கிய சம்பந்தம் உள்ளது. மாதுர்ய பாவத்தில் உடலுறவாகிய நிலை கிடையாது. சரீர சம்பந்தத்தின் சாயலே இல்லை. காமப் பற்றுள்ள மக்களின் மனமானது காமத்தினுலும் கீழ்த்தர சிற் றின்பப் பசியினுலும் நிரம்பப் பெற்றிருக்குமாதலால், அம் மக்களினுல் இந்தப் பாவனையை உணர்ந்து கொள்ள இயலாது. ஸூபிஸ்ட் முனிவர்கள்கூட காத லனும் காதலிக்கப்படுபவளும் ஒழுகுகின்ற மாதுரிய பாவத்தைக் கைக்கொண்டவர்களாக விளங்குகிருர் கள். ஜயதேவரால் எழுதப்பட்ட 'கீதகோவிந்தம்' எனும் நூல் மாதுர்ய ரஸத்தினுல் நிரம்பப் பெற்றிருக்கிறது. மாமுனிவர்கள் கையாளுகிற காதல் பாஷை உலகாயத மக்களால் உணர்ந்துகொள்ள இயலாது. கோபிகள், இராதை, மீரா, துக்காராம், நாரதர், ஹபீஸ் இவர்கள் மாத்திரமே இப்பாஷையைப் புரிந்துகொள்வார்கள்

ஸ்ரீ கிருஷ்ண பகவானின் காதலியான இராதைக்கு வெற்றி விளங்குக! தேவகியின் மகிழ்ச்சி வடிவமான வரும், யோகிகளின் குறிக்கோளாக விளங்குபவரும், பக்தர்களின் புகலிடமானவரும், யசோதைக்கும் நந் தாவுக்கும் ஆனந்தம் தருபவருமான ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு வெற்றி, வெற்றி விளங்குவதாக! அவர்

களுடைய நல்லாசிகள் உங்கள் எல்லோருக்கும் உண்டாவதாக !

## ஆஸ்திக ராமனும் நாஸ்திக கோபாலனும்,

**நாஸ்திக கோபாலன் :-** ஓ, ராமா! தினந்தோறும் பிரமாதமாய்ப் பேசுகிருயே, அந்த உனது கடவுள் பிரஹ்மனை எனக்குத் தயவுசெய்து காட்டு. கடவுள் உண்மையில் இருக்கிருரென்ருல், இப்போதே என் கண்களால் அவரை நான் பார்க்கவேண்டும்.

**ஆஸ்திக ராமன்:-** கோபால், இக்குச்சியால் உன்னை அடிக்கிறேன். உன் வலியை எனக்குக் காட்டு.

**கோபாலன் :-** ராமா, என் வலியை உனக்கு எப்படிக் காட்ட முடியும்? உன் கேள்வி முற்றிலும் யுக்திக்கு ஒவ்வாததாய் இருக்கிறது. வலியை ஒருவன் தானே உணர வேண்டியதாகும்.

**ராமன் :-** ஓ, கோபாலா! கடவுள் விஷயத்திலும் இதேமாதிரிதான். இடையருத ஆழ்ந்த தியானத்தின் மூலமாய் நீ அவரை சாக்ஷாத்கரிக்கவேண்டும். புலன்களுக்கும் மனத்திற்கும் எட்டாத தொலை தூரத்தில் அவர் இருப்பதால், இந்த ஊனக் கண்களால் அவர் பார்க்கப்படமாட்டார்.

**கோபாலன் :-** கடவுள் புலன்களுக்கு எட்டாத தூரத்தில் இருக்குமேயாளுல், அவர் இல்லாமை அதாவது பூஜ்யம்தான். வெறும் ஓர் சொல், எதிர் மறையான கோட்பாடு, தத்துவார்த்தக் கொள்கை. அத்தகைய வெறுமையான எதிர்மறை நிலையைப்பெற நான் விரும்புகிறதில்லை. கடவுளை அடைவதால், எந்தவிதமான லாபத்தையும் என்ருல் பெற இயலாது.

பல்வேறு இந்திரிய நுகர்ச்சிப் பொருள்களை இவ்வுல கிலே பெற்று அனுபவித்து வருகிறபோது, முற்றிலும் ஆனந்தமடைகிறேன். இந்தப் புலன் நுகர்ச்சி இன்பங் களுக்கு அப்பால் எதுவும் இல்லை. அர்த்தமற்ற எதையோபற்றி நீ ஏன் பேசுகிறாய்? புலன்களுக்கு அப்பாற்பட்ட விஷயத்தைப்பற்றி? இது எப்படிப் பொருந்தும்? நீ சொப்பனங் காண்கிறாயென்று நான் கருதுகிறேன். நீ மேக மண்டலத்திலிருக்கிறாயென்று எண்ணுகிறேன், ஓ, ராமா! இத்தகைய விஷயங்களை நான் நம்பவேமாட்டேன். நான் ஓர் விஞ்ஞானி. மிகப் பொருத்தமான ரஸாயன ஆராய்ச்சி நிலைய அத் தாட்சிகள் தேவை.

ராமன் :— ஹா, ஹா, ஹா, ஹா! மிகவும் நன்றாய்ச் சொன்னாய்! கோபாலா! உன்னிடம் இரக்கப்படுகி றேன் உண்மையாக. நெற்றியிலே கொம்புகள் இரண்டு முளைத்திருக்குமானால் உன்னைப் பசுவென்றோ எருமை என்றோ அருமையாய்ப் பொருத்தமாய் நான் அழைத்திருப்பேனே! ரஸாயன ஆராய்ச்சி நிலைய அத்தாட்சிகளையா கேட்கிறாய்? முற்றிலும் நேர்த்தி யாயிருக்கிறது. எல்லை கடந்த சர்வ வியாபகமான சர்வேஸ்வரனை, ஆராய்ச்சிக் குழாய், உலைக்குழல், ரஸாயனப் பொருட்கள் ஆகியவற்றுக்குள் எல்லைக்குட் படுத்த நீ விரும்புகிறாய். ரஸாயனப் பொருட்களின் உற்பத்திக்குக் காரணம் இறைவனே. அணுவுக்கும், இதர ஜீவப் பொருள்களுக்கும் அடிப்படையில் இருப்ப வர் கடவுள். அவர் அன்றி அணுவோ எலக்ட்ரான் சத்துவோ அசையாது. அவர்தான் அந்தர்யாமி. அவர் நியாதர். அவர் அன்றி அக்கினி எரியாது; சூரியன் பிரகாசிக்காது; காற்று அசையாது. அவர் இன்றி, உன்னால் பார்க்கவோ, பேசவோ, கேட்கவோ, நினைக்கவோ முடியாது. பூமியின் ஆகர்ஷண சக்தி,

இழுக்கும் காந்த சக்தி, தள்ளும் சக்தி, ஒட்டிக்கொள் கிற சக்தி ஆகிய எல்லா இரஸாயன சட்ட திட்டங்களை வகுத்து ஆளுபவர் கடவுளே ஆவார். சட்டம் வழங்கு பவர். பக்தி சிரத்தையோடு அவரை வணங்குவாயாக. விஞ்ஞான சாஸ்திரங்களுக்கெல்லாம் மேலான சாஸ் திரத்தை பிரம்ஹ வித்தையை அவர் அருளாலே அறி யலாம். முழு ஞானத்தைப் பெறலாம். மோக்ஷத்தை அடையலாம்.

கோபாலன் :- அர்த்தமற்றது. விஞ்ஞான சாஸ்தி ரங்களுக்கெல்லாம் மேலான விஞ்ஞான சாஸ்திரமா? ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை, ஹார்வர்டு சர்வகலா சாலை இவற்றிலேதான் படித்தேன். இத்தகைய சாஸ் திரம் ஒன்று இருப்பதாக நான் கேள்விப்பட்டதே கிடையாது. சொப்பனங் காண்கிறவன் மாத்திரம் நீ அல்ல, பொய்யனும்கூட நீ!

ராமன் :- கோபாலா! வெட்கங்கெட்ட வெறும் வார்த்தைகளைப் பேசவேண்டாம். அடக்கமாய் மரி யாதையாய்ப் பேசு. கண்ணிய புருஷனாக நடந்து கொள். சௌனகருக்கும் ஆங்கீரஸருக்கும் நடந்த ஸம்வாதத்தைச் சிறிது கவனிப்பாயாக. கிரஹஸ் தாஸ்ரம கண்ணிய புருஷரான சௌனகர் ஆங்கீரஸ முனிவரைப் பார்த்து, "ஓ, பகவானே! எந்த ஒரு சாஸ்திரத்தை அறிந்தால், இதர எல்லா சாஸ்திரங் களும் அறியப்படுமோ, அந்த ஒரு சாஸ்திரத்தை எனக்கு உணர்த்துங்கள்" என்று கேட்டபோது, ஆங்கிரஸர், "அதுதான் சாஸ்திரங்களுக்குச் சாஸ்திர மான பிரஹ்மவித்தை. இதை அறிந்தால், நித்தியத் துவ பிரஹ்மனைச் சாக்ஷாத்கரிக்கலாம்." என்று பகர்ந் தார். சாஸ்திரங்களுக்குச் சாஸ்திரமான பிரஹ்ம வித்தையின் ஞானத்தை அடையப்பெற்றால், கேட்க

முடியாததைக் கேட்கலாம், பார்க்க முடியாததைப் பார்க்கலாம், அறிய முடியாததை நீ அறியலாம். நினைக்க முடியாததைக்கூட உன்னால் நினைக்க இயலும். தங்க பாளத்தை அறிந்தால், அதன்மூலம் செய்யப்படும் தங்க ஆபரணங்கள் யாவும் அறிவாய். பெயரில்தான் வித்தியாசம். கத்தரிக்கோல் இரும்பினால் செய்யப்பட்டது இதர இரும்புச் சாமான்களை எல்லாம் தெரிந்துகொள்ளலாம். எல்லாம் இரும்பு என்பது உண்மை. இவ்விதமாகத்தான் சாஸ்திரங்களுக்குச் சாஸ்திரமாக பிரஹ்ம வித்தையும் இருக்கிறது. எல்லா இலௌகீகச் சாஸ்திரங்களுக்கும் அடிப்படையானது பிரஹ்ம வித்தை அல்லது அத்யாத்மீய சாஸ்திரம். இம்மகோன்னதமான சாஸ்திரத்தை நேரடியான சகஜ உணர்வினால் அறிவாயானால், இதர இலௌகீக சாஸ்திரங்களை யாவும் அறிவாய்-களிமண்ணைப் பற்றிய ஞானம் உனக்கு வந்துவிட்டால், களிமண்ணினால் செய்யப்பட்ட பொருட்கள் யாவையும் நீ அறிவது போல. எந்த சர்வகலாசாலையிலும் சாஸ்திரங்களுக்கு எல்லாம் தலைமையான இச்சாஸ்திரத்தைக் கற்றுக் கொள்ள முடியாது. புலன்களையும் மனத்தையும் நீ அடக்கியான பிறகு, பிரஹ்ம ஸ்ரோத்திர பிரஹ்மநிஷ்ட குரு ஒருவர்மூலமே நீ கற்றுக்கொள்ள வேண்டும். வனாந்திரங்களிலே ஒரு மரத்தடியில் தீர்க்கதரிசி அல்லது மகரிஷி அல்லது சுதந்திர ஆத்மஞானி ஒருவரால் நீ கற்றுக்கொள்ளப்படுவாய். வனாந்திர சர்வ கலாசாலை இதுவே. அங்கே அபூர்வமான கட்டுத் திட்டங்களுக்கு அடங்கியாக வேண்டும்.—இக்கட்டுப் பாட்டினால் அலையும் மனமும், வெளிச் செல்லுகின்ற புலன்களும் அடங்கும். உலகத்தில் எந்த சர்வ கலா சாலைகளிலும் இக்கட்டுப்பாடு இருக்கமுடியாது.

கோபாலன் :- அங்கே மாணவர்கள் என்ன ஆகாரம் சாப்பிடுகிறார்கள்? ஹோட்டல்கள் உண்டா? நேர்த்தியான அறைகள் உள்ளனவா?

ராமன் :- முமூட்சுக்களில் சிலர் வாயு பக்ஷண சாதனை புரிகிறார்கள். யோக சாதனை மூலமாய் சில நாள் அவர்கள் வாயுவை உட்கொண்டு வாழ்கிறார்கள். கந்தமூலங்கள் (கிழங்குகள்) உட்கொள்கிறார்கள். உலர்ந்த மாவு புசிக்கிறார்கள் சிலர். கூரை வீடுகள் அல்லது பெரிய குடிசைகள்தான் இவர்களின் வாசஸ்தலம் — கங்காதீரங்களிலே.

கோபாலன் :- அவ்வளவுதானா? உங்களுக்கு கொஞ்சம் வெண்ணெய், மிட்டாய்கள், வாழ்த்துப் பானம் ஆகியவை கிடைக்காதா? சத்துள்ள உணவும் பழங்களும் இல்லாமல் அவர்கள் எப்படி வாழக்கூடும்?

ராமன் :- பதனம் செய்யப்பட்ட பழம், வெண்ணெய், மிட்டாய்கள் — இவை சொப்பனத்தில்கூட காணமுடியா. சுகாதாரத்திற்கு இவையெல்லாம் தேவையல்ல. பிராணாயாமத்தையும், கேசரி முத்திரையையும் யோகிகள் பயிலுகின்றார்கள். சமாதியில் புகுகின்றார்கள் — அம்ரிதஸ்வர எனும் ஸஹஸ்ராரத்தினின்று சொட்டுச் சொட்டாய் விழும் அமிர்தத்தைப் பானம் புரிகிறார்கள். அவர்களிடம் மகத்தான வலிமையும் ஊக்கமும் தென்படுகின்றன. மூச்சை அடக்க அவர்களால் முடிகிறது. அவர்கள் விரும்புகிறபடி எத்தனை வருஷங்களேனும் வாழ்கிறார்கள். யோக சாதனைக்கு மிட்டாய்களும், பதனம் செய்யப்பட்ட பழங்களும் பொருத்தமானவை அல்ல.

கோபாலன் :- என் கண் கொண்டு பிரத்திட்சமாகக் கடவுளைப் பார்க்க இயலவில்லை என்றால், கடவுள் இருக்கிறார் என்று நான் எப்படி நம்பக்கூடும்?

ராமன் :— பகற்போதில் நீ நட்சத்திரங்களைப் பார்க்கிறதில்லை; ஆனால் அவை இருக்கத்தான் செய்கின்றன. மப்பு மந்தாரமான தினத்தில், ஆகாயத்திலே, மேகத்தால் மறைக்கப்பட்டிருக்கும் சூரியனைப் பார்க்க இயலாவிட்டாலும், அது இருக்கத்தான் செய்கிறது. அதுபோல, இந்த ஸ்தூலக் கண்களினாலே கடவுளைக் காண உன்னால் முடியாவிட்டாலும், கடவுள் இருக்கவே இருக்கிறார். தியானத்தின் வாயிலாக, (தியான சக்ஷு) திவ்ய தெய்வீகக் கண் அடையப் பெற்றால், நீ வரைத் தரிசிக்கலாம்.

கோபாலன் :— ராமா! கடவுள் என்பதாகக் கூறப்படுவதோ, நித்திய ஆத்மா அல்லது திவ்ய நேத்திரங்கள் அல்லது சாஸ்வதமான ஆத்மானந்தம் இவையெல்லாம் இருக்கமுடியாதென்றே நான் கருதுகிறேன். வேதாந்திகள் என்றும் பக்தர்கள் என்றும் சொல்லிக்கொள்கிறவர்களின் காட்டுமிராண்டித்தனமான கற்பனைகள் இவையெல்லாம்! வெற்றிலையும் பாக்கும் சுண்ணாம்பும் சேர்ந்து சிகப்பு நிறத்தை உண்டாக்குவது போன்று, பஞ்சபூதங்களின் சேர்க்கையினால் அமைந்தது இந்த சரீரம். இந்த உடல்தான் ஆத்துமா. இந்த உடலைத் தவிர வேறு எதுவும் கிடையாது. இந்திரிய சுகங்களுக்கு அப்பால் எதுவும் இல்லை. மாமிசத் தத்துவம் அதாவது "உண்டு குடித்து உற்சாகமாயிருத்தல்" என்ற கோட்பாடு எனக்கு மிகவும் மனமகிழ்ச்சி தருகிறது. இவ்வுடலை வைத்துக்கொண்டு இன்ப நுகர்வுப் பொருள்களின் மூலம் சாத்தியப்படுகிற அளவு இன்ப சுகங்களை நாம் பிரயாசையோடு பெற்று அனுபவிக்க வேண்டும். தவங்கள் பயிலுவதோ, இச்சை அடக்கத்தைச் சாதிப்பதோ செய்வதிலே யாதொரு பயனும் இல்லை. இந்திரியங்களைத் தாறுமாறாக ஓடவிடவேண்டும் அல்லது இன்ப நுகர்வுப்

பொருள்களோடு தாராளமாக விளையாட அனுமதிக்க வேண்டும். இதுதான் ஞானம். உபவாசமிருத்தல், மௌனம் சாதித்தல் பிரம்மச்சரியத்தை மேற்கொள்ளல், தியானம் புரிதல் இவை யாவும் அஞ்ஞான மனிதனுடைய முட்டாள்தனமான செய்கைகள்.

ராமன் :- இவ்வுலகப் பொருள்கள் யாவும் நிலையற்றவை. நமது புலன்களையெல்லாம் அவை சிதற அடித்துப் பலத்தைப் பலிகொள்கின்றன. நீண்ட வாழ்க்கைகூட குறுகியதே. செல்வத்தாலோ, பிள்ளைகளாலோ, மனைவியாலோ எந்த ஒரு மனிதனையும் சந்தோஷமடையச் செய்ய இயலாது. வயோதிகக் காலத்தில் மனிதன் வருந்தி அழுகிறான். செல்வத்தை இழக்கிறபோதும், தன் மனைவியோ மகனோ இறந்தபோதும் தீராத நோயால் பீடிக்கப்படும்போதும் அவன் கவலைக் கடலில் அழுந்தி அல்லல்படுகிறான். யம தர்மராஜா வழங்கிய உலோகாயத வெகுமதிகளை நசிகேதஸ் என்பவர் விரும்பி வாங்கிக்கொள்ளவில்லை. அவர் நித்திய ஆத்துமாவின் நித்தியானந்தத்தைப் பெறுவதையே வற்புறுத்தினார். யமதர்மராஜாவின் போதனைகளாலே அவர் நித்தியானந்த சுகத்தைக் கைவரப் பெற்றார். காமாந்தகாரமான அஞ்ஞானி நீ. பகுத்தறிவோ வைராக்கியமோ உனக்கு இல்லை. உலகாயதமெனும் கடலில் நீ மூழ்கிவிட்டாய். இந்த உலகப் பொருள்களைப் பற்றித் தொங்குவதற்குக் காரணம் இதுதான். உனது மனோநிலைமை உண்மையில் வருந்தத்தக்கது. உண்மையில் உனக்காக நான் வருந்துகிறேன். ஆண்டவன் உனக்கு நல்லறிவும் விசுத்த புத்தியும் அருள் புரிவாராக. இப்போது உனக்கு விபரீத புத்தி உள்ளது. மேகத்தால் மூடப்பட்டது போன்ற அறிவு உனக்கு இருக்கிறதால், உலகாயத வெறியின் பிடிப்பில் அகப்பட்டுத் திரிகிறாய்.

பரத்தைப் பற்றிய பேருண்மைத் தத்துவம் தெளிவுபட உன்னுல் உணரப்படமாட்டாது.

கோபாலன் :- ஓ, ராமா! இயற்கைதான் யாவையும் செய்கிறது. கடவுள் இருக்கிருர் என்பதை நாம் ஏன் ஒப்புக்கொள்ளவேண்டும்? இயற்கை வளம் தருகிறது. எல்லாம் இயற்கை மயம். ஆண்டவனே ஈஸ்வரனே இல்லாமல் உலகம் தானே போய்க்கொண்டிருக்கும்; எதையும் இயற்கை சமாளிக்கவல்லது.

ராமன் :- இயற்கை ஸ்வதந்திரமாயில்லை. இறைவனிடம் பணிபுரியும் பெண்தான் இயற்கை. இறைவனுடைய சக்திதான் இயற்கை. அது மாயா சக்தி. குடம் செய்கிறவனுக்குக் களிமண் எப்படியோ, அப்படித்தான் இயற்கை இறைவனுக்கு. இயற்கை அல்லது பிரகிருதியை இறைவன் உற்று நோக்குகிருன். அவர்தான் மூலப்பரம்பொருள். அவர் பிரகிருதியை இயக்குகிருர். நெருப்பினின்று சூட்டை எங்ஙனம் பிரிக்கமுடியாதோ, அங்ஙனம் இறைவனிடமிருந்து இயற்கையைப் பிரிக்க இயலாது. எரியும் சக்தி நெருப்புக்கு ஸ்வபாவம்; அதுபோல, இறைவனுக்கு ஸ்வபாவமாய் அமைந்திருப்பது இயற்கை.

கோபாலன் :- உன்னுடைய இறைவனுடைய முக்கிய இலக்ஷணங்கள் யாவை?

ராமன்:- ஆண்டவன் சர்வசக்திமான்; சர்வக்ஞன் (எல்லாவற்றையும் அறிபவர்), சர்வவியாபி (எங்கும் நிறைந்தவர்), சர்வதயாபரன்.

கோபாலன் :- இரு பக்கமுள்ள ஓர் காகிதத்தை ஒரே பக்கமாய்ச் செய்யக்கூடுமா? தன் தோள்களினுல் ஒருவனைக் குதிக்கப் பண்ணுவாரா? மேல்நோக்கி

எரிகிற நெருப்பைக் கீழ்நோக்கி எரியச் செய்வாரா? சூரியனைக் குளிர்ச்சி தருமாறு செய்வாரா? மலடி வயிற்று மகனை ஏழு பிள்ளைகளுக்குத் தகப்பனாக அவர் ஆக்குவாரா? இக்காரியங்களைச் செய்ய இயல வில்லையென்றால், அவர் கடவுள் அல்ல.

ராமன் :- உனக்கு விபரீத புத்தியிருக்கிறதென்று ஏற்கனவே நான் சொல்லியிருக்கிறேன். இக் காரணத் தினால்தான், ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதவை யும் உபயோகமற்றவையுமான கேள்விகளை நீ கேட்கி றாய். ஆத்மீய உள்ளம் படைத்தவன் ஒருபோதும் வீண் வார்த்தை எதையும் பேசமாட்டான். நீ உன் வாழ்க்கையையும், காலத்தையும், சக்தியையும் விரயப் படுத்துகிறாய். கடவுள் சர்வசக்திமான். அவர் எக் காரியங்களையும் கண்மூடித் திறப்பதற்குள் ஆற்றவோ மாற்றவோ சக்தி வாய்ந்தவர். அவருடைய திருவரு ளால் ஊமை சாதுர்யமாய்ப் பேசுவான். நொண்டி மலையின் மீதேறுவான். பக்தி சிரத்தையை விருத்தி செய்வாயாக. இறைவனுடைய திருப்பணிகளிலே நேரடியாக ஈடுபடு. மானிட ஜன்மம் கிடைத்தல் என் பது மிகவும் கடினம். ஆகையால், இந்த ஜன்மத்தி லேயே சாக்ஷாத்காரம் பெறுவதற்கு உன்னால் இயன்ற வரை முயற்சி செய். உன் கேள்விகள் யாவும் மூடத் தனமாயும் பொருளற்றவையாயும் உள்ளன. “காக்கைக்கு எத்தனை பற்கள்? யானை ஏன் முட்டை யிடுகிறதில்லை?” இதுபோன்ற கேள்விகளைக் கேட் கும் முட்டாள்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களில் நீயும் ஒருவன். அறிவாளியாக ஆகுக. பகுத்தறியக் கற்றுக்கொள். சச்சரவு செய்து வாதாடாதே. இதயத் தில் கருணையை வளர்ப்பாயாக. இதயத்தைத் தூய்மை யாயும் மிருதுவாயும் அன்புடன் கூடியதாயும் வைத்துக் கொள்.

கோபாலன் :- ஓ, ராமா! கடவுள் பரம கருணை வாய்ந்தவர் என்று நீ கூறுகிருய் "அவர் மிகுந்த அநியாயம் செய்கிருர். சிலரை மிகவும் பணக்காரர்களாகவும், சிலரை ஏழைகளாகவும், பின்னும் சிலரை ஜனனமாகும்போதே ஆரோக்கியமுள்ளவராயும் மற்றும் சிலரை வியாதியுள்ளவராயும் சிலரைக் குரூபிகளாயும் உற்பத்தி செய்கிருர். ஆகையால் கடவுள் மிக்க கொடியவர்" என்று நான் கூறுகிறேன்.

ராமன் :- கடவுள் முற்றிலும் நியாயமுள்ளவர். அவர் மௌனச் சாட்சியாயிருக்கிருர். குறிப்பிட்ட சட்ட திட்டங்களுக்கு இணங்க இவ்வுலகம் நடைபெறுகிறது. ஓர் ஒழுங்கு உண்டு. புண்ணியம் அதனுடைய வெகுமதியைக் கொண்டுவருகிறது; பாவமோ அதன் தண்டனையை வழங்குகிறது. இறைவன் எந்த ஒரு நபரையும் தண்டிக்கவோ பரிசளிக்கவோ கிடையாது. தான் செய்த செய்கைகளுக்குத் தக்கவாறு பலாபலன்களை மனிதன் அறுவடை செய்கிருன். எப்படி அவன் விதைக்கிருனே அப்படி அவன் அறுவடை செய்கிருன். காரண காரியமெனும் சட்டம் இயங்குகிறது சட்டம் தயவு தாக்ஷண்யம் அற்றது.

கோபாலன் :- இவ்வுலகைச் சர்வேஸ்வரர் ஏன் சிருஷ்டித்தார்? எல்லா ஆசைகளும் தீர்ந்த நிலைக்குப் பூர்ண காமம் எனப் பெயர். இறைவன் பூர்ண காமனுயிருக்கையிலே, அவர் உள்ளத்திலே இவ்வுலகைச் சிருஷ்டிக்கவேண்டுமென்ற ஆசை எங்ஙனம் எழுந்தது?

ராமன் :- கடவுள் இவ்வுலகை ஏன் சிருஷ்டித்தார்? கர்மம் எப்போது ஆரம்பமாயிற்று? அஞ்ஞானம் என்பதே ஏன் இருத்தல் வேண்டும்? மனிதன் தன் முதலாவது ஜன்மத்தை எப்போது எடுத்தான்? சச்சி

தானந்த ஸ்வபாவமாயுள்ள ஆத்மாவிலே அஞ்ஞானம் எப்படி ஐயா, குடி புகுந்தது? புருஷார்த்தம், பிராரப்தம் இவற்றுள் எது அதிக சக்தி வாய்ந்தது? இவை போன்ற இன்னும் பல வினுக்கள். சில நபர்கள் சந்தேகங்களைக் கற்பித்துக் கொள்கிருர்கள்; மேற்கண்ட வாக்குவாதத்திற்குரிய கேள்விகளைக்கேட்டுக் குழப்புவதில் சந்தோஷப்படுகிருர்கள். அறிவு சம்பந்தமான ஓர் வகைப் பொழுதுபோக்காகவும், விதண்டாவாதமாகப் பேசிக் களிப்படையவேண்டுமென்றும் கருதி இத்தகைய கேள்விகளைக் கேட்கிருர்கள். இத்தகைய கேள்விகள் ஆத்மீய நெறியிலே எவ்விதத்திலும் அவர்கள் முன்னேறத் துணைபுரிவதில்லை. இதன் பயன் வெறும் சொற்போர் ஆகும்.

சுருக்கமான வழியை விட்டுச் சுற்றுப் பாதையில் செல்லுவதுபோல் பிரயோஜனமில்லாததாகும் ஆதிகாலந் தொட்டே எழுந்த பிரச்சனைகள் இவை. சொற்கள் வரம்பு உள்ளவை. பாஷை பூர்ணமில்லாதது. இடையருத நீண்டகால நிதித்தியாஸனம் மூலமாய் துரித பூமி அல்லது யோகாருட நிலையை அடையப் பெற்றவனுய் மூன்று அவஸ்தைகளையும் மூன்று குணங்களையும் கடந்து அப்பால் போய்த் தனது ஸ்வய ஸொரூபத்திலே நிலைத்து நிற்பானுகில் அவனுல் இவற்றிற்கெல்லாம் ஓர் தீர்வு காண முடியும். காலம், இடம், காரணம் இவற்றிற்குக் கட்டுப்பட்ட அற்பத்தனமான புத்தியால் அப்பாலுக்கு அப்பாலாயுள்ள ஓர் அகண்டாகாரப் பிரச்சனையிலே எட்டிப்பார்க்க இயலாது. ஆத்மஞானம் உங்களுக்குச் சித்தியான பின் இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடைகளைப் பெறலாம். சந்தேகங்கள் யாவும் அடிபட்டுப்போகும். தூய்மையான ஸகஜ அவஸ்தை அல்லது பிரஹ்ம ஸ்திதி அடைந்து விட்டால், மூன்று முடிச்சுகள் அவிழ்ந்து உடைபட்டுப்

போம். இத்தகைய சந்தேகங்களினுல் குழப்பப்படும் மக்கள் பொதுவாக மூளையைக் குடைந்து குழப்பிக் கொள்வதன்றி வாழ்வை வீணுளாய்ச் சிதற அடிக்கிருர்கள். சாதகர்களை வஞ்சித்துத் தெய்வீகத் தியான நெறியைத் தவறவிடச் செய்வதற்கு மனமானது கையாளும் தந்திரம் ஆகும் இது. எவை விரும்பத் தக்கவை? தீவிரமான சாதனையும், அத்யந்த வைராக்யமும் வலிமை படைத்த முமுக்ஷுத்துவமும் ஆதாரம் வாய்ந்த பகுத்தறிவுமே தேவை.

கோபாலன் :- சர்வ தயாபரனுக இறைவன் இருப்பானுனல், கருணைக் கடலாக இருப்பானுனல் இவ்வுலகத்தில் ஏன் ஐயா துக்கமும் வியாதியும் இருக்க வேண்டும்?

ராமன் :- துக்கம்தான் இந்த உலகில் மிகச் சிறந்த ஒரே பொருள் ஆகும். அது கண்ணைத் திறக்கிற வஸ்து. அது மறைமுகமான ஆசீர்வாதம். உன் இதயத்திலே அது தயாளத்தை உண்டாக்குகிறது. உன் உள்ளத்தை இறைவன்பால் திருப்புகிறது. அது மனோ சக்தியை அல்லது சகிக்கும் திறமையை அபிவிருத்தி செய்கிறது. மாயையின் பிடிப்பிலிருந்து அல்லது பராதீன ஜடத்தினின்று தப்பித்துக்கொள்ள வழி கண்டு பிடிக்க வற்புறுத்துகிறது.

கோபாலன் :- இவ்வுலகில் கேடு ஏன் இருக்க வேண்டும்? தூய்மையான ஆனந்தம் மாத்திரம் கொண்ட உலகம் ஒன்றைக் கடவுளால் சிருஷ்டிக்க முடியாதா? இன்பமும் துன்பமும் ஏன் கலந்துறவாட வேண்டும்? இது கடவுளுடைய சர்வசக்தித் தன்மைக்கு முரண்பாடாக இல்லையா?

ராமன் :- இப் பிரபஞ்சமானது நன்மை தீமை கலந்த ஸ்தலம். இங்கே தூய்மையான கலப்பில்லாத

ஆனந்தத்தை நீ எதிர்பார்க்க முடியாது. உன்னுடைய ஆத்மாவின் ஆழத்திலோ பிரஹ்மனிலோ தூய்மை யான பேரானந்தத்தை நீ காணலாம். நன்மையும் தீமையும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்களாகும். நன்மையைப் பெருமைப் படுத்தவே தீமை இருந்து வருகிறது. ஒரு தடவை தீமையானது எதுவோ அதுவே மற்ற சமயங்களில் நன்மையாக அமையும். ஒருவர்க்குத் தீமையானது மற்றவர்க்கு நன்மையாகும். படுபோக்கிரியாக இன்றிருக்கிறவன் மகாமுனிவனுக நாளை ஆய்விடுகிருன் அவனை ஒரு முனிவரிடம் தொடர்புகொள்ளச் செய்தால், அவன் உயர்தரமான மகாத்மாவாக ஆகிருன். ரத்திஞகர், ஜகை, மாதை எனும் போக்கிரிகளின் வரலாறுகளை நீ படிக்கவில்லையா? மகாத்மாக்களின் நட்பைப் பெற்றவுடனே அவர்கள் மகத்தான மகான்களாக மாறிவிட்டார்கள். மனித சரீரமானது பாப புண்ணியச் செயல்களின் விளைவே. ஆகையால், அவன் தனது பாப புண்ணியச் செயல் களின் பலன்களை அதாவது இன்பத்தையும் துன்பத் தையும் அறுவடை செய்தாகவேண்டும். அஞ் ஞானத்தை அழித்துவிடு. தத்துவ சாஸ்திரத்தை உணர்ந்து ஞானமடைக. இப்போது அதிக காலம் போய்விட்டது; ஆகையால் உடனே தத்துவத்தை உணர்ந்துகொள்வாயாக.

**கோபாலன் :-** ஒ, ராமா! உனக்கு மிகுந்த நன்றி பாராட்டுகிறேன். நிரம்பவும் சக்தி வாய்ந்து மனத் தில் பதியும்படியாகச் சொல்லப்பட்ட உனது போதனை யாலே, உன் பக்கமாக என் மனம் சிறிது சாய்ந்திருக் கிறது. கடவுள் இருக்கிருர் என்பதற்குச் சற்று பல மான அத்தாட்சிகளைக் காட்டு. ஏதோ மகோன்னத மான அறிவு அல்லது சக்தி இப் பிரபஞ்சத்தை ஆட்சி

செய்துகொண்டிருக்கிறதென்று நம்பும்படியாகச் செய்திருக்கிறாய்.

ராமன் :- கடவுள், பிரஹ்மன் ஸ்வதசித்தா அதாவது சுயமாக நிரூபிக்கப்படுபவர். நிரூபிக்கும் செயலுக்கு அடிப்படை ஆத்மா. ஆகையால், தன்னை நிரூபிக்கும் செயலுக்கு முன்னாலேயே அது தெளிவாகிறது. ஆனதால், இதை மறுக்க முடியாது. பிரஹ்மன் இருப்பதை மறுக்கும்போது நீ உன் சொந்த இருப்பையே மறுத்துக் கொள்கிறாய். அதாவது யுக்திக்கு ஒவ்வாததாகிறது. முன் எண்ணங்கள், நிரூபிக்கும் செயல்கள், கோட்பாடுகள் அத்தனைக்கும் மூலாதாரமான அடிப்படை பிரஹ்மன்.

கோபாலன் :- இக் குறிப்பை நான் நன்கு புரிந்து கொண்டேன். ஆத்மா நிரூபிக்கப்பட முடியாதது என்பது சந்தேகமற்ற விஷயம். ஆனால், சாஸ்திர ஞானமில்லாத சில விஷயங்களிலிருந்து கடவுள் இருப்பை அனுமானிக்கச் சாத்தியமாகிறது. அத்தகைய விஷயங்களை எனக்கு எடுத்துச்சொல்லு தயவுசெய்து. பின்பு, எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்படும்.

ராமன் :- ஒவ்வொருவனுக்கும் ஆத்மா உள்ளது என்ற காரணத்தினால், பிரஹ்மன் உள்ளான் என்பது புலனாகிறது; ஏனெனில் ஒவ்வொருவனும் ஆத்மாவின் இருப்பை உணர்ந்தே இருக்கிறான். ஒவ்வொருவனிடமும் "நான் இருக்கிறேன்" என்ற ஸ்வபாவமான உணர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. மனிதன் ஒரு போதும் "நான் இல்லை" என்று எண்ணுவதில்லை. எல்லோரும் எதன் இருப்பை அறிகிறார்களோ, அப்பொருள்தான் ஆத்மா. இந்த ஆத்மாவே பிரஹ்மன்.

**கோபாலன் :-** நன்ருய்ச் சொன்ருய். இதை நன்கு தெரிந்து கொண்டேன். வெகு நேர்த்தியாக உன் போதனை எனக்குப் புரிகிறது. இந்தத் துறையில் மேலும் உபதேசம் செய்வாயாக.

**ராமன் :-** கண்களை மூடிக்கொண்டு, ஓர் கண நேரத்திலே நீ இறந்திருக்கிறதாகக் கற்பனை பண்ணு.

**கோபாலன் :-** சரி. இப்போது கண்களை மூடிக் கொண்டேன். இறந்திருக்கிறதாகக் கற்பனை பண்ணு கிறேன்.

**ராமன் :-** இப்போது என்ன பார்க்கிருய் ?

**கோபாலன் :-** எனது இறந்த உடல் தரையில் பிணமாகக் கிடக்கிறதாயும், அதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறதாயும் நான் கற்பனை பண்ணுகிறேன்.

**ராமன் :-** உன் அழிவைப்பற்றி நீ ஒருபோதும் கற்பனை பண்ண இயலாது. ஸ்தூலதேகம் எறியப்பட்ட பின்னர், நீ இருக்கவில்லை என்று ஒருபோதும் கருதாமலிருக்க இயலாது இது மாத்திரமே தெளிவாக நிருபிக்கிறது — நீ எப்போதும் (சாட்சி திருஷ்டா) சாட்சியாய்க் காண்கிற கர்த்தவாயிருக்கிருய் என்று.

**கோபாலன் :-** இதுகூட ஓர் அளவு அறிவுறுத்து கிறது. மற்றும் சில அநுபவ விளக்கங்களை எடுத்துச் சொல்லுவாயாக.

**ராமன் :-** இதோ கேள். மிகுந்த அநுபவத்திற் கண்ட உண்மை. சில சமயங்களிலே, நீ இறந்து விட்டதாயும், உன் உற்ருர் கூடி அழுதுகொண்டிருக் கிறதாயும் கனவு காண்கிருய். அச் சொப்பன மரண அவஸ்தையில் (நிலையில்) கூட, அவர்களைப் பார்க்க

வும் அழுதுகொண்டிருக்கிறதைக் கேட்கவும் செய்கிருய். (கனவில்) தோற்றமளிக்கும் மரணத்திற்குப் பிறகுகூட, உயிர் நிஜமாகவே நிலைக்கிறதென்று இந்த அநுபவம் தெளிவாக வலியுறுத்துகிறது. ஆத்மாவிற்கு இயல்பாயமைந்த சுபாவம் அமரத்துவமே (சிரஞ்சீவித்துவம்) என்பதை இது மீண்டும் நிரூபிக்கிறது. ஸ்தூல கோசம் (கூடு) எறியப்பட்ட பிற்பாடுகூட நீ இருக்கிருய். அந்த இருக்கும் தன்மையே பிரஹ்மன், ஆத்மா.

**கோபாலன் :–** ராமா, உண்மையில் இது அதிசயிக்கத் தக்கதோர் விளக்கம். இறைவன் அல்லது ஆத்மா இருக்கிறதென்பதைப்பற்றிய எனது ஐயப்பாடுகள் வர வர நலிவுறுகின்றன. தினசரி வாழ்க்கையிலிருந்து உதாரணங்களைத் தயவுசெய்து எடுத்துக்கூறு.

**ராமன் :–** வீட்டின் மூன்ருவது மாடியிலிருந்து மாது ஒருத்தி தவறி வீழ்ந்தாள். கீழே கூர்மையான செங்குத்தான கற்கள் குவிந்து கிடந்தன. மிகுந்த பயங்கரமான சேதங்களை அவள் அடைந்து உயிர் விட்டிருப்பாள். ஆனுல், அதிசயமாக அவள் உயிர் தப்பிப் பிழைத்தாள். "நான் கண்ணுக்குத் தோன்ருத மிருதுவான கையணைப்பிலே இருப்பதைப் பிரத்தியட்சமாக உணர்ந்தேன். ஏதோ மர்மமான சக்தி ஒன்று என்னைக் காப்பாற்றியுள்ளது" என்று அவள் தன்னிலையை விளக்கினுள் தினசரி வாழ்விலே இது போன்ற உதாரணங்கள் அபூர்வம் அல்ல.

**கோபாலன் :–** இன்னெரு உதாரணம் காதில் போடு.

**ராமன் :–** சாகப்போகும் சக்கரவர்த்தியை உலகத்திலே சிறந்த மருத்துவர் கூட சாகாமல் பிழைக்க

வைக்கத் தவறுகிறார் என்பதை நீ கண்டிருக்கிறாய். மருத்துவ நிபுணர்களால் கைவிடப்பெற்ற நோயாளிகளின் தீராத நோய்கள் அதிமர்மமாய் குணமாகிவிட்ட செய்திகள் பலவற்றையும் நீ கேள்விப்பட்டிருப்பாய். சிகிச்சைக்குள்ளேயே தெய்வீகக் கரம் ஒன்று இருப்பது தெளிவான அத்தாட்சியாகும்.

கோபாலன் :- கர்மா கோட்பாட்டின் மூலம் இதை விளக்க உன்னால் முடியுமா ?

ராமன் :- சிலர் எண்பது வயதில் சாகிறார்கள். கருவிலேயே சிசுக்கள் அழிகின்றன. இருபது வயது வாலிபர்கள் இறக்கின்றார்கள். நாற்பது வயதுள்ளோர் நமன் உலகம் நாடுகின்றார்கள் இந்த வித்தியாசத்திற்குக் காரணம் யாது ? எல்லோருடைய ஆயுள் தன்னை நிர்ணயித்தவர் யார் ? இதனால் கர்மா கோட்பாடு உண்டு என்பதும் ஜீவர்கள் செய்த கர்மாக்களின் பலாபலன்களைப் பகிர்ந்து கொடுக்கும் நீதிபதியாயும், கர்மாக்களின் இயல்பை அனுசரித்து அதற்கேற்ப ஜீவர்களுக்கு ஆயுள் நிர்ணயம் செய்கிறவராயும், கர்மாவுக்கும் அதன் பலனுக்கும் உள்ள திட்டமான சம்பந்தத்தை அறிகிறவராயுமுள்ள சர்வஞ்ஞர் ஒருவர் உண்டு என்பதும் இதனால் தெளிவாக நிருபனம் ஆகின்றன. கர்மா ஜடமாயிருப்பதால், அதன் பலன்களுக்கேற்றவாறு ஒழுக நிச்சயமாக இயலாது கர்மாவினால்.

கோபாலன் :- ஸ்தூல சரீரம் இறைவனின் கோவில் எனக் கருதப்படுகிறது. கடவுள் இருக்கிறார் என்பதை இச் சரீரத்தின் விஷயங்களிலிருந்தே நிருபிப்பாயாக.

ராமன் :- (சுவரயணற்ற) ஜடமான இரயில்வே வண்டியின் யந்திரம், சைதன்யம் (அறிவு) உள்ள யந்திர ஓட்டியின்றி நகர முடியாது. அதுபோல ஜடமான இந்தச் சரீரயந்திரம் அறிவுபடைத்த சாரதியான கடவுள், ஈஸ்வரர் இல்லாமல் நகர இயலாது. உடல் இருக்கிற தன்மையிலிருந்து, சரீரயந்திரத்தில் மறைந்துள்ள சாரதியின் இருப்பை உன்னால் ஊகிக்க முடியும். நன்கு கவனிப்பாயாக! சிருஷ்டி ஒவ்வொரு அங்குலத்திலும் சைதன்யம் (அறிவு) ததும்பிக் காட்சியளிக்கிறது இரத்த நாளங்களில் இரத்தம் பாய்ச்சுபவர் யார்? ஆகாரத்தை அன்னரசமாக்கி அதை சிவப்பு வர்ணமான இரத்தமாக மாற்றுபவர் யார்? வயிற்றில் உணவை ஜீரணிக்கச்செய்து சக்கையான மலத்தை அபானத் துவாரத்தின் வழியே வெளிப்படுத்துபவர் யார்? நுண்ணிய நரம்புகளால் ஆக்கப்பெற்ற கண்களிலே தூசு விழாமல் தடுத்துக் காப்பாற்ற இமைகளை மூடவும் திறக்கவும் செய்பவர் யார்? உடலிலுள்ள மாமிசக் கோளங்களுக்கும் ஜீவாணுக்களுக்கும் சுக்கிலம், பால், பித்தநீர், உமிழ்நீர், ஜடராக்கினி ஆகியவற்றைச் சுரக்கும்படியான அறிவும் ஆற்றலும் அளித்தவர் யார்? விந்துவைக் கருப்பையிலே கருமுட்டையோடு இணைத்து அப்பால் சிசுவுருவமாகப் பரிணமிகச்செய்வதற்காக அந்த விந்துவுக்கு அறிவும் ஆற்றலும் அளித்தவர் யார்? ஓர் மயிரிழையில் பத்தாயிரம் பங்கில் ஒரு பங்கு அளவுள்ள அவ்வளவு நுட்பப் பொருளான ஜீவன் எங்கிருந்துதான் சக்தி பெற்று, படிப்படியாக நிறமும், பல்வேறு அங்கங்களும் அதனதன் பெற்றோர்களின் வடிவமும் கொண்டு வளர்ச்சியடைகிறது? தாயின் கருப்பையில் உடல் வளருவதற்கானசக்தி எப்படி வந்தமைகிறது? குழந்தை பிறப்பதற்கு முன் தாயின் மார்பிலே பால் பெருகஏற்பாடு செய்பவர்யார்?

மனித சரீரயந்திரம் எவ்வளவு அதிசயம் உள்ளது? இயற்கையின் செயல் முறையிலே அங்கங்கள் யாவும் எவ்வளவு ஒழுங்காகவும் ஒத்துழைப்புடன் இயங்கு கின்றன! பகவத் கீதையில், உடலுக்கு ஒன்பது வாசல் கொண்ட நகரம் எனப் பொருள் தரும்படி "நவத்வாரபுரி" என்ற பெயர் அளிக்கப்பட்டிருக் கிறது. கோடைகாலத்தில், உடலின் மேல் தோல் ரத்தத்திலுள்ள அழுக்குகளையெல்லாம் வெளியேற்று வதற்கு வெகு தீவிரமாய் வேலை செய்கிறது. மழைக் காலத்தில் அதிகமாய் வேலை செய்த மூத்திரக் கோளங் களுக்கு ஓய்வு தருகிறது. உடலின் உள்ளுறுப்புகள் உடல் வளர்ச்சிக்கான செயலில் ஈடுபட்டு உழைக்கின் றன. அவை நேர்மை மாருமல் இயங்குகின்றன.

முள்ளந்தண்டின் மூலமாய் மூளைக்கு அனுப்பப் படும் உணர்வுகள் மூளையின் ஆதிக்கத்திலே இயங்கு கின்றன. இந்த நரம்பு மண்டல வேலையின் விசித் திரமே விசித்திரம்! உடம்பிற்குள்ளே, பிரம்மாண்டமான மின்கலம் (Battery), விசைப் பொத்தான்கள், கம்பிகள் ஆகியவை இடம்பெற்றுள்ளன. இவற்றை இயக்குநர் அந்தர்யாமின் (உள்ளே அரசர், இறைவன்); இவர் எல்லாவற்றையும் அடக்கி ஆட்சி புரிவதோடு மேற் பார்வையும் செய்கிருர். இவர் மேலாளர், அனுமதி யளிப்பவர் ஆவார். மூளையின் நேரடியான ஆதிக்கத் திலே இயங்குகிற இருதயமும் நுரையீரல்களும் எவ் வளவு ஆச்சரியமாய் விளங்குகின்றன. உயிர் வாழ் வதற்கு மூளை, இருதயம், நுரையீரல்கள் இம்மூன்றும் இன்றியமையாத அங்கங்கள் ஆகும். பிரபல விஞ் ஞானி எவராலாவது இத்தகைய அங்கங்களையோ, ஜீவாணுக்களையோ, நரம்புகளையோ மேன்மை பாராட்டுகிற தமது ரஸாயன ஆராய்ச்சிச் சாலையில் தமது யுக்தி கொண்டு உற்பத்தி செய்ய இயலுமா?

ஜீரண இயக்கம், இரத்த ஓட்ட முறை, நரம்பு மண்டல ஏற்பாடு, மேல்தோல் சம்பந்தப்பட்ட இயக்கம் ஆகியவையெல்லாம் எவ்வளவு சுறுசுறுப்பாய் ஓய்வு ஒழிச்சலின்றி செயலாற்றுகின்றன! கண்பார்வை கேந்திரம், ஆதிக்கக் கேந்திரம், வாசனை அறிய உதவும் கேந்திரம் போன்ற மூளையிலுள்ள இதர கேந்திரங்கள் எவ்வளவு அழகாகத் தத்தம் அலுவல்களைச் செய்கின்றன? நுட்பமான இந்த மானிட யந்திரத்தின் இயக்கத்தையும் அமைப்பையும் பற்றி ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினால், ஒருவனுக்கு திகைப்பும் வியப்பும் ஏற்படும். வெறும் அணுக்கள் தற்செயலாய்ச் சேர்ந்து உருவானதென இப்பெரும் வியப்பிற்குரிய இயந்திரத்தைப் பற்றி எண்ணுவது எவ்வளவு இழிவாயும் கேலித்தனமாயும் இருக்கிறது! பங்களாக்களையும் அரண்மனைகளையும் கட்டுகிற சாதாரண நிர்மாணச் சிற்பிகளைக்காட்டிலும் எல்லையற்ற திறமையும், புத்திசாலித்தனமும், சக்தியும்படைத்த யாரோ ஒரு சிற்பியால் இது நிச்சயமாகச் சேர்த்து உருவாக்கப்பட்டிருக்கிறது. அச்சிற்பியே கடவுள், ஈஸ்வரர், சிருஷ்டிகர்த்தா. எப்பெயராலாவது அவரை அழையுங்கள்-இதனால் பெரிதும் வித்தியாசமில்லை.

கோபாலன் :- உள்ளமும் அதன் செயலாற்றல்களையும் பற்றிக் கவனமாய்ப் படிப்பதாலே கடவுள் இருக்கிறார் என்பதை நிரூபிக்கும் பேருண்மைகளை எடுத்துக் கூறுவாயாக.

ராமன் :- ஞாபகப்படுத்திக் கொள்ளல், ஆள் அடையாளம் தெரிந்துகொள்ளல் முதலியவை இடம், காலம், காரணம் ஆகிய மனோ பதிவுகளைப் பொறுத்துள்ளன. சென்ற காலம், நிகழ்காலம் இவைகளுக்குச் சம்பந்தமுள்ள ஒரே தொடர்பான கோட்பாடு இருந்

தாலொழிய அல்லது ஒவ்வொன்றையும் அறிகின்ற மாற்றுறாத ஆத்மா இருந்தாலொழிய ஞாபகப் படுத்திக் கொள்ளல் அடையாளம் அறிதல் ஆகிய தத்துவங்களுக்கு மூலகாரணத்தைக் கூற நம்மால் இயலாது. ஆத்மாவானது கருத்துக்களுக்கும் உயர் வானது கருத்துக்களினின்று மாறுபட்டது. ஏனெனில், கருத்துக்களுக்கு அவற்றை ஒன்றாய்ப் பிணைக்கின்ற அடிப்படைக் கோட்பாடு ஒன்று தேவைப்படுகின்றது. ஆனால் ஆத்மாவோ அடிப்படை கோட்பாடு ஆகிறது. இதனால்தான் கருத்துக்களை அறிய ஹேதுவாகிறது.

மனம் என்பது உணர்ச்சிக்கும் எண்ணத்துக்கும் உரிய (உறுப்பு) கரணம். இந்த ஆயுதத்தை உப யோகிக்கிற ஒருவரின் ஆதிக்கத்திலே இது இருக்க வேண்டும். ஜீவன் அல்லது மானுஷ ஆத்மா மனத் தின் மேலதிகாரி அல்ல. ஏனெனில், சாதாரண மக்கள் இம்மனத்தினாலே ஈவிரக்கமின்றி அலைக்கழிக்கப்படு கின்றனர். ஆகையால், அதைத் தவிர வேறு பரம் பொருள் ஒன்று மனத்திற்கு மேலதிகாரியாக இருந் தாக வேண்டும். அவர்தான் அந்தர்யாமின், அந்தரங்க அரசாட்சி செய்பவரும் கட்டுப்படுத்துபவரும் ஆனவர். பின், மனத்தின் ஆச்சரியப்படத் தக்க சக்தியை உற்றுக் கவனியுங்கள். கேனோபநிஷத்தில் முதலாவது மந்திரம் "மனத்திற்கு மேலதிகாரி யார்?" என்றே தொடங்குகிறது. இங்கே கூட தெய்வீகக் கரத்தின் திருவிளையாடல் இருக்கத்தான் செய்கிறது. என் சகோதரர் மனோ விஞ்ஞானி தமது ரசாயனப்பட்டறை யில் ஒரு மனதை உற்பத்தி செய்யக்கூடுமா? மனத் தின் பல்வேறு திறமைகளைக் கவனிக்கும்போது, வியப் பும் திகைப்பும் நாம் அடைகிறோம். அந்த மனத்திற்கு எத்தனை சக்திகள் உள்ளன? பகுத்தறியும் சக்தி, கற்பனாசக்தி, தீர்மானிக்கும் சக்தி, காரணங்களைக்

கூறித் தர்க்கிக்கும் சக்தி, தாரணு (ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்) சக்தி, சிந்தனு சக்தி, ஆழ்ந்து ஆலோசிக்கு திறமை, அறியும் சக்தி முதலியவை.

கோபாலன் :- இயற்கையைக் கற்றுக்கொள்வதினுலே பகவான் இருக்கிருர் என்பதற்கு உண்மைகளை எடுத்துக் கூறுக.

ராமன் :- அடுக்குப் பாறைகளினூடே மறைந்து வசிக்கிற சிறு தவளைக்கு உணவு வழங்குபவர் யார்? வெளியே உள்ள சூழ்நிலையினுல் களங்கப்படாதவண்ணம் பழங்களுக்கு மேல் தோலைச் சுற்றியுள்ளவர் யார்? பருவகாலங்களையும் ருதுக்களையும் பாகுபடுத்தியவர் யார்? ஹிமயமலைகளிலே பனிபடர்ந்த பிரதேசங்களிலே கௌரிகுண்டம் மற்றும் இதர இடங்களில் பனிக்கட்டியின் அடியில் சுகாதார வசதியுடன் மீன்கள் வாசம் பண்ணும் வகையில் தண்ணீரைச் சூடாக்கியுள்ளவர் யார்? எரியக்கூடிய பிராணவாயு ஒரு பகுதியுடன் மந்த நிலையுள்ள கரியமிலவாயு நான்கு பகுதிகளைச் சேர்ந்தவர் யார்? காலையில் ஒழுங்காகச் சூரியன் உதிக்கிறதும் மாலையில் அஸ்தமிக்கிறதும் யாருடைய கட்டளையின் பேரில் நடந்து வருகிறது? பூமியிலிருந்து சூரியன் ஒன்பது கோடியே, இருபத்தெட்டு லட்சத்து முப்பதாயிரம் (9,28,30,000) மைல்களுக்கு அப்பால் உள்ளது இந்த உருண்டை வடிவான பூமியில் வாசம் புரிகிற அத்தனை உயிர்களுக்கும் வெளிச்சம், உஷ்ணம், சக்தி மற்றும் உத்வேகம் அளிக்கக்கூடிய சூரிய பகவான் அவ்வளவு தூரத்திலிருக்கிருரே என்பதை நினைக்க நினைக்க எவ்வளவு வியப்பாயிருக்கிறது? நாம் பார்க்கிற சூரியனைக் காட்டிலும் அதிக பெரிய அளவுள்ள சூரியன்கள் கோடிக்கணக்கில் எண்ணற்றவையாய் உள்ளன. நமக்குத் தோன்றுகிற சூரியனைக் காட்டிலும் வெகு தூரத்தில் இவைகள் இருப்பதால்,

நம் கண்ணுக்கு இவை சிறிய நட்சத்திரங்களாகப் புலப்படுகின்றன. இந்த நக்ஷத்திரங்களிலிருந்து வெளிச்சமானது பூமியை வந்தடைய அநேக லட்சம் வருஷங்கள் ஆகின்றன. ஒரு செக்கண்டுக்கு வெளிச்சம் 1,86,000 மைல்கள் வேகத்தில் வருகின்றது. இன்னும் தொலையிலுள்ள நட்சத்திரங்களிலிருந்து வெளிச்சமானது இன்னும் கூட நமது பூமிக்கு வந்தபாடில்லை எவ்வளவு மகத்தான ஆச்சரியம் இது! நக்ஷத்திரங்கள், கிரகங்கள், மற்றும் இதர வானைவீதி உலாவும் மண்டலங்கள் தத்தம் குறிப்பிட்ட பாதைகள் தவறுமல் நாளுக்குநாள், மாதத்திற்கு மாதம், வருஷத்திற்கு வருஷம் மாற்றமுடியாத நிச்சயமான சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு வானத்தில் ஓர் நியதியில் சஞ்சரிக்கின்றன. இறைவன் இந்த நியதியை ஏற்படுத்தியுள்ள கர்த்தா ஆவார். அவர் இல்லாமல் சூரியன் பிரகாசிக்காது. அவர் இல்லாமல் அக்கினி எரியாது.

காடுகளில் செழித்து வளர்ந்துள்ள மரங்களுக்கும் புஷ்பங்களுக்கும் பல்வேறு செடி புல் பூண்டுகளுக்கும் தண்ணீர் பாய்ச்சியவர் யார்? கண்களுக்குப் புலப்படாத அலுப்படையாத அந்த தோட்டக்காரன் யார்? எவ்விதமான கூலியோ பிரதிப் பிரயோஜனமோ விரும்பவில்லையே! புலிகள், சிங்கங்கள், பட்சிகள், மீன்கள், சிறு பூச்சிகள் முதலியவைகளுக்குக் காலாகாலத்தில் உணவும் போஷாக்கும் வழங்குபவர் யார்? மனித ஜன்மங்களிலே மனித ஜன்மங்கள் மாத்திரமே பிறக்கின்றன. பட்சிகளுக்கு பட்சிகளே பிறக்கின்றன. புலிகளுக்குப் புலிகளும், நாய்களுக்கு நாய்களும், குதிரைகளுக்குக் குதிரைகளும், யானைகளுக்கு யானைகளும், எறும்புகளுக்கு எறும்புகளும், கரடிகளுக்குக்

கரடிகளும், கோவேரிக் கழுதைகளுக்கு கோவேரி கழுதைகளும் இங்ஙனம் ஒவ்வொரு இனத்திலும் அவ்வவற்றின் பெற்ருேர்களைப் போன்றே சரியான வடிவாக அமைகின்றன. இது எப்படி? கடுகளவுள்ள விதை ஒன்றிலிருந்து பிரமாண்டமான ஆலவிருட்சம் தோன்றி ஆயிரக்கணக்கானவர்களுக்கு நிழல் தருகிறது. சிறிய விதையிலிருந்து ஆயிரக்கணக்கான தித்திப்புள்ள மாம்பழங்களைத் தருகிற பெரிய மாமரம் தோன்றுகிறது. இம்மரங்களைச் செழுமையாக வளரச் செய்யும் சக்தி எது? கைகால் விரல்கள், கண்கள், மூக்கு, பற்கள், காதுகள், கால்கள், தொண்டைகள் இவ்வளவோடு கூடிய மஹத்தான வடிவத்தை ஒரு துளி சுக்கிலத்திலிருந்து வெளிப்படுத்துவதற்கு ஹேதுவாக மறைந்திருக்கும் அற்புதமான சக்தி எது? ஒரு சிறு விதையிலிருந்து இலை, தழை, புஷ்பங்கள், பழங்களுடன் கூடிய பெரிய மரத்தை உண்டாக்குவதற்குக் காரணமான சக்தி எது?

கோபாலன் :- ஸ்ரீ சங்கரரின் "ஏகஸ்லோகி"யின் பொருளை விளக்கமுடியுமா?

ராமன் :- பகலில் எது வெளிச்சம் தருகிறது? சூரியன். இரவில் சூரியன் இல்லாதபோது வெளிச்சம் தருகிறது எது? சந்திரன், நட்சத்திரங்கள், விளக்குகள். சூரியனே, சந்திரனே, நட்சத்திரங்களோ, விளக்குகளோ இல்லாத போது உங்களுக்கு ஒளி தருகிறது எது? கண்கள். கண்கள் மூடப்பட்டபோது, ஒளி தருவது எது? புத்தி. புத்தியில் தெளிவு அல்லது மந்தநிலை இருப்பதைக் கண்டுபிடிக்கிறது எது? அஹம். (நான்). அந்த "அஹம்" ஒளிகளுக்கெல்லாம் ஒளி, நித்தியத்துவ (சாஸ்வதமான) ஆத்மா. ஆத்மன் அல்லது எல்லையற்ற பரம்பொருள்.

கோபாலன் :- ஆழ்ந்த தூக்கத்திலிருந்து நாம் என்ன ஊகிக்கமுடியும்? ஆழ்ந்த தூக்கத்தைப்பற்றி வேதாந்திகள் எவ்வளவோ பேசிக்கொண்டிருக்கிறுர்கள். தூக்கத்திற்கும் சமாதிக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

ராமன் :- தூக்கத்திலே புலன்களோ, பொருள்களோ, மனமோ இல்லை. எனினும், உயர்தரமான ஆனந்தத்தை நீ அனுபவிக்கிறுய். பொருள்களே இல்லாதபோது, ஆனந்தத்தை எங்கிருந்து நீ அடையப் பெற்றுய்? தூக்கத்தின்போது மனமானது பிரஹ்மாகாரத்தில் இளைப்பாறுகிறது. பிரஹ்மத்திலிருந்து இந்த ஆனந்தம் பெறப்படுகிறது. மேலும், தூக்கத்திலே வேறு எந்த மனிதர்களும் இல்லாதபோது "நான்" மாத்திரம் தங்கியிருக்கிறது. தூக்கத்திலே அவித்யா—அவ்ரித சுகத்தை நீ அனுபவிக்கிறுய்; ஆத்மாவுக்கும் உனக்கும் இடையில் ஒரு திரை உள்ளது. தூக்கத்தினின்று ஜாக்கிரதாவஸ்தைக்கு (விழிப்பு நிலைக்கு) சகஜஞானத்தினுல் நீ திரும்புவதில்லை. நீ அஞ்ஞானி. சமாதியிலோ ஆத்மாவை நீ அறிகிறுய். அங்கு திரை இல்லாதபடியால் ஆத்மாவிடமிருந்து நேரடியாக நித்தியானந்தம் அனுபவிக்கிறுய். சமாதியிலே அவித்தை அழிந்துபோகிறது.

கோபாலன் :- ஆத்மா இருக்கிறது என்பதற்கு எளிய ஆனுல் மனதில் பதியும்படியான அத்தாட்சி ஒன்று கூறுக.

ராமன் :- தினசரி வாழ்க்கையிலே "எனது தேகம்" என்றும், "எனது பிராணன்" என்றும், "எனது மனம்" என்றும், "எனது இந்திரியம்" என்றும் சொல்லிக்கொள்கிறுய். தேகம், பிராணன், மனம், இந்திரியம் இவைகளுக்கு முற்றிலும் வேருக ஆத்மா இருக்கிறதென்று இது தெளிவாகக் குறிப்பிடு

கிறது. மனமும் தேகமும் உன்னுடைய வேலைக்காரர்கள் அல்லது கருவிகள். கைக்குட்டைகள், நாற்காலிகள், கோப்பைகள் உனக்கு வெளியே இருக்கின்றன. அதுபோல, மனமும் தேகமும் உனக்கு (ஆத்மாவுக்கு) வெளியே இருக்கின்றன. நீண்டதோர் உலாவுகோலை கையில் பிடித்துக்கொள்வதுபோன்று, நீ உனது உடலைத்தாங்கிக் கொண்டிருக்கிறுய். இந்த உடலை வைத்துக்கொண்டிருக்கிறவர் நீர்; நீரே இவ்வுடலின் உரிமையாளர். உடல் என்பது உம்முடைய சொத்து அல்லது உடைமை. உடல், மனம், புலன்கள் முதலியன ஆத்மா அல்ல; ஆனுல் அவை ஆத்மாவுக்கு உரியவை.

**கோபாலன் :-** முற்றிலும் திருப்தியடைகிறேன் இப்போது. ஓ, என் அருமை ராம்! இதுவரை மிகவும் தவருன பிரமையில் இருந்தேன். அஞ்ஞானத்தில் ஆழ்ந்திருந்தேன். மதிப்பிடத்தக்க, நியாயபூர்வமான, திருப்தியூட்டவல்ல, ஆன்மீய நற்போதனைகளைக் கேட்டு மகிழ்ச்சியடைவதோடு உனக்கு நன்றி பாராட்டுகிறேன். எனது குரு நீ—இரக்ஷகரும் நீ. சிரஞ்சீவித்துவமான இந்த ஆத்மாவை அடைவதற்குரிய வழியை இப்போது தயவுசெய்து சொல்லுவாயாக.

**ராமன் :-** மனத்தைத் தூய்மைப்படுத்திக்கொள். புலன்களை அடக்குக. நான்கு சாதனங்களை விருத்தி செய்க. ஸ்ருதிகளைக் கேட்பாயாக. சிந்தனை செய், தியானி. நீ ஆத்ம-சாக்ஷாத்காரம் பெறுவாய்.

(கோபாலன் அகோரமாகத் தவம் செய்தான். தியானம் புரிந்தான். இறுதியில் வாழ்க்கையின் பேரின்பத்தைப் பெற்ருன். இப்போது ராமனைப் பார்த்துப் பேசுகிருன்)

கோபாலன் :- ஓ ராம்! எனது மதிப்பிற்குரிய குரு தேவரே! ஆயிரம் நமஸ்காரங்கள் தங்களுக்கு உரித்தாகுக. பயங்கரமான சம்ஸாரத்தினின்று தாங்கள் என்னைக் கரையேற்றிக் காப்பாற்றினீர்கள். இப்போது ஆத்மாவிலே ஆனந்தமுறுகிறேன். ஆத்மாவென்பது எனக்கு இப்போது உள்ளங்கை நெல்லிக்கனி போலாகி விட்டது. எங்கும் ஆத்மாவை மாத்திரமே தரிசிக்கிறேன். பிரஹ்மனின் மஹிமை வர்ணிக்க முடியாதது. சந்தேகங்கள், பயம், கவலைகள், துன்பங்கள், பிரமை, வேதனை முற்றிலும் மறைந்து போயின. நான் உடம்பு இல்லாதவன் — உள்ளம் இல்லாதவன். சர்வ வியாபகமான அறிவுமயமாய் நான் இருக்கிறேன். நான் ஸ்வயம் ஜ்யோதி. சிவோஹம், சிவோஹம், சிவகேவலோஹம், சுத்தோஹம். ஞானேயத்தின் தன்மையைப் பற்றி எந்த சொற்களினாலும் வர்ணிக்க முடியாது. மீண்டும் மீண்டும் தங்களுக்கு சாஷ்டாங்க நமஸ்காரங்கள் புரிகிறேன். என்னை ரக்ஷித்த குரு தேவரே! சொர்க்கலோக இன்பத்திற்கு வழிகாட்டிய மகானுபாவரே!

ராமன் :- ஓ, கோபாலா! மஹத்தான ஸாந்தியிலே இளைப்பாறுவாயாக. இப்பூமியில் எல்லாவிடங்களிலும் இப்போது சென்று இந்த மகத்தான ஞானத்தை மக்களிடையில் பரப்பி விருத்தி செய்வாயாக. சகதியான சம்ஸாரத்தினின்று உனது சகோதரர்களைத் தூக்கி நல்வழிப்படுத்து. விபரீத புத்தி கொண்ட பழைய கோபாலன் தாங்கள் அல்ல. தாங்கள் தெய்வக்கிருபை பெற்ற ஜீவன்முக்தர். தாங்கள் ஞானானந்த சரஸ்வதி என்ற புதுப் பெயரால் ஜ்வலிக்கிறீர்கள்.

ஞானானந்தா :- பூஜிக்கத்தக்க தெய்வமே தாங்கள்! தங்கள் கட்டளைகளை நிறைவேற்றுகிறேன். தங்களுக்கு வணக்கம். (அப்பால் ஞானானந்தர் வேதாந்த கீதம் ஒன்றைப் பாடுகிறார்.)

முற்றிற்று.

## ஸ்ரீ சுவாமி சிவானந்தா அருளிய தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| வாழ்விலும், ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் விலை ரூ. | 7-00 |
| மனமும் அதன் இரகசியங்களும் அதை அடக்கும் முறைகளும் ... | 7-00 |
| சுடர்விடும் கதைகள் (கலிகோ பைண்டு) | 7-00 |
| கர்மயோகம் ... ... | 7-00 |
| ஞான யோகம் ... ... | 5-00 |
| பக்தி யோகம் ... ... | 4-00 |
| ஜப யோகம் ... ... | 4-00 |
| சுவாமி சிவானந்தரின் சுய சரிதை ... | 4-00 |
| ஆத்மீகக்கதைகள் ... ... | 3-00 |
| சாதன சதுஷ்டயம் ... ... | 1-50 |
| ஒளி, சக்தி, ஞானம் ... ... | 1-00 |
| விரதங்கள், விழாக்கள் ... ... | 1-00 |
| தத்துவக்கதைகள் ... ... | 1-00 |
| தெய்வீகக்கதைகள் ... ... | 1-00 |
| அந்தகர்க்கான பகவத் கீதை ... | 0-50 |
| அன்னை கங்கை ... ... | 0-50 |
| பகவான் சிவானந்தரின் ஞான விருந்து | 0-50 |
| சேவை செய்யவே உயிர் வாழ்கிறேன் | 0-50 |

மற்றும்

| | |
|---|---|
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் ... | 2-00 |
| சுவாமி சிதானந்தர் உபன்யாசங்கள் ... | 1-00 |
| சுவாமி சிதானந்தர் அருளிய உபதேச மொழிகள் | 1-00 |
| ஞான ஒளி ஊற்று (சிதானந்தர் எழுதியது) | 4-00 |
| சர்வரோக நிவாரணி ... | 2-00 |

புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை.

ஆஸ்ரமத்திற்கு வருடத்திற்கு குறைந்தது ரூபாய் ஐந்து நன்கொடை அளிப்பவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 8-ந் தேதி குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் 32 பக்கமுள்ள தமிழ் நூல் வந்து சேரும். நீங்களும் பங்குகொள்ள வேண்டுகிறோம். நன்கொடைகளை காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம், இராசிபுரம், சேலம் ஜில்லா என்ற விலாசத்திற்கு அனுப்பி வையுங்கள்.

